# பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு
# பிரதிக்கு வெளியே...

முனைவர் தே. ஞானசேகரன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு
# பிரதிக்கு வெளியே . . .

முனைவர் தே. ஞானசேகரன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச்
சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர்: டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்)

வரிசை எண் : 10 நாள் : 06-11-2006

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Paḷḷu Ilakkiyam Maṟuvācippu<br>Piratikku Veḷiyē. . . |
| Author | : | Dr. D. Gnanasekaran<br>Associate Professor<br>Department of Tamil<br>Bharathiyar University<br>Coimbatore - 641 046 |
| General Editor | : | Dr. M. Rajendran<br>Director (Full Additional Charge)<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113.<br>Ph: 22542992 |
| Publication No. | : | 564 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2006 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x + 240 + 14 pages pictures |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 75/- (Rupees Seventy five Only) |
| Printed by | : | Pavai Printers<br>Chennai - 600 014 |
| Subject | : | Folk Literature |


அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகட்கு நிறுவனம் பொறுப்பன்று.

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்தில்' வழக்கிலும் செய்யுளிலும் வழங்கிவந்த தமிழைத் தொகுத்து இலக்கணம் தந்தார் தொல்காப்பியனார்.

நாடகவழக்கு, உலகியல்வழக்கு, பாடல்சான்ற புலனெறி வழக்கென வழக்கு மூவகை என்பதையும் முன்னோர் கூறிச் சென்றுள்ளனர்.

உலகியல் வழக்கு நிறைந்த நாடக நூலாகப் - பாடலாக - இலக்கியமாகப் பள்ளு இலக்கியம் தமிழிலக்கிய வரலாற்றில் தனிக் கவனம் பெறுகிறது.

தன்னேரிலாத் தலைவன், தலைவி எனும் மரபுகள் தகர்ந்து அதிகாரமற்றவர்களையும் கதை மாந்தர்களாகக் கொண்ட இலக்கியமாகவும் பள்ளு இலக்கியம் பெருமை பெறுகிறது. அவர்களின் வாழ்க்கைமுறை, சடங்கு, வழிபாடு போன்றவற்றின் ஆவணமாகவும் பள்ளு இலக்கியம் திகழ்கிறது.

தமிழ் ஆவணங்கள் மூலம் தமிழர்தம் வரலாறு, கலை, பண்பாடு, ஆட்சிமுறை, கல்விமுறை, மரபு அறிவியல், மருத்துவ முறைகள் போன்றவற்றை அறிஞர்கள் ஆய்ந்து வருகின்றனர். காலமாற்றங்களால் அழிந்து கொண்டு வரும் இவ் ஆவணங்களை அழிவிலிருந்து காப்பாற்றி, முறையாகத் தொகுத்துப் பாதுகாத்து எதிர்காலத்தவர்க்கு அளித்திடும் நோக்கத்தோடு **டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்கள்** இந்நிறுவனத்தில் தம் பெயரில் ஓர் அறக்கட்டளையை நிறுவியுள்ளார். அந்த அறக்கட்டளையின் பத்தாம் சொற்பொழிவாகப் **பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே . . .** எனும் தலைப்பிலான சொற்பொழிவின் அச்சுவடிவம் இந்தச் சொற்பொழிவு நாளன்றே வெளிவருகிறது.

பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை இணைப் பேராசிரியரும் சிறந்த நாட்டுப்புறவியல் அறிஞருமான முனைவர் தே.ஞானசேகரன் அவர்கள் இச் சொற்பொழிவு நூலை ஆக்கியுள்ளார்.

இதுகாறும் ஏட்டளவிலேயே கிடைத்துள்ள பள்ளு நூல்களை அவற்றின் பதிப்பாசிரியர்கள் சுவடிப்பதிப்பாகவே பதிப்பித்துள்ளார்கள். அம் மரபினின்றும் மாறி மள்ளர் எனப்பட்ட தேவேந்திரகுலத்தார் பற்றிய வாய்மொழி வழக்காறுகள் மற்றும் செப்பேட்டு ஆவணங்களைத் தொகுத்தும் மறுவாசிப்பு என்ற நிலையில் பின் நவீனத்துவப் பார்வையில் அவற்றை ஆய்ந்தும் அரியதொரு சொற்பொழிவு நூலாக இந்நூலாசிரியர் அளித்துள்ளார்.) அதன் மூலம் அறக்கட்டளை நிறுவிய நோக்கத்தையும் நிறைவேற்றியுள்ளார். இது பாராட்டுதற்குரியது.

**மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** முதன்முறை தமிழக முதல்வராக விளங்கிய காலத்தில் இந்நிறுவனத்தைத் தொடங்கி வைத்துள்ளார்கள். தொடர்ந்து இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வழிநடத்தி வருகிறார்கள். தற்போது இந்நிறுவனத் தலைவராகவும் திகழ்கிற **மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை நெறிப்படுத்திவரும் பாங்கினைத் தமிழகம் என்றென்றும் நன்றியுடன் போற்றும்.

இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர்**-தமிழ் வளர்ச்சி-பண்பாடு (ம) இந்து சமய அறநிலையத் துறை- **திருமிகு இரா. கற்பூர சுந்தர பாண்டியன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்களுக்கும், இந்த எழுத்துருவை ஒளி அச்சுக்கோப்புச் செய்த திருமதி பி.கௌசல்யாவிற்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத்தந்த பாவை அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# தொடக்கவுரையாக நன்றியுரை

"மருதநில மள்ளர்
செந்நெல் முதுகுடியினர்
அருந்திறல் வீரர்
பெருந்திறல் உழவர்
நெல்லின் மக்கள்
சேற்றுக்கால் செல்வர்கள்
கழனிக் காவலர்
வேளாண் மரபினர்
மழையின் மக்கள்
மண்ணின் மக்கள்
வேந்தன் மரபினர்"

என்றெல்லாம் இன்று மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர்கள் குறித்துப் பல நம்பிக்கையான கோட்பாடுகள் மீட்டெடுக்கப்பட்டுள்ளன. சங்க காலம் தொடங்கிப் பள்ளு இலக்கியக் காலம் வரை மருதநில வேளாண் மக்களாக அறியப்படும் இம்மக்கள் வேளாண் சாகுபடியில் பலபுதிய மாற்றங்கள் ஏற்பட்ட இக்காலத்திலும் கூட நெல் வேளாண்மையுடன் தங்களை நீக்கமற இணைத்துக் கொண்டிருப்பவர்கள். "நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது" எனும் அளவிற்குப் பள்ளு நூல்களில் நெல் வேளாண்மையுடன் தொடர்பு படுத்தப்படுபவர்கள் ஆவர். யதார்த்தத்தில் நெல் விளைப்பது சுமையானது என்றாலும் இதனை அகமகிழ்வோடு ஏற்று, கழனிகளில் சேற்றோடு சேறாய்த் தம்மை ஒப்படைப்பதில் பெருமை கொள்பவர்கள். அதனால் இவர்களைப் பள்ளு நூல் சேற்றுக்கால் செல்வர் என்று அடையாளப்படுத்திச் சிறப்புச் செய்கின்றது. நெல் வேளாண்மையின் கடுமையான பணி குறித்து வேளாண் விஞ்ஞானி பேராசிரியர் முனைவர் அருணா இராஜகோபால் அவர்கள் சொல்லுகையில் "நெல் நடவு முதுகெலும்பை உடைக்கிற சுமையான பணி" அதாவது "Transplanting is a back breaking job" என்று குறிப்பிட்டு விட்டு

இம்மக்களிடம் (மள்ளர்) இருக்கிற நாற்றுநடவுத் தொழில் நுட்பத்திற்கு ஈடான ஒரு கருவி உலகில் எங்கும் கண்டுபிடிக்கப்படவில்லை; அத்தகைய ஒரு கூடுதலான தொழில் நுட்பத்துடன் மருதநில உழவுப்பெண்கள் நடவு செய்கிறார்கள் என்று வியந்து பேசுவார். இத்தகைய சுமைமிக்க நெல் வேளாண்மை நிலத்தை உழுதல், கழனி செய்தல், தொளி அடித்தல், நாற்றுப் பரவுதல், நாற்று நடவு செய்தல், களையெடுத்தல், அறுவடைசெய்தல் என்று விரிந்து கொண்டே செல்வது. ஒற்றை, இரட்டை ஆள் இதைத் தனியே செய்ய முடியாது. கூட்டு முயற்சி தேவை. இதனால் இயல்பாகவே இவர்கள் "**குடும்புகளாய்**" (குழுவினர்) பிரிந்து வேளாண் களன்களில் வேலை செய்தார்கள். இந்த முறையாலும் மருதநிலம் பண்ணை என்று அழைக்கப்பெறும் காரணத்தாலும் நெல் வேளாண்மையே "பண்ணையம்" என்று பெயர் பெற்றது. இப்படியான பண்ணையில் (களம்) கூடி வேலை செய்த மருதநில மக்கள் தங்களின் வேலைப்பளுவை மறக்க வேளாண்மையைச் சிறப்பித்துப் பாடல்பாடி மகிழ்ந்தனர். இது பண்ணைப்பாட்டு, உழத்திப்பாட்டு, முகவைப்பாட்டு என்று இவர்களிடம் செழுமை பெற்றது. இத்தகைய உழத்திப்பாட்டின் அடியாய்த் தோன்றிய பள்ளுப் பாடல்கள் வேளாண்மையை உண்டாக்கும் உழவனைப் புகழாமல் அவனைத் தாழ்வாக்கிப் பேசும் மரபுடையதாக ஏன் 17ஆம் நூற்றாண்டு வாக்கில் தோன்றின என்ற கேள்வியில் விளைந்ததே இந்தப் "**பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே. . .**" எனும் இந்த நூல் ஆகும். இந்த நூலில் நான் மள்ளர்களின் வரலாற்றை வெளியிலிருந்து அதாவது கல்வெட்டு, செப்பேடுகள், வரலாற்றுச் செய்திகள், இலக்கியக் கருத்துக்கள், மக்கள் வரலாறுகள், மக்கள் வழக்காறுகள் என்று தேடித்தொகுத்து, பள்ளுப் பிரதிகள் தரும் உயர்வு/தாழ்வு அடையாளங்களை மறுகட்டமைப்புச் செய்ய முயன்றுள்ளேன். இத்தகைய எனது வாசிப்பு முறைக்குத் தகர்ப்புமைய வாசிப்பு (De-constructive Reading) முறையையும், மள்ளரிய வாசிப்பு முறையையும் பயன்படுத்தியுள்ளேன். இந்த வாசிப்பு ஏன்? எப்படி? என்பதை முதல் இயலில் மிகத்தெளிவாக "**மறுவாசிப்பும் வாசகர் அனுபவம்**" எனும் இயலில் சொல்லியுள்ளேன். இரண்டாம் இயலில் "**பள்ளு இலக்கிய வகைமையின் தோற்றம் வளர்ச்சி**" என்பதாக அமைத்துப் பள்ளுப்பாட்டு உழத்திப் பாட்டின் அடியொட்டிய இலக்கியமாகத் தோன்றியதை

விளக்கியுள்ளேன். மூன்றாம் இயலான "**தமிழ் இக்கியமும் மருதநில மக்களும்**" என்பதில் சங்ககாலம் தொடங்கிப் பள்ளு இலக்கியம் வரை தொடரும் மருதநில வேளாண் அடையாளம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. நான்காம் இயலான "**பள்ளு இலக்கியங்களில் மள்ளர் குலப்பெயர்கள்**" என்பதில் பல்வேறு வேளாண் பெயர்களுடன் மள்ளர்கள் அடையாளப் படுத்தப்படுவதை விளக்கியுள்ளேன். ஐந்தாம் இயலில் "**மள்ளர் பள்ளராக வீழ்ந்த வரலாற்றை**"ச் சொல்லியுள்ளேன். ஆறாம் இயலில் இம்மக்களிடம் வழக்கிலுள்ள "**நெல்லின் தோற்றம் கதை**" இடம்பெறுவதைச் சமூக மானுடவியல் நோக்கில் ஆராய்ந்துள்ளேன். ஏழாம் இயலில் இம்மருத நில மக்களின் கடவுள் இந்திரன் மல்லாண்டையாக மறிப்போன வரலாற்றையும் புராணிக அணுகுமுறையில் விளக்கியுள்ளேன். ஒன்பதாம் இயலில் "**பள்ளுப்பிரதி நாடகம் எனும் கதையாடலில்**" பள்ளுப்பிரதிகள் ஏன் நாடகமாயின என்று விவாதித்துள்ளேன். பத்தாம் இயலில் பள்ளுப் பிரதிகள் கட்டமைத்துள்ள ஒற்றை அதிகார மையத்தைச் சுட்டிக்காட்டி அதை உடைத்து நொறுக்கும் தகர்ப்பு வாசிப்பு முறையைச் செய்துள்ளேன். பதினோராம் இயலில் பள்ளுப் பிரதிகளின் ஒற்றை அர்த்தம் அழிந்துபோன விதம் சொல்லும் எனது மறுவாசிப்பு அனுபவத்தைப் பகிர்ந்துள்ளேன். பின்னிணைப்பில் இம்மக்களின் வரலாறு பேசும் பழனிச்செப்பேடு, நெல்லின் தோற்றக் கதைகள், மள்ளர் குலப்பிரிவுகளின் பட்டியல், வேளாண் அடையாள வழக்காறுகள், இந்திரவிழா, மல்லாண்டையார் குறித்த நிழற்படங்கள் போன்றவற்றை இம்மக்களின் சமூக வரலாற்று ஆவணமாகத் தொகுத்துத் தந்துள்ளேன்.

இந்த அரிய பணியை எனக்கு அளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி, இந்நாள் இயக்குநர் (பொறுப்பு) முனைவர் ம.இராசேந்திரன் ஆகியோர்க்கு எனது நன்றிகள் என்றும் உரியதாகும். அறக்கட்டளை நிறுவிய டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

**தே. ஞானசேகரன்**

# ஆசிரியரைப் பற்றி

கோவை, பாரதியார் பல்கலைக்கழகம், தமிழியல்துறையில் கடந்த 1990 முதல் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகின்றார். எம்ஃபில் பட்டத்திற்கு **"நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் சமூக அமைப்பு"** எனும் தலைப்பிலும் பிஎச்டி பட்டத்திற்கு **"மந்திரச் சடங்குகள்"** (Magical Rituals) எனும் தலைப்பிலும் நாட்டுப்புறவியல் துறையில் ஆய்வு மேற்கொண்ட நாடறிந்த நாட்டுப்புறவியல் அறிஞர்.

மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள் (1986) நாட்டுப்புறச் சமயம் தோற்றமும் வளர்ச்சியும் (1992) நாட்டுப்புறத் தெய்வக் கதைகள் காட்டும் நாயக்கர் காலம் (1993) தலித் சிந்தனை விவாதம் (1998) தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் (2000) மள்ளரியமும் இலக்கியமும் (2000) இந்திர விழா எனும் நாற்று நடவுத் திருவிழா (2000) மந்திரம் சடங்குகள் சமயம் (2000) மள்ளர் சமூக வரலாறு (2001) கொங்குநாட்டு நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு (2002) பாரதி முதல் கனிமொழி வரை (2005) கொங்கு நாடோடிக் கதைகள் (2005) ஆகிய பிரசித்திபெற்ற நூல்களின் ஆசிரியர். இதல்லாமல் சிற்பியின் படைப்புக்கலை (1995) சிற்பி மரபும் புதுமையும் (1998) தமிழர் பண்பாட்டு வரலாறு (தொகுதி, 1,2,3-2000) நாட்டுப்புற மருத்துவம் (1999) நட்பு (மள்ளரியச் சிறுகதைகள்-2000) நாட்டுப்புற நவீனக் கோட்பாடு (2005) ஞானியின் எழுத்துலகம் (2005) போன்ற பல நூல்களின் பதிப்பாசிரியராக விளங்கும் சிறந்த பதிப்பாசிரியர் இவர் ஆவார்.

100க்கும் மேலான கட்டுரைகளைப் பல்வேறு ஆய்விதழ்களில் வெளியிட்டுள்ளவர். உலக அளவில், தேசிய அளவில், மாநில அளவில் 80க்கும் மேலான கருத்தரங்குகளில் கட்டுரை வழங்கியுள்ள ஆய்வறிஞர். இவரின் மேற்பார்வையில் இதுவரை 17 மாணவர்கள் பிஎச்டி பட்டம் பெற்றுள்ளனர். 40க்கும் மேலான மாணவர்கள் எம்ஃபில் பட்டம் பெற்றுள்ளார்கள். பல்கலைக்கழக மானியக் குழுவில் ஒரு பேராய்வுத் திட்டத்தையும், ஒரு குறுகிய கால ஆய்வுத் திட்டத்தையும் பெற்றுச் சிறப்புட[illegible]து முடித்துள்ளவர்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பேரவை (Senate) உறுப்பினராக இருமுறை 1997 முதல் 2003 வரை தமிழக அரசின் நியமன உறுப்பினராகப் பணியாற்றியவர். 1998 முதல் 2001 வரை சென்னையிலுள்ள IAS முன்தேர்வுப் பயிற்சி மையத்தின் ஆட்சிமன்ற உறுப்பினராக அரசால் நியமனம் பெற்றுப் பணியாற்றிய சிறப்புடையவர்.

நாட்டுப்புறவியல், இக்கால இலக்கியம், தமிழர் சமூக வரலாறு, பள்ளு இலக்கியம், சங்க இலக்கியம் போன்ற துறைகளில் பல ஆய்வுகளை நிகழ்த்தி வருபவர். மதுரையிலுள்ள தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம் எனும் அமைப்பின் மாநிலப் பொதுச் செயலாளராகப் பொறுப்பேற்றுப் பல இலக்கியப் பணிகளைச் செய்து வருபவர். எல்லாவற்றுக்கும் மேலாகத் தமிழக இலக்கிய வரலாற்றில் "**மள்ளரியம்**" எனும் சமூக விடுதலைக் கோட்பாட்டை அறிமுகம் செய்து அதில் பல ஆய்வுகளை நிகழ்த்தி வரும் "**மள்ளரிய அறிஞர்**". தமிழக அளவில் 22 மாவட்டங்களில் மள்ளர் வழக்காறுகளைத் தொகுத்து "**மள்ளர் வழக்காற்றுக் களஞ்சியம்**" எனும் பெயரில் 22 தொகுதிகள் இவரின் அரிய முயற்சியில் இவ்வாண்டு வெளிவர இருக்கின்றன என்பது இவரின் கடும் உழைப்பிற்குச் சான்று.

# பொருளடக்கம்

# 1. மறுவாசிப்பும் வாசகர் அனுபவமும் - சில கருத்தாக்கங்கள்

வாசித்தலை முதல் வாசிப்பு (First reading) இரண்டாம் வாசிப்பு (Second reading) என்று ஒன்றுக்கு மேலே நிகழ்த்தும் போது முதல் வாசிப்பில் ஒரு அனுபவமும் அர்த்தமும் இரண்டாம் வாசிப்பில் இன்னொரு வகையான அர்த்தமும் அனுபவமும் பெறுகிறோம். ஒருவேளை நாவல் படிப்பதாக வைத்துக் கொண்டால் கதை / கதைக்கரு என்ன என்பதையே முதலில் படிக்கின்றோம். இரண்டாம் முறை படிக்கும்போது கதையின் முக்கியமான நிகழ்வில் ஊன்றிப் படிப்போம். நடை, பாத்திரங்கள், கூடுதலான விபரங்கள் ஆக இப்படி ஒருமுறைக்கு மேலாகப் படிப்பது மறுவாசிப்பு (Re-reading) என்று நாம் விளங்கிக் கொள்ளலாம். ஏனென்றால் மறுவாசிப்பு என்பது ஒருவகையான வாசிப்பாகவே அமைகின்றது. இப்படியான மறுவாசிப்பிலும் ஒரு வாசிப்புத் தன்மை இருக்கவே செய்கின்றது என்பதே உண்மை. இருப்பினும் முதல் வாசிப்பில் பிரதிதரும் பொருளுக்கு மட்டுமே நாம் முக்கியத்துவம் கொடுக்கின்றோம். இங்கே நாம் உலகத்தை மறந்து இலயித்துக்கிடக்கின்றோம் என்று வாசக அனுபவக் கோட்பாடு (Reader Response Theory) சொல்கின்றது. இரண்டாம் வாசிப்பும் அதைத் தொடர்ந்து நடைபெறும் மறுவாசிப்பும் மிக ஆழமானது, பிரதியை மதிப்பீடு செய்வது; உலகையே நம்மிடம் இழுத்துக் கொண்டு வந்து வைத்துவிடும் ஆற்றலுடையது என்று சொல்லப்படுகின்றது.

மறுவாசிப்புக் குறித்துச் சொல்கையில் படைப்பாளன் (Author) ஒன்றைக் கட்டமைக்கின்றான். வாசகன் அதை நிர்-நிர்மாணம் அதாவது மறுகட்டமைப்புச் செய்கின்றான் (Author Constructs Reader Re-Constructs) என்கின்றனர். ஒரு பிரதியை முதல்முறை, இரண்டாவது முறை, மூன்றாவது முறை என்று படிக்கும்போது அது தரும் அனுபவம் அல்லது புரிதல் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒரு பிரதி நாள்தோறும் எல்லையற்று விரிவாக விரிந்து கொண்டே செல்கின்றது. நமது அனுபவம் புத்தகத்தையே மாற்றுகிறது. ஒரு கவிதை பள்ளிப் பருவத்தில் கல்லூரிப் பருவத்தில் பேராசிரியர் அனுபவத்தில்

என்று ஒரு வாசகனிடமே பல புரிதல்களுக்கு ஆட்படலாம். பொதுவாகப் பிரதிக்கு எதிரான கருத்தையே வாசகன் தேடுவதால் பிரதி விரிந்து கொண்டே செல்வதைத் தவிர அதற்குவேறு வழியில்லை.

பொதுவாக வாசிப்பு என்பது தற்சார்புத் தன்மையுடையது (Subjectivity), ஒரு பிரதி கண்ணாடி போன்றது (Literary Text kind of Mirror), அதில் வாசகன் தன்னைப் பார்க்கின்றான் என்று டேவிட்பிலிச் (David Bleich) சொல்கிறார். நாம் இப்படி புரிந்து கொள்ளலாம்: பிரதி ஒரு கண்ணாடி, அது வாசகனை அப்படியே காட்டும் என்பதாக. வாசக அணுகுமுறை கோட்பாடு "ஒரு பிரதியின் அர்த்தம் பிரதியிடம் இருக்கிறதா, வாசகனிடம் இருக்கிறதா, இல்லை பிரதி, வாசகன் இருவரையும் இணைக்கும் இடைமைக்குள் இருக்கிறதா என்ற ஒரு கேள்வியை எழுப்புகிறது. (Reader Response raises the questions of where literary meaning resides - in the literary text, in the reader or in the Interactive space between text and reader) வாசகனுக்குள்தான் அர்த்தம் இருக்கின்றது (Meaning in the Reader) என்று பதில் சொல்கிறார் ஸ்டேன்லிபிஸ் (Stanley Fish). ஒன்றின் அழகு பார்க்கிறவன் கண்ணைப் பொறுத்து அமைவது போல, பிரதி வாசகனின் அர்த்தப்படுத்தலில் தான் அதன் அர்த்தம் அமைகின்றது. காட்டாக ஒரு வெள்ளைத் தாளில் மையை (INK) பல இடங்களில் தெளித்துவிட்டு அது கடல் நீரைப் போல் காட்சிதருகிறது என்று சொல்லலாம். இன்னொருவர் அது வானத்தில் மிதக்கும் மேகங்களை நினைவூட்டுகிறது என்றும் சொல்லலாம். அது ஒரு சிதைந்த கனவை நினைவூட்டுகின்றது என்றும் சொல்லலாம். ஆனால் அங்கே கொட்டியிருப்பது மைதான். பார்ப்பவர் அவரவர் மனோபாவத்தின் தீவிரத் தன்மைக் கேற்பப் பொருள் கொள்கின்றனர்.

சிவப்பு மையாக இருந்தால் அது புரட்சியின் வடிவமாக இருக்கின்றது என்று கூட ஒருவர் சொல்லக்கூடும். இங்கே பார்ப்பவர் அவரவர்க்கு ஏற்ப அர்த்தம் காண்பது போல் பிரதியில் வாசகன் தனக்கான புரிதலின் பின்புலத்தில் அர்த்தம் காண்கின்றான். இதனை ஒருவரின் ego-structureக்கு ஏற்ப ஒரு பிரதி அர்த்தப்படுத்தப்படுகிறது என்று சொல்லலாம்.

புதிய திறனாய்வுக் கொள்கையினர் (New Critics) ஒரு படைப்பைப் புரிய வரலாறு தேவையற்றது என்று ஒதுக்கித் தள்ளியதையும், இதேபோன்று பிராய்டிய வாசிப்பாளர்கள்

வாசகனைப் புறந்தள்ளிப் பிரதி (Text) ஆசிரியர் (Author) மொழியின் குறியீடுகளுக்கு (Symbols) முக்கியத்துவம் கொடுத்து ஒரு படைப்பை வாசிப்பதை வலியுறுத்தியதையும் நினைக்க வேண்டியிருக்கிறது. இங்கே வாசகனுக்கு அதிக முக்கியத்துவம் இல்லை. இதன்பின்னர் ரோலன்பார்த் ஆசிரியர், பிரதி என்பவற்றோடு வாசகனும் முக்கியமானவன் என்ற ஒரு கருத்தை முன்வைத்ததோடு அல்லாமல் ஆசிரியரின் மரணத்தையும் அறிவித்தன் மூலம் பிரதியை முழுவதும் வாசகனுடையது என்பதாக ஆக்கினார். வாசகன்தான் ஒரு பிரதிக்கு முக்கியமானவன் என்ற கருத்து பின்நவீனத்துவத்தில் வலியுறுத்தப்பட்டு "வாசகனின் வாசிப்பு அனுபவம்" ஒரு கோட்பாடாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

ஒரு பிரதியை வாசிக்கும்போது வாசகன் பின்வரும் கேள்விகளை எழுப்பித் தனக்குள் விடை காணவேண்டும் என்று வாசக அணுகுமுறைக் கோட்பாடு வலியுறுத்துகிறது.[1] அவை வருமாறு:

1. அ. ஒரு பிரதியை முதன்முதலில் படிக்கத் தொடங்குகையில் ஏற்பட்ட உணர்வு என்ன? (What is your Initial emotional response to the work)

   ஆ. ஒரு பிரதியை முழுமையாக வாசித்தபின் எப்படி உணர்ந்தீர்கள்? (How did you feel upon First reading it)

2. பிரதியில் ஏதாவது குறிப்பிட்ட இடத்தில் முரண்பட்டோ / வேறுபட்டோ உணர்வுகளை வெளிப்படுத்தினீர்களா? ஏன்? இல்லையெனில் ஏன் இல்லை? (Did you find yourself responding to it or reading differently at any point? If so, why? If not, why not?)

3. பிரதியில் எந்த இடத்தில் நீங்கள் யூகித்து அறிந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது? எந்த இடத்தில் இடைவெளியை நிரப்ப வேண்டியிருந்தது? எந்த இடத்தில் உங்களுக்கான அர்த்தத்தை முடிவு செய்ய வேண்டியிருந்தது? எதனடிப்படையில் நீங்கள் யூகித்த அர்த்தத்தைச் செய்தீர்கள். (At what places in the text did you have to make inferences, fill in gaps, make interpretive decisions? On what bases did you make these inferential guesses?)

4. அ. கதை சொல்பவர் அல்லது பேசுபவர் பாத்திரங்கள் போன்றவற்றுடன் வாசகன் எப்படியான எதிர்வினை கொள்ள நேர்ந்தது? (How do you respond to the Characters the Speaker, or the narrator?)

ஆ. மேற்சொன்னவைகளைப் பற்றி வாசகன் என்ன உணர்கிறான்? ஏன்? (How do you feel about them? why?)

5. அ. பிரதியில் எந்த இடம் மிகத்தீவிரமான சிந்தனையைத் தூண்டியது? அந்த இடங்கள் எவை? (What places in the text caused you do the most serious thinking?)

ஆ. பிரதியை அர்த்தப்படுத்த அல்லது புரிந்து கொள்ள படைப்பின் பல்வேறு பகுதிகளை / பிரிவுகளை எவ்வாறு அமைப்பாக்கினீர்கள்? (How did you put the pieces, sections, parts of the work together to make sense of it?)

6. அ. ஒரு பிரதியைப் பலமுறை படித்திருப்பின் எவ்வாறு இரண்டாவது வாசிப்பு மற்றும் அதைப் பின்தொடர்ந்த வாசிப்புகள் முதல் வாசிப்பிலிருந்து எவ்வாறு வேறுபட்டு நிற்கக் காண்கிறீர்கள்? (If you have read a work more than once, how has your second subsequent readings different from earlier ones?)

ஆ. வேறுபாடுகளை எப்படி விளக்கமாக்கிப் புரிந்து கொண்டீர்கள். பிரதியைப் பற்றிய எந்த மாறுபாடான கருத்துக்களும் இல்லாமல் இருந்திருந்தால் அச்சிந்தனை எப்படி ஏற்பட்டது. அதை எப்படி விளக்குவீர்கள். (How do you account for those differences or for the fact that there are no differences in either your thoughts or your feelings about the work?)

இதல்லாமல் பின் நவீனத்துவக் கோட்பாடுகளில் ஒன்றான தகர்ப்புமைய வாதம் (De-construction) DE=Constructive Reading என்றே தன்னை அழைத்துக் கொள்கின்றது. இக்கோட்பாடுகள் பிரதியின் மேல் முன்வைத்துள்ள கருத்துக்களில் சில.

1. எழுதப்படுவதை விடப் புரிந்து கொள்வதில் தான் பிரதியின் பொருள் இருக்கிறது.

2. ஒரு பிரதிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் இருக்கிறது.
3. ஒவ்வொரு புத்தகத்திலும் மேலோட்டமாகச் சொல்லும் கருத்து அழிகிறது.
4. ஆசிரியரின் பிரதி அவனுக்கே எதிராகவும் ஆகிவிடும்.
5. அர்த்தத்திற்கு மையம் கிடையாது.
6. உலகில் எந்தக் கருத்தும் இறுதியானதல்ல.
7. எதையும் சந்தேகக் கண் கொண்டு பார்ப்பது.
8. ஒரு புத்தகம் தன்னைத்தானே தகர்த்துக் கொள்கிறது.
9. படைப்பாளனை விட வாசகன் சிறந்தவன். வாசகனே பிரதிகளை உருவாக்குகின்றான்.
10. வாசக அனுபவத்திற்கேற்பப் பிரதிகள் மாறிக்கொண்டே இருக்கும்.
11. வாசகன் தனக்கானதை மட்டும் தேடிக்கொண்டே செல்கின்றான். தனக்கானது இல்லாதபோது அதை ஒத்தி வைத்து விடுகின்றான்.

இப்படியாக வாசகனை முன்னிறுத்தும் பின் நவீனத்துவம் வாசகனை மையப்படுத்தி அவனுக்கு எதனையும் மறுவாசிப்பிற்கு உள்ளாக்கும் எல்லையில்லா அதிகாரத்தைப் பெற்றுத்தந்து விடுகிறது. இத்தகைய அதிகாரம் பெற்ற வாசகன் எதையும் சந்தேகக் கண் கொண்டு பார்ப்பது / அதிகார மையத்தைக் கேள்விக்குள்ளாக்குவது / பகடி செய்வது / திரும்பத் திரும்ப உடைப்பது / ஒழுங்கானதைக் கலைத்துப் போடுவது / புனிதங்களைக் கேள்விக்குள்ளாக்குவது என்று தனது வாசிப்பைத் தொடங்குகின்றான். இப்படியான தகர்ப்புடைய வாசிப்பு இறுகிய முடிச்சுக்களை அவிழ்த்து விடுகிறது.

இந்த வாசக அணுகுமுறை வாசகனுக்கு நிறைய உரிமை கொடுக்கிறது? வாசகனின் பங்கு பிரதிக்குள் முக்கியம் என்று சொன்னது. ஒரு பிரதியை வாசிக்கும் வாசகனின் உணர்வு அனுபவங்கள் குறித்து நிறையப் பேசியுள்ளது. அதில் பிரதியைப் படிக்கும்போது மனதிற்குள் என்ன நடக்கிறது என்பதையும் வாசகன் என்ன இதிலிருந்து பெறுகிறான் என்பதையும் புரிய நீ

என்ன உணர்கிறாய் - (What you feel)

நீ என்ன பார்க்கிறாய் - (What you see)

நீ என்ன புரிந்தாய்
நீ என்ன அனுபவம் பெற்றாய்
நீ எதைக் கற்றாய்
} What you hear

என்று கேள்வி கேட்டு வாசகனின் உணர்வு மற்றும் அனுபவங்கள் தான் பிரதியை அர்த்தப்படுத்துகின்றன என்ற கருத்தை முன்வைத்தது. இவ்வகையில் அமைந்த வாசக அணுகுமுறையின்அடிப்படையில் இங்கே நான் பள்ளு இலக்கியங்களை மறுவாசிப்புக்கு உட்படுத்த இருக்கின்றேன். அதுவும் பள்ளு இலக்கியத்திற்குள் இல்லாமல் அதன் வெளியே அதாவது பள்ளுப் பிரதிக்கு வெளியே. அதென்ன பிரதிக்கு வெளியே என்றால் பள்ளுப் பிரதியிலுள்ள விசயங்களை எனக்கானதாக நான் புரிந்து கொள்ள வரலாறு / கல்வெட்டு / செப்புப் பட்டயம் / மக்கள் வழக்காறுகள் / இலக்கியங்கள் என்று வெளியே சான்றுகளைத் தேடித் தொகுத்துப் பள்ளுப் பிரதிகளின் அருகே வைத்துப் புரிந்து கொள்கின்றேன். இவ்வாறான எனது வாசிப்பில் நான் எதனையும் மூலப் பிரதியில் மாற்றவில்லை. அங்கே இருப்பதை எனக்கானதாக மாற்றி வாசிக்கின்றேன். இவ்வாறான எனது வாசிப்பு ஏன் தேவை என்று ஒரு வினா எழும். அதற்கான வலுவான காரணங்கள் இருக்கின்றன. அவைகள் வருமாறு:

### மறுவாசிப்பிற்கான தேவை

1. மள்ளர்-பள்ளர் எனும் நோக்கில் இதுவரை பள்ளு நூல்கள் வாசிக்கப்படவில்லை. மரபுவழியில் மள்ளர் உழவர், மருத நிலத்தவர் என்று பொத்தாம் பொதுவாகத்தான் இதுவரை பள்ளு நூல்களுக்கு உரை எழுதியவர்கள் வாசித்திருக்கின்றார்கள். ஒரு சிலர் மள்ளர்-பள்ளர் ஒருவரே என்று குறிப்பிட்டிருந்தாலும் சங்க கால மருதநில மள்ளர்களோடு இவர்களைத் தொடர்புபடுத்திப் பேசவில்லை. இது அவர்களுக்கான வாசிப்பிற்கான சுதந்திரம் என்று கொள்ளலாமே தவிர, சரியான வாசிப்பு என்று சொல்லிவிட முடியாது.

2. பள்ளு நூல்களில் மருதநிலக் கடவுளாக இடம்பெறும் இந்திரன் (வேந்தன்) சங்ககால வேந்தனுடன் தொடர்புப்படுத்திப்

பார்க்கும் வாசிப்பு இதுவரை செய்யப்படவில்லை. நெல் வேளாண்மைக்கான களம் மருதநிலமாக அமையும்போது, பண்டைய மருதநில வேளாண்மரபு தொடர்புப் படுத்தப்படாவிட்டால் இப்பிரதி முழுமைபெற்ற பிரதியாக அமைய வாய்ப்பில்லை. மேலும் பண்டைய தமிழகத்தில் வழக்கிலிருந்த "இந்திரவிழா" என்ன ஆனது; இவ்வழிபாடு பள்ளு இலக்கிய மாந்தர்களான மள்ளர்களிடம் நாற்றுநடவுவிழா, மல்லாண்டை வழிபாடு, இந்திரவிழா எனும் பெயரில் இன்னமும் வழக்கிலிருக்கிறது என்பதை எந்த வாசிப்பும் இதுவரை சுட்டிக்காட்டவில்லை.

3. பள்ளுப்பாட்டு உழவர் பெருமைபேசும் இலக்கியமாக அமையாமல் உழவர்களை ஏசும் இலக்கியமாக ஏன் அமைந்தது அதற்கான அரசியல், சமூகப் பின்புலம் என்ன என்பது இதுவரை வாசிக்கப்பட்டதில் சொல்லப்படவில்லை.

4. உழத்திப்பாட்டு எனும் இலக்கியவகை குறித்து நவநீதப் பாட்டியல் குறிப்பிடுகையில் அது நமக்கு ஏன் நூல் வடிவில் கிடைக்கவில்லை; இல்லையா? இருந்து மறைக்கப்பட்டதா என்பதற்கு இதுவரை ஒரு சரியான வாசிப்பு இல்லை.

5. பள்ளு நூல்களில் இடம்பெறும் பண்ணைக்காரன் யார்? அவன் எந்தச் சமூகம் சார்ந்தவன் என்பதற்கான அடையாளம் ஏன் மறைக்கப்பட்டிருக்கின்றது. இதனை இதுவரை யாரும் கேள்வி எழுப்பவில்லை.

6. பள்ளு நூல்கள் எண்ணிறந்தனவாய்த் தோன்றக் காரணம் என்ன? பள்ளு நாடகமாக நடிக்கப்பட்டதால் இத்தகைய பரவுதலுக்கு ஆளானதா? என்ற கேள்விக்கு இதுவரை நேரடியான பதிலையோ சான்றையோ யாரும் தரவில்லை. நாடகமாக நடிக்கப்பெற்றிருக்கலாம் என்றே சொல்லப்படுகிறது. இருப்பினும் இந்த நாடகத்தில் யார் பாத்திரமேற்று நடித்திருப்பார்கள்; அவர்கள் மள்ளர்களாக இருந்திருப்பார்களா? இல்லை வேறு சமூகத்தவரா? என்றெல்லாம் இதுவரை இப்பிரதி வாசிக்கப்படவில்லை.

7. நெல் வேளாண்மைத் தொழிலையுடைய தேவேந்திரகுல வேளாளர் இனத்தவர் எல்லாக் காலத்திலும் பண்ணை வேலையாட்களாக இருந்தார்களா? இவர்களுக்கென்று தனியான

வேளாண்நிலம் இல்லாதிருந்ததா? இவர்களை மட்டும் இந்த இலக்கியத்தின் பாடுபொருளாக்கித் தாழ்த்தி வைக்க நினைத்த சமூகக் காரணிகள் என்ன? இதற்கான வாசிப்பு இதுவரை இல்லை.

8. வேளாண்மை செய்வோர் எவ்வகையில் கீழான சமூகமாக மாற்றம் பெற்றார்கள். அது எப்படி சாத்தியமானது. அதற்கான பின்புலம் என்னவாக இருந்தது. இப்படியான ஒரு கேள்விக்கான வாசிப்பை யாரும் இதுவரை பள்ளு இலக்கியத்திற்குள் ஏற்றிப் பார்க்கவில்லை.

9. சைவம், வைணவ செல்வாக்கைப் பரப்பும் நோக்கத்திற்காக மட்டுமே பள்ளுநூல் ஏசல் இலக்கியமாக வடிவமைக்கப்பட்டதா? அப்படியானால் 17ஆம் நூற்றாண்டில் இவர்களின் சமய அந்தஸ்து எப்படி இருந்தது. இவர்கள் சமயத்திற்குள் உள்ளே இருந்தார்களா? அல்லது ஒரு சிலர் சொல்வது போல் வெளியே இருந்தார்களா? என்ற கேள்வி எழுப்பப்படவே இல்லை.

10. எல்லாவற்றிற்கும் மேலாகத் தமிழக வரலாற்றுடன் இம்மக்களைத் தொடர்புப்படுத்தாமலே வெறும் இலக்கிய வாசிப்பாக மட்டுமே, பள்ளு இலக்கியப் பிரதிகள் வாசிக்கப்பட்டுள்ளன. இதற்கு மாறாக இவர்களின் வரலாறுகளைக் கல்வெட்டுச் சான்றுகள், பட்டயங்கள், வரலாற்றுச் சான்றுகள், இலக்கியச் சான்றுகள், நாட்டுப்புற வழக்காற்றுச் சான்றுகளில் தேடித்தொகுத்து, இவர்களின் பண்பாட்டு அடையாளங்களை அறிமுகம் செய்ய முயல்கின்றது இந்த மறுவாசிப்பு அணுகுமுறை. எனது மறுவாசிப்பு முறைக்கு பின் நவீனத்துவம் பாதைபோட்டுக் கொடுத்தாலும் நான் இதை எனக்கானதாக மாற்றும்போது அதை **“மள்ளரிய வாசிப்பு முறை”** என்று கொள்கின்றேன். ஏனென்றால் வாசகன் தனக்கான ஒரு தத்துவப் பின்புலத்துடன் ஒரு பிரதியை வாசிக்கவும் அர்த்தப்படுத்திக் கொள்ளவும் பின் நவீனத்துவம் அங்கீகாரம் வழங்கியுள்ளது என்பதை இங்கே நினைவுபடுத்த விரும்பு கின்றேன். அவ்வகையில் எனது வாசிப்பு முறையான “மள்ளரிய வாசிப்பு” முறை எத்தகைய தத்துவப் பின்புலம் உடையது. அதன் நோக்கம் என்ன? என்ற கேள்விகள் இதை வாசிக்கின்ற வாசகனுக்கு ஏற்படுவது இயல்பானதே.

## மள்ளரிய இயக்கமும் தத்துவப் பின்புலமும்

"எல்லாமே பொருட்படுத்த வேண்டியனதான்" எனும் பின் நவீனத்துவம் முன்வைக்கும் கருத்தின் அடிப்படையில் மள்ளரிய இயக்கப் போக்குகளையும் இலக்கியப் போக்குகளையும் கவனத்தில் கொண்டால் மள்ளரியத்தில் சமூகவிடுதலை எனும் நுண்ணரசியல் பேசப்படுகின்றது என்பது எளிதில் விளங்கும். தமிழகத்தில் பூர்வ குடிகளான அடித்தள மக்கள் அல்லது விளிம்பு நிலை மக்களுக்கு ஏற்பட்டுள்ள முதன்மையான நெருக்கடி இம்மக்களின் பண்பாட்டு வேர்களுடனான அடையாளங்கள், தொன்மையான வரலாறுகள் மறைக்கப்படுவதும் மறுக்கப்படுவதும் ஆன அடையாள நெருக்கடிதான் என்பதைப் புரிந்துகொள்ள முடியும். இதனை மள்ளரியம் நன்கு புரிந்து கொண்டுள்ளது. தமிழர் என்ற ஒற்றைப் பண்பாட்டு அடையாளத்துடன் மட்டும் தமிழக நிலப்பரப்பில் ஒரு சமூகம் அடையாளப்படுத்தப் படவில்லை. அதற்கு மேலாகச் சாதிய அடையாளங்களுடனான விழுமியங்களே ஒரு சமூகத்தின் பண்பாட்டு மேலாண்மையை நிலைநிறுத்தும் தளமாகக் கருதப்படுகிறதை மள்ளரியம் இனங்கண்டுள்ளது. இதனடிப்படையில்தான் சாதியை மறுப்பதைக் காட்டிலும் அதன் தளத்திலே பயணித்துத் தனக்கான அடையாளங்களை மீட்டெடுத்து அதனைத் தனது சமூக விடுதலைக்கான சிந்தனையாக முன்வைக்க முயன்றது. அப்படி உருவானதுதான் மள்ளர் மரபுகள் குறித்த அறிஞர் தேவ ஆசிர்வாதத்தின் ஆய்வுகளும் (1977) முனைவர் குருசாமிசித்தரின் (1993) ஆய்வுகளும் தே. ஞானசேகரனின் "மள்ளரியம்" குறித்த ஆய்வுகளும் ஆகும். இவ்வாய்வுகள் சமகாலத்தில் பள்ளர்கள், தேவேந்திரர்கள் என்று அறியப்படுவோர் சங்க இலக்கியங்களில் மருதநில மக்களாக அறியப்படும் மள்ளர் (உழவர், வீரர்) களின் வழித்தோன்றல்கள் ஆவர். இம்மக்களின் பண்பாடு மருதநில வேளாண்பண்பாடு, இவர்கள்தான் "நெல்லை" இப்பூமியில் முதல் முதலில் உண்டாக்கியவர்கள். வேளாண்மை இவர்களின் உயிர்மூச்சு. இந்த மரபு பள்ளு நூல்கள் வரை தொடர்வதை மேற்சொன்னவர்களின் ஆய்வு சான்றுகளுடன் நிறுவியது. இவ்வாறு 1995க்குப் பின்னர் "மள்ளர்" மரபாக அறியப்பட்ட இம்மக்களின் மருதநிலப் பண்பாடு இம்மக்களைத் தமிழக மண்ணில் வேர் ஊன்றிய பூர்வீகக் குடிகள் என்பதை அறிதற்கு ஏதுவாக அமைந்தது.

இவ்வாறான சூழலில் 1992களில் தோன்றிய தலித்யம் விளிம்புநிலை மக்களின் சமூகவிடுதலை பேசியது. என்றாலும் அது தீண்டாமையோடு தொடர்புப் படுத்தியும், ஆதி திராவிடர் என்ற ஒரு சமூகத்தினரை மட்டுமே முன்னிலைப்படுத்தும் இயக்கமாகத் தமிழகச் சூழலில் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டது. இந்தத் தலித்தியத்திற்குள் "மள்ளர்கள்" இடம்பெற முடியாத அடையாள நெருக்கடி ஏற்பட்டது. காரணம் இவர்கள் ஆதிக்க சாதிகளால் குறிப்பாக 17ஆம் நூற்றாண்டு வாக்கில் இருந்து ஒடுக்கப்பட்ட விவசாயக்கூலிகளாக ஆக்கப் பட்டவர்களே தவிர, தீண்டாமைக்கும் இவர்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதை இம்மக்கள் குறித்து உருவாக்கப்பட்ட "மள்ளர்மரபு" எடுத்தியம்பிய பின்புலத்தால் மள்ளரியச் சிந்தனையாளர்களால் தலித்யம் மறுக்கப்பட்டது. தலித்யம் மறுக்கப்பட்டதால் மள்ளர்கள் விடுதலை பேசும் தளம் என்ன என்ற கேள்வி எழுந்த போது அதற்கான மள்ளர்களின் விடுதலை பேசும் தளம் "மள்ளரியம்" என்று அடையாளப் படுத்தப்பட்டது. இத்தகைய அடையாளப் படுத்துவதற்கான சமூக, அரசியல்சூழல் தமிழகத்தில் 1990 வாக்கில் ஏற்பட்டிருந்தது. அது ஒவ்வொரு சாதியும் தனித்தனிச் சமூக இயக்கங்களாகவும் (சங்கம்) அரசியல் இயக்கமாகவும் தோற்றம் பெற்ற தமிழகச் சூழல் ஆகும். இச்சூழல் இக்காலத்தில் சமூக, இலக்கியத் தளத்தைப் பாதித்தது. "ஒரு புதிய தோற்றம் அது தோன்றும் சமுதாயத்தில் பண்பாட்டுச் சிக்கலை உள்ளீடாகக் கொண்டு தோன்றும் என்பதற்கேற்ப 1995களிலும் அதற்கும் முன்பும் பின்பும் தமிழகத்தில் இம்மக்களின்மீது ஆதிக்க சாதியினரால் நிகழ்த்தப்பட்ட சாதிய மோதல்களும் சமூக ஒடுக்குமுறைகளும் இவ்வகை இலக்கிய இயக்கங்கள் தமிழ் மண்ணில் வேரூன்றக் களம் அமைத்துக் கொடுத்தது என்றால் மிகையாகாது".[2] தொடர்ந்து சக தமிழர்களால் (ஆதிக்க சக்திகள்) இம்மக்கள் ஒடுக்கப்படுவதற்கும் தாக்கப்படுவதற்கும் காரணம் இவர்களுக்கான பண்பாட்டு அடையாளத்தை இழந்து நிற்பதால்தான் என்பதை மள்ளரியம் வலுவாக நம்பியது. தலித், தாழ்த்தப்பட்டோர் என்ற அடையாளம் தம்மை அடிமைப்படுத்தவும், வீழ்த்தவும் மட்டுமே கூடியது என்பதால் தமது பூர்வீக அடையாளமான வேளாண், வீர மரபான மள்ளர் எனும் மரபைத் தங்களுக்கான பண்பாட்டு அடையாளமாகத் தூக்கிப் பிடிக்கும் இலக்கியங்கள்; கவிதை, சிறுகதை, நாவல், காவியம் எனும் வகையில் 1995க்குப் பின் இயல்பாகவே தோன்றத்

தொடங்கின. இந்த மள்ளரிய இலக்கியங்களை ஒரு வகையில் நுண் அரசியல் என்று நாம் சொல்லிவிட முடியும். காரணம் பெண்ணியம் ஒரு அரசியல், தலித்யம் ஒரு அரசியல், காரணம் பெண்களையும் தலித்களையும் சமூக விடுதலைக்குத் தயார் செய்வது போல் மள்ளரியமும் ஒரு சமூகத்தைச் சமூக விடுதலைக்குத் தயார் செய்கிறது. காரணமில்லாமல் காரியமில்லை என்பதுபோல் மள்ளர்களின் சமூக விடுதலையை உறுதிப்படுத்தும் அரசியலை மள்ளரியம் செய்வதால் மள்ளரியமும் அரசியல்தான். மள்ளரியம் தனக்கான அடையாளங்களுடன் செயல்பட்டாலும் தமிழர், தமிழர் ஒற்றுமை எனும் சமூகத் தளத்திலிருந்து வேறுபடாமல் இயங்கும் கருத்தியலைக் கொண்டு விளங்குகிறது. இம்மள்ளரிய இயக்கங்களால் மள்ளரியம் குறித்த ஆய்வுகளும் ஆய்வுநூல்களும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகின்றன. படைப்பு இலக்கியங்களிலும் இம்மள்ளரியம் தன் கவனத்தைச் செலுத்தி வருகிறது. அவ்வகையில் கவிதை, நாவல், சிறுகதை, காப்பியம் தோன்றத் தொடங்கியுள்ளன. இவையெல்லாம் ஏன் ஒரு சமூகத்தில் தோன்றுகின்றன என்ற ஒரு கேள்வி எழலாம். இதற்கான காரணத்தை விளிம்புநிலை மக்கள் குறித்த சிந்தனையாளர் முனைவர் நாகராஜ் முன் வைப்பார்.[3]

“ஒவ்வொரு ஒடுக்கப்பட்ட சாதியும் தனது வேர்களை மறுகண்டு பிடிப்புச் செய்து கொள்ள வேண்டியது அவசியம். அதன் மூலம் இந்தத் தேசத்தின் கலாச்சாரம் மறுபிறப்பு பெறமுடியும். ஆனால் விரோதங்களையும், பாகுபாடுகளையும் தவிர்த்துவிட வேண்டும். துரதிஷ்டவசமாக இன்று அது நடைபெறவில்லை.

ஒடுக்கப்பட்ட சாதியினர் தங்கள் கலாச்சார மீட்சி, ஒற்றுமை ஆகியவற்றைவிட அரசியல் ரீதியாகத் தங்களை முன்னிலைப்படுத்துவதிலேயே குறியாக உள்ளனர். அவர்களில் தங்கள் கலாச்சாரம் பற்றிய சுயமதிப்பு இல்லை என்பது பற்றியே நான் மிகவும் கவலைப்படுகிறேன். அவர்களுக்கு வளம் மிகுந்த கலாச்சாரம் உள்ளது. செழுமையான ஆன்மீகமும் பாரம்பரியமும் மதங்களும் உள்ளன. அவை புறக்கணிக்கப் படுகின்றன.

நான் பழைய காலத்திற்குத் திரும்ப வேண்டும் என்று கூறமாட்டேன். பழமையைப் போற்றுவதில் எனக்கு உடன்பாடு இல்லை. ஆனால் யாராக இருந்தாலும் மரபிலிருந்து துண்டித்துக்

கொள்வது தற்கொலைக்குச் சமம்தான். அது நம்மை வேரற்றவராக்கிவிடும். நம்மைச் சிதைத்துவிடும்" என்ற கருத்தை மள்ளரியம் ஏற்றுக்கொள்கிறது. இதனடிப்படையில் மள்ளர்மரபு, மள்ளர் வரலாறு, மள்ளர் பண்பாடு என்பனவற்றை மீட்டுருவாக்கம் செய்யும் பணியில் தன்னை ஈடுபடுத்தி, சமூக விடுதலைக்கான களத்தைத் தயார் செய்யும் பணியில் மள்ளரியம் ஈடுபட்டுள்ளது.

"இந்த உலகம் இரண்டால் ஆனது. ஒன்று நாம் வாழும் இயற்கை. அதாவது நிலம், நீர், காற்று, தீ, வான் என்பது. இன்னொன்று இதில் வாழும் மனிதனின் வரலாறு. அதாவது இரண்டாவது இயற்கை இந்த வரலாறு. வரலாறு அற்றவன் அனாதை, அகதி. வரலாறு என்பது என்னவென்று பார்த்தால் டெப்ரேய் எனும் அறிஞரின் கூற்றுப்படி "அடிப்படையில் தனக்கான உரையாடலைத் தாமே கட்டுவதுதான்". இதுதான் உண்மையான யுத்தக்களம். ஒவ்வொரு இனமும் தனக்கான உரையாடலை உருவாக்கித்தான் வைத்திருக்கிறது. எந்த இனத்திற்கும் இயற்கையிலேயே ஒரு வரலாறு இருந்தது என்று சொல்ல முடியாது. இன்னும் சொல்லப்போனால் வரலாறு எழுதுவது என்பதும் ஒரு கருத்தியலை உருவாக்குவது என்பதும் கண்ணுக்குத் தெரியாத துப்பாக்கி ரவை தயாரிக்கும் தொழிற்சாலையைக் கட்டுவதற்கு நிகரென்று கருதப்படுகிறது. அரசு என்பதுகூட துப்பாக்கிகளால் நிலைநிறுத்தப் படவில்லை. வார்த்தைகளினால் ஆன பிரதிகளினால்தான் என்பார்.[4] இந்த வகையான பணியைத்தான் மள்ளரிய இயக்கம் கட்டுகின்றது. "இயக்கம்" என்ற சொல்லுக்குத் தூண்டுவது, புதுப்பிப்பது, உயிரூட்டம் பெறச் செய்வது என்ற பல பொருள்கள் உள்ளன. சமுதாய, அரசியல், பொருளாதார மாற்றங்கள் தான் இயக்கம் தோன்றுவதற்கும் அடிப்படையாக அமைகின்றன. இலக்கியம் சமுதாயத்தின் விளைபொருள். சூழ்நிலைக்கேற்ப இலக்கியம் தோன்றுகின்றது. இலக்கியம் பற்றிய கோட்பாடுகளை அறிந்து கொள்வதற்கு இயக்கங்கள் அடிப்படையாய் அமைகின்றன. 1990க்குப் பின் தமிழ்ச் சமூகத்தில் விளிம்பு நிலை மக்கள் சமூகம், அரசியல், கல்வித் தளத்தில் எழுச்சி பெற்ற நிலையில் தான் இதுபோன்ற இயக்கங்களும் அது சார்ந்த இலக்கிய வகைமையும் தோன்றத் தொடங்கின.

## பண்பாட்டு வேர்களை அடையாளப்படுத்தும் போராட்டம்

20ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலக்கட்டத்தில் அடித்தள மக்கள், புலம்பெயர்ந்தோர், பெண்கள், பூர்வகுடிகள் தங்களின் அடையாள நெருக்கடி பற்றியும், சமூக விடுதலை பற்றியும் சிந்தித்துச் செயல்படத் தொடங்கிய காலமாக அமைவதும் இதற்கு ஏதுவான சூழலாக அமைந்தது. இதற்கு முன்பு இருந்த பெருங்கதையாடல் உடைக்கப்பட்டு (அதாவது தேசியவாதம் போன்ற பெருங்கதையாடல்கள்) எந்தப் பெருங்கதை யாடலுமற்ற வட்டாரத் தன்மையுடன் கூடிய கருத்துக்கள் முன்னிலைப்படுத்தப்பட்டன. இதனை காயத்திஸ்பைவக் அடித்தள மக்கள் பேசமுடியுமா? (can the subaltern speak) என்ற கட்டுரையில் "அடித்தள மக்களுக்கென்று வரலாறு கிடையாது. அவர்கள் பேசக்கூட முடியாது. அதிலும் அடித்தள மக்களாகப் பெண் இருந்துவிட்டால் அவளது நிலை இன்னும் ஆழமான நிழலுக்குள் மறைக்கப்படும்''[5] என்று சொல்வது 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை உலகெங்கிற்கும் பொதுவானதே. இருப்பினும் தமிழ் இலக்கியச் சூழலில் 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய பள்ளு இலக்கியங்கள்தான் முதன் முதலில் விளிம்பு நிலை மக்களின் சமூக விடுதலை பேசும் இலக்கியமாக அமைவது மனங்கொள்ளத்தக்கது. வேளாண்மையை உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் "மள்ளர்' (பள்ளர்) வாழ்வை மையமாகவும், அம்மக்களையே பிரதான பாத்திரங்களாகவும் கொண்டு உதித்த முக்கூடற்பள்ளு என்கிற நூலில் ''கிட்டே பார்த்த உடனே தூரப்போ' என்று விரட்டுகிறார்கள்; ஆனால் அவர்களே நான் வேளாண்மை செய்து தரும் சோறை மட்டும் விலக்குவதில்லை'' என்று கிண்டலாகப் பள்ளர் ஒருவர் கூறுவதாக அமையும்.

**''பக்கம் தூரம் போயும் / தக்க சோறென வேளாண்மை / பள்ளா பள்ளா என்பர் மெய் கொள்ளாதவர்"** என்பதில் என்னைத் தூரப்போ என்று சொல்லும் இவர்கள் என் உழைப்பின் மேன்மையை உண்மையை அறியாதவர்கள் என்று கேள்வி கேட்கும் இலக்கியம் இந்த மள்ளர்களின் வேளாண் வாழ்வுபேசும் இலக்கியங்கள் என்பது இங்கு நினைக்கத்தக்கது. இந்தப் பள்ளு நூல்கள் இவர்களை மள்ளர் (உழவர்) என்றே அழைக்கும். இப்படியான இவர்களின் வேளாண் பண்பாட்டை மள்ளரிய இலக்கியங்கள் இம்மக்களின் பண்பாட்டு

அடையாளங்களாகக் கண்டு சொல்வதைத் தனது இலட்சியமாகக் கொண்டுள்ளது. இத்தகைய செயல்பாட்டின் மூலம் வரலாறு மறுக்கப்பட்ட இந்த மக்களின் வரலாற்றை மறுகட்டமைப்புச் செய்ய முடியுமென்று மள்ளரியத் தத்துவம் நம்புகின்றது.

## மள்ளர் மரபு மறுகட்டமைப்பு

அதிகாரங்கள் பல இருக்கின்றன. அதைப் போலவே வரலாறுகளும் பல இருக்கின்றன. ஒற்றையான ஒரு அதிகாரம் என்பது எப்படி இல்லையோ அதே மாதிரி ஒரு வரலாறு என்பதும் இல்லை. . . வரலாறு என்று சொல்லக் கூடாது. வரலாறுகள் என்றுதான் சொல்ல வேண்டும். வரலாறு என்பது நேரான தொடர்ச்சியான நிகழ்வு என்றும் அதில் காலவரிசைப்படி உண்மைகளும் தகவல்களும் அடுக்கி வைக்கப் பட்டிருக்கின்றன என்றும் நம்பப்படுவது பழைய கருத்தியல். ஃபூக்கோ இதை மறுத்தார். வரலாறு என்று ஒற்றையாக எதுவும் இல்லை. வரலாறுகள் என்று பன்மைப்படுத்தப்பட்ட பல வரலாறுகள்இருக்கின்றன. முறைமைப் படுத்தப்பட்டவர்களுக்கும், விலக்கி வைக்கப்பட்டவர்களுக்குமான இடையில் நிகழ்ந்த நிகழ்வுகளே வரலாறுகள். வரலாறுகளின் தொடர்ச்சி என்றார் அவர். இச்சிந்தனை ஓர் இலக்கியத்தை, வரலாற்றை இப்படித்தான் பார்க்க வேண்டும். பொருள்கொள்ள வேண்டும் என்று இருந்த பழைய சிந்தனை மரபை உடைத்துப் போட்டதோடல்லாமல் உலகில் இதுவரை கட்டிக் காக்கப்பட்டுவந்த எல்லா ஒழுங்குகளையும் கேள்விக்குள்ளாக்கியது. எல்லாவற்றிலும் ஒழுங்கை வடிவமைக்க முயன்ற அமைப்பியலிலிருந்து (Structuralism) தோன்றிய பின் அமைப்பியல் (Post Structuralism) எல்லா ஒழுங்குகளும் கட்டவிழ்ப்பு (De-construction) செய்யப்படுவதற்கானதே என்று ஒரு கருத்தை முன் வைத்தபோது ஒழுங்குகள், அதிகாரம் எல்லாம் கேள்விக்குள்ளாக்கப்பட்டு விமர்சிக்கப்பட்டன. எந்த ஒன்றிலும் ஒரு ஒழுங்கு (order) என்பது இருக்க வாய்ப்பில்லை. எல்லா ஒழுங்குகளும் ஏதோ ஒரு அடக்கு முறையை மறைத்துக் கொண்டே அமைகின்றன. அதனால் கலை, இலக்கியம், வரலாறு என்பதிலும் தனியான அதிகார அமைப்பு (Power centre) இருக்க முடியாது. அந்த அதிகார மையம் உடைக்கப்பட வேண்டும். வாழ்க்கையில் மனிதன்தான் மையம். அவனை ஒதுக்கி விட்டுவிட்டு நிலைபெற முடியாது என்ற கேள்வியுடன் எழுந்த பின் - நவீனத்துவம் (Post Modernism) இதற்கு முன்பு யதார்த்தம் என்று சொல்லி வடிவமைக்கப்பட்ட

எல்லாக் கட்டமைப்புக்களையும் கேள்விக்குள்ளாக்கி மறுகட்டமைப்புச் செய்ய வழி ஏற்படுத்தித் தந்தது. ஏனென்றால் எல்லா ஒழுங்குகளுமே திட்டமிட்டுக் கட்டமைக்கப்பட்டது என்பதைப் பின் - நவீனத்துவம் புரிய வைத்தது. ஆக இதிலிருந்து ஒடுக்கப்பட்ட மக்களும், பெண்களும் தமக்கான அடையாளம் பிறரால் கட்டமைக்கப்பட்டதே, இந்தக் கட்டமைப்பிற்கு நிலையான அர்த்தமோ, உண்மையோ என்று எதுவும் இல்லை. எனவே இருக்கிற எல்லாவற்றையும் கலைத்துப்போட்டு அதிகாரமையம், அறம், ஒழுக்கம், உண்மை, மதிப்பீடுகள் என்ற எதையும் தீர்மானிப்பதற்கான பொது ஆதாரம் எதுவும் இல்லை. எல்லாமே விமர்சனத்திற்கும் மறுவாசிப்பிற்கும் உட்பட்டதே என்று பின் நவீனத்துவத்தின் வெளிச்சத்தில் தேடத் தொடங்கியிருக்கின்றார்கள். இத்தகைய தேடலின் ஒரு முயற்சிதான் இந்த நூல்.

பள்ளு இலக்கியங்களில் குடும்பன் வரவு (பாட்டுடைத் தலைவன்), மள்ளத்தியர் உரையாடல் (மூத்தபள்ளி-இளையபள்ளி), சமயம் (சைவம், வைணவம்) மேல், கீழ் என்பது மட்டுமே இடம் பெற்றிருப்பதாக ஒரு கருத்து பெருங்கதையாடலாக முன்வைக்கப்பட்டிருந்தது. இந்தக் கதையாடல்கள் என்ன செய்கின்றன என்றால் உழைக்கும் மக்களின் அடையாளங்களைப் பிரதிக்குள்ளிலிருந்து மேல் எழாமல் பார்த்துக் கொள்ளும் வேலையைச் செய்கின்றன. இங்குத்தான் பின் நவீனத்துவம் உண்மையாகவே வருகிறது. எப்படி என்றால் இதுவரை சொல்லப்பட்டு வந்த கதையாடலை (Narrative) புறக்கணித்துவிட்டு உண்மையான அடையாளங்களுடான பிரதிகளைப் பிரதிக்கு வெளியே கொண்டு வந்து விட்டுவிடுகிறது. அங்கே ஓர் அற்புதம் நிகழ்கிறது. வரலாற்றுக்கு வெளியே தள்ளப்பட்டவர்கள் வரலாற்று மனிதர்களாக இயல்பாக எழுகிறார்கள்.

"மள்ளர் யார்? (பள்ளர் யார்?) என்ற கேள்விக்கு விடையாக

மருதநில மக்கள் இவர்கள்
நெல்லின் மக்கள் இவர்கள்
சேற்றுக்கால் செல்வர்கள் இவர்கள்
ஏருடன் பிறந்தவர்கள் இவர்கள்
மழையின் மக்கள் இவர்கள்
கழனிக் காவலர்கள் இவர்கள்

செந்நெல் முதுகுடியினர் இவர்கள்
அருந்திறல் வீரர் இவர்கள்
பெருந்திறல் உழவர் இவர்கள்
வேந்தன் மரபினர் இவர்கள்

என்று அடையாளம் காணப்பட்டு வரலாற்றுக்குள் வந்து சேர்ந்து விடுகிறார்கள். ஒடுக்கப்பட்ட மக்களுக்கான உடனடியான பிரச்சினை தனக்கான அடையாளத்தைக் கட்டமைப்பதில்தான் உள்ளது. அந்த வகையில் பள்ளு இலக்கியம் தமிழ் இலக்கியப் பரப்பு முழுவதையும் தன்னுள் பொதிந்து காட்டி மள்ளர்களுக்கான ஒரு வரலாற்றைக் கட்டமைத்துத் தந்துவிடுகிற அதிசயத்தைச் செய்துவிடுகிறது. இப்படியான ஒரு மறுகட்டமைப்பை நான் இங்கே செய்கையில் எனக்கும் இந்தப் பிரதிக்குமான வாசிப்பு அனுபவத்தை உங்களோடு பகிர்ந்து கொள்கின்றேன்.

## பள்ளுப் பிரதிகள் எனது வாசிப்பு அனுபவம்

பள்ளு நூல்களில் நெல் வேளாண்மை செய்யும் பள்ளர்களின் வாழ்வியல் பேசப்பட்டுள்ளது என்று மட்டுமே நான் முதுகலைத் தமிழ் படிக்கையில் தெரிந்திருந்தேன். கூடுதலாக "நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது" என்ற பழமொழியும் தெரிந்து வைத்திருந்தேன். இதன் பின்னர் நான் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி மாணவராகப் பணியாற்றுகையில் இந்நூல்கள் நாயக்கர் ஆட்சிக்காலத்தில் நிறைய எழுதப்பட்டன என்றும் இம்மக்கள் இக்காலக்கட்டத்தில் அடக்கி ஒடுக்கப்பட்டார்கள் என்றும் பல வரலாற்றறிஞர்களின் கருத்துக்களிலிருந்து தெரிந்தேன். அதுவரை யாரும் பள்ளு நூல்களில் இடம் பெற்றுள்ள மள்ளர் என்ற சொல் இவர்களையே குறிக்கும் என்று சொல்லாததாலும் அப்பிரதிகள் அதிகம் படிக்கக் கிடைக்காததாலும் முக்கூடற்பள்ளு என்ற ஒரு நூலை மட்டும் ஆசிரியர்கள் அடிக்கடி எடுத்துக் காட்டுவதிலிருந்து தெரிந்து எடுத்துப் படித்திருக்கின்றேன். அப்போதைக்கு 1980-1989 களில் இப்பிரதியைப் படிக்கையில் நமது சமூகம் பற்றிய ஒரு நூல் இருக்கின்றது. அதில் நாமும் ஏதோ ஒருவகையில் அடையாளப்படுத்தப் பட்டிருக்கின்றோம் என்ற உணர்வுகள் மட்டுமே இருந்தன என்பது மட்டுமே உண்மை. அதன்பின்னர் 1990களில் பாரதியார் பல்கலைக்கழகத்தில் ஆசிரியர் பணியில் சேர்ந்த பின்னர் நாட்டுப்புறவியல் ஆய்வுகளில்

கவனம் செலுத்தினேன். இந்நிலையில் 1993களின் தொடக்கத்தில் கோவையில் முனைவர் குருசாமிசித்தரை திரு. சு. மனோகரன் (தொலை தொடர்புத்துறை அதிகாரி) மூலம் சந்திக்க நேர்ந்தது. நான் அவரைச் சந்திக்கையில் "தேவேந்திர இலக்கிய மன்றம்" என்ற ஓர் அமைப்பை நிறுவி அதன்மூலம் பல சமூகப் பணிகளைச் செய்வதுடன் தமிழ் இலக்கியத்தில் மள்ளர்களின் வரலாறுகளை மீட்டுருவாக்கம் செய்யும் பணியிலும் அவர்கள் ஈடுபட்டு வந்தார்கள். இயல்பிலேயே நான் தமிழாசிரியன் என்பதால் இவரின் வரலாற்றுத் தேடல் எனக்கு மிகவும் பிடித்துப் போனது. இதன் பின்னர் நாங்கள் நாள்தோறும் சந்தித்துப் பேசத் தொடங்கினோம். எங்கள் தேடல் மள்ளர்களின் அடையாள மீட்பாக உருப்பெற்றது என்றே சொல்ல வேண்டும். இங்கே இவரை நான் சரியாக அறிமுகம் செய்வது என் கடமை.

## அறிஞர் குருசாமி சித்தரின் மள்ளரியப் பணியும் மறுவாசிப்பு அணுகு முறையும்

பொறியியல் அதாவது கட்டடத்துறையில் வல்லுநரான முனைவர் குருசாமி சித்தர் அமெரிக்காவிலுள்ள கனக்டிக்ட் பல்கலைக்கழகத்தில் 1976 இல் பிஎச்டி பட்டம் பெற்றவர். தமிழ்நாடு அரசு பொறியியல் கல்லூரிகளில் 1964 முதல் 1984 வரை பேராசிரியராகப் பணியாற்றியவர். இயல்பாகவே தமிழ் இலக்கிய வாசிப்பில் ஆர்வமுள்ள இவரின் கைகளில் 1990வாக்கில் அறிஞர் தேவ ஆசிர்வாதத்தின் 'மூவேந்தர் யார்" (1977) "வேளாளர் யார்"? (1981) "பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர்" (1991) ஆகிய நூல்கள் கிடைக்கப்பெற்றன. இந்நூல்களின் கருத்துக்களில் தாக்கம் பெற்ற குருசாமி சித்தர் தமிழ் இலக்கியம் முழுவதிலும் மள்ளர்களின் வரலாற்று அடையாளங்களைத் தேடத் தொடங்கியிருந்தார். இவை எனக்குள் ஒரு வியப்பை உண்டாக்கியன. தேவ ஆசிர்வாதத்தின் நூல்களை நானும் 1993களில் படிக்கத் தொடங்கியிருந்தேன். அச்சமயத்தில் குருசாமி சித்தர் எழுதிய "தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திரகுல வேளாளர்" (அடிப்படைச் சான்றுகள்) எனும் நூல் டிசம்பர் 1993இல் வெளியானது. இந்நூல் மள்ளர்களின் வரலாறுகளுக்கான சிக்கல்மிக்க முடிச்சுகளை ஒரே வெட்டாக வெட்டி வீழ்த்தி தமிழ் இலக்கியப் பரப்பில் **"மள்ளர் மரபே"** - இவர்களின் பூர்வீக வரலாறு என்று தமிழகம் அறியச் செய்தது. இதற்கு முன்பே அறிஞர் தேவ ஆசிர்வாதம் சங்க இலக்கியத்தில் வரும் மள்ளர்களே இன்றைய "பள்ளர்கள்" இவர்களே மூவேந்தர்

மரபினர் ஆவர் என்று வரலாற்று நூல்கள் மற்றும் ஆவணங்களிலும், மக்கள் ஆவணக்குறிப்புக்களிலும், இலக்கியங்களிலும் தேடி ஒரு கருத்தியலை முன்வைத்திருந்ததற்கு அரண்செய்யும் ஆவணமாக இந்த நூல் அமைந்தது. இதற்குள் நானும் தேவ ஆசிர்வாதம், குருசாமிசித்தர் ஆகியோரின் மள்ளரியச் சிந்தனைக்குள் வந்து படிக்கத் தொடங்கியிருந்தேன். இச்சூழலில் குருசாமிசித்தரின் வீடு மள்ளரியப் படிப்புப் பட்டறையாக மாறியது. "மள்ளர் மலர்" என்ற ஒரு சமூக இதழை வெளியிட்டார். அதில் மள்ளர்களின் வரலாறுகள் குறித்து எழுதினார். "**தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்**" என்ற ஓர் ஆய்வு நிறுவனத்தை நிறுவினார். இதில் நான் செயலாளராகப் பணியாற்றும் வாய்ப்புப் பெற்றேன். இந்நிறுவனம் மள்ளர்களின் வரலாறுகளை மீட்டுருவாக்கம் செய்யும் பணியில் தன்னை முழுவதும் கரைத்தது. தமிழகம் முழுதும் பல பேராசிரியர்கள் இந்நிறுவனத்தில் இணைந்து பணியாற்றினர். நூல்கள் வெளியிடுவது, அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவது என்று தொடர்ந்து பணிசெய்தது. தமிழகம் முழுவதிலிருந்தும் 50க்கும் மேலான பேராசிரியர்கள் இவ் ஆய்வு மன்றத்தில் 1995ல் தொடங்கிப் பல சொற்பொழிவுகளை ஆற்றினர். இதில் இடம்பெற்ற முதல் சொற்பொழிவு மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் சு. வேங்கடராமன் நிகழ்த்திய "**பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள்**" என்பதாகும். இதனைத் தொடர்ந்து மேனாள் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் முனைவர் மேஜர் கதிர் மகாதேவனின் "**ஏர்க்கள மள்ளரும் போர்க்கள மள்ளரும்**" என்பது தொடங்கி, தமிழ் இலக்கியம் சார்ந்து முனைவர் இரா. மோகன், முனைவர் மு. மணிவேல் (ம.கா.ப.கழகம்), முனைவர் கமலி கஜேந்திரன் (அன்னை தெரசா பல்கலைக்கழகம்), முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம், முனைவர் அ. அறிவுநம்பி (புதுவைப் பல்கலைக்கழகம்), முனைவர் கி. இராசா (பாரதிதாசன் பல்கலைக்கழகம்), முனைவர் பெ.மாதையன் (தஞ்சை), முனைவர் பிச்சை (காந்தி கிராமம்) என்று பலர் மள்ளர்களின் வரலாற்றை மருதநில மரபாய் மீட்டுருவாக்கம் செய்து தந்தார்கள்.

வரலாறு, கல்வெட்டுத்துறை சார்ந்து முனைவர் நாகசாமி, முனைவர் நடனகாசிநாதன், முனைவர் மகேஸ்வரன், முனைவர் கருணானந்தம் போன்றோர் மள்ளர் அடையாளங்களை வரலாற்றில் கண்டு சொன்னார்கள். மள்ளர் - பள்ளர் குறித்த

மொழியியல் ஆய்வுரைகளை முனைவர் சி. சண்முகம், முனைவர் சிவசண்முகம், முனைவர் வே.தயாளன் (பாரதியார் பல்கலைக்கழகம்) ஆகியோரும் மானுடவியல் சார்ந்த உரைகளை முனைவர் பக்தவச்சலபாரதி (புதுவை), முனைவர் ஆ.செல்லப்பெருமாள், முனைவர் தர்மராஜ் (பாளையங்கோட்டை) புலவர் கி.ஆ. குப்புராசு (கோவை) ஆகியோரும் நிகழ்த்தினர். நாட்டுப்புறவியல், சமூகவியல் சார்ந்த உரைகளை முனைவர் தே. லூர்து, முனைவர் இ. முத்தையா (மதுரை), முனைவர் ஆறு இராமநாதன் (தஞ்சை), முனைவர் ஆ. மருததுரை (திருச்சி), முனைவர் ஓ. முத்தையா (காந்திகிராமம்), முனைவர் சுப்பிரமணியன் (பழனி), முனைவர் கஸ்தூரி (குற்றாலம்) என்று விரியும் இந்தச் சொற்பொழிவு வரிசை வரலாறு, கல்வெட்டு, இலக்கியம், நாட்டுப்புறவியல், மொழியியல், மானுடவியல் என எல்லாத் தளத்திலும் மள்ளர்களின் அடையாளத்தை மருதநில மரபாக மீட்டுத் தந்தது. இதற்கிடையில் இம்மன்றம் பல நூல்களை வெளியிட்டது. இதன் இடைப்பட்ட காலத்தில் முனைவர் குருசாமி சித்தருடன் சேர்ந்து ஒரு முழுமைபெற்ற மள்ளரியக் கோட்பாட்டாளனாக நான் மாறியிருந்தேன். தலித் சிந்தனை விவாதம், மள்ளரிய இலக்கியம், சுந்தரலிங்கக் குடும்பனார் வரலாறு, இந்திரவிழா எனும் நாற்று நடவுத் திருவிழா, மள்ளர் சமூக வரலாறு என்பதாகப் பல நூல்களை மள்ளரியச் சிந்தனையுடன் எழுதி வெளியிட்டேன். இந்நிலையினூடே 1996இல் பல்கலைக்கழக மானியக்குழு (UGC) “தமிழ் இலக்கியத்தில் தேவேந்திரகுல வேளாளர் வரலாறும் பண்பாடும்” எனும் தலைப்பில் நான் சமர்ப்பித்திருந்த பேராய்வுத் திட்டத்திற்கு (Major Project) ரூ.3,30,000 (மூன்று லட்சத்து முப்பதாயிரம்) வழங்கியது என்னை மேலும் ஊக்கப் படுத்தியதோடு மள்ளர்களின் வரலாறுகளைத் தேடும் பணியில் என்னை ஈடுபடக் காரணமாக்கியது. நான் நாட்டுப்புற வழக்காறுகளை மள்ளர் வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்வதற்கு நிறையப் பயன்படுத்தினேன். அச்சமயத்தில் தான் இம்மக்களிடம் உழத்திப்பாட்டு, பள்ளுப்பாட்டு போன்றன வாய்மொழி வழக்கில் வழக்கிலிருப்பதை அறிந்தேன். இந்நிலையில் என்னிடம் பிஎச்டி ஆய்வு செய்த முனைவர் சி. பரமேஸ்வரி, முனைவர் வே. செல்வராசு போன்றோர் இம்மக்கள் குறித்த வழக்காறுகளில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றிருந்தனர். இத்தகைய அனுபவங்களெல்லாம் என்னை இம்மக்களிடமிருக்கிற வாய்மொழி வழக்காறுகளைத் தொகுப்பதற்குத் தள்ளின.

அப்பொழுது நான் கண்டது வியப்புடையது. பள்ளு நூல்களில் இடம்பெறும் பல பாடல்களை இம்மக்கள் உழத்திப்பாட்டு, இந்திரவிழாப்பாட்டு, உழவுப்பாட்டு, ஏர்மங்கலப்பாட்டு என்று பாடினார்கள். இந்த அனுபவத்துடன் தான் பள்ளு நூல்களைப் படிக்கத் தொடங்கினேன். அதற்கு முன்பெல்லாம் 1995 முதல் 2000வரை பள்ளுப் பிரதியைப் படிப்பதில் எனக்கு ஆர்வம் அதிகம் இருந்ததில்லை. காரணம் எல்லா நூல்களும் ஒரே மாதிரியாக அமைவதால் இருந்திருக்கலாம். இதற்கிடையில் முனைவர் குருசாமிசித்தர் பள்ளு இலக்கியங்களை மள்ளரிய நோக்கில் வாசிக்கும் ஒரு வாசிப்பு முறையை மள்ளர் மலர் மூலம் தொடங்கி வைத்திருந்தார். இந்த வாசிப்பு முறையைப் பின் நவீனத்துவ வாசிப்பு முறை என்று என்னால் அப்பொழுது கண்டுகொள்ள முடிந்தது. அது இயல்பாகவே அவருக்குள் இருந்ததென்றே சொல்லவேண்டும். ஏனென்றால் பின் நவீனத்துவம் முதன்முதலில் கட்டடக் கலையில்தான் மேலை நாடுகளில் தொடங்கியது. ஒரே கட்டடத்தை பழைய காலத்ததாகவும், நவீனக் காலத்ததாகவும் Architect - முறையில் அதாவது Civil Construction, DE-Construction, RE - Construction Engineer கட்டுவதைப் போன்றதுதான் பின் நவீனத்துவம் எப்படி என்றால் பழைய வாசிப்பு முறையில் நவீனச் சிந்தனையைக் கலந்து மரபுவழி வாசிப்பை வெளிவர முடியாமல் செய்து விடுவது. இதனை இவர் இலாவகமாகச் செய்தார். இவரின் வாசிப்பு பின் நவீனத்துவ வாசிப்பே ஆகும். எனக்கானதை நான் எடுத்துக்கொள்கின்றேன். எனக்கு ஒத்துவராததை ஒத்தி வைத்துவிடுகின்றேன் (Deffer) என்ற பின் நவீனத்துவப் பார்வை அவருடையது. இங்கே மள்ளரிய நவீனச் சிந்தனையாளர் த. செயகுமாரின் தலித் மள்ளரிய நோக்கில் (2001) என்ற நூலும் மள்ளரியம் கவிதைகளும் கட்டுரைகளும் (2004) என்ற நூலும் மள்ளரியக் கோட்பாட்டை நவீனத்துவ இலக்கியங்களுடன் தொடர்புபடுத்தியதை நினைவுகூர்கிறேன்.

1981இல் வெளிவந்த கோ. கேசவனின் "பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை" - மிகக் குறைவான புரிதலோடு பிரதியில் இருக்கும் பல சான்றுகளை மேல் எழும்பாமல் (மள்ளர், மருதநில மரபு, வேந்தன் மரபினர், நெல்லின் மக்கள்) பார்த்துக் கொண்ட ஒரு சுயசார்பு வாசிப்பாகும். தமிழகம் முழுவதும் பரவி வாழும் மிகப்பெரிய ஒரு வேளாண் சமூகத்தைக் கீழத் தஞ்சைப் பகுதியில் மட்டுமே வாழும் ஒரு வேளாண் கூலிச்சமூகம் என்று

கொண்டு, தான் சார்ந்திருந்த மார்க்சிய அணுகுமுறைக்கு ஏதுவாக மேல்வர்க்கம் / கீழ்வர்க்கம் என்று எழுதிச் செல்கின்றார். அவரே மள்ளர்களின் சமூக எழுச்சிக்குப் பின்பு அதாவது 1990க்குப் பின்னர் இந்தக் கருத்தை மாற்றிக் கொண்டதாக மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் (1998 வாக்கில்) நடந்த ஒரு கருத்தரங்கில் நேரில் என்னிடம் (நூலாசிரியர்) சொல்லியதை இங்கே நினைவுகூர விரும்புகின்றேன். மேலும் முனைவர் குருசாமி சித்தருக்கும் தனது கருத்து நிலையில் ஏற்பட்ட மாற்றம் குறித்து ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்கடிதம் அவர் உயிரோடு இருக்கும் காலத்திலேயே (சனவரி 1998) மள்ளர் மலரில் வெளியிடப்பட்டது என்பதையும் ஒரு பதிவாக இங்கே செய்ய விழைகின்றேன். இப்பதிவில் எனது நூல் வெளியீட்டுக்குப் பின் மள்ளர் குறித்த பல கல்வெட்டுக்களைப் படித்ததாகவும் எனது கருத்து ஒரு கருதுகோள்தான்; திரும்பப் பெறுகிறேன் என்றும் போகிறது அவரது மடல்.

பள்ளுப் பிரதிகளை மள்ளரிய நோக்கில் வாசிக்கும் முறையில் எழுதப்பட்டதே சு. வேங்கடராமனின் "பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபுகள்" (1998) எனும் நூலாகும். இதேபோன்று எனது மேற்பார்வையில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கண்ட கு. மாரியப்ப மள்ளர் பள்ளு இலக்கியத்தை மள்ளரிய நோக்கில் மறுகட்டமைப்புச் செய்து "மருதநிலத்து மள்ளர் இசை" என்று ஒரு நூலாக வெளியிட்டுள்ளார். தொடக்கக் காலத்தில் அதாவது 1980களுக்கு முன்பு முனைவர் ந.வீ. செயராமன் பள்ளு இலக்கியம் எனும் நூலில் பள்ளு இலக்கியங்களில் இடம்பெறும் வேளாண் மரபுகளை மட்டும் தொகுத்து எடுத்திருக்கின்றார். இந்த முறைகூட ஒரு சிறந்த வாசிப்பு முறைதான் என்று நாம் கொள்ள முடியும். என்னிடம் இப்பொழுது 25 பள்ளு நூல்களில் சில நூல்வடிவிலும் சில நகல் வடிவிலும் (Xerox) உள்ளன. அவை முறையே 1.முக்கூடற்பள்ளு, 2.மோகனப்பள்ளு, 3. சிவசயிலப்பள்ளு, 4. திருமலை முருகன் பள்ளு, 5. வையாபுரிப் பள்ளு, 6. செண்பகராமன் பள்ளு, 7. கண்ணுடையம்மன் பள்ளு, 8. பறளை விநாயகர் பள்ளு, 9. கதிரை மலைப்பள்ளு, 10. தண்டிகை கனகராயன் பள்ளு 11. சிங்காபுரிப் பள்ளு, 12. மாந்தைப் பள்ளு, 13. தென்புதுவைப்பதி தேவாங்கப் பள்ளு, 14. கோட்டூர் நயினார் பள்ளு, 15. கஞ்சமிச் செட்டியார் பள்ளு, 16. பொய்கைப் பள்ளு, 17. எட்டையபுரப்பள்ளு, 18. மக்காப்பள்ளு, 19. நரசிங்கப்பள்ளு, 20. மாவைப்பள்ளு, 21. சாமிநாதப்பள்ளு, 22. திருவேட்டை நல்லூர்

அய்யனார் பள்ளு, 23.மோரூர் நல்ல புள்ளியம்மன் பள்ளு, 24. செங்கோட்டுப் பள்ளு, 25. வேதாந்தப் பள்ளு, முக்கூடற்பள்ளு நாடகம் ஆகியன ஆகும்.

இவற்றை நான் இங்கே முழுவதும் வாசித்துச் சொல்ல முயலவில்லை. சமூகப் பண்பாட்டு நோக்கில் மள்ளர்கள் பண்பாட்டு மேலாண்மையைப் புரிய உதவும் சில பிரதிகளை அடையாளம் காட்டி அவற்றை விளங்கிக்கொள்ள பிரதிக்கு வெளியிலிருந்து நிறையச் சான்றுகளைப் பள்ளுப் பிரதிக்கான (Co-Text) ஆகக் கொண்டு வந்து சேர்க்கும் பணியை மட்டும்தான் இங்கே நான் மேற்கொள்ளவிருக்கின்றேன். இதனால் என்ன நேருமென்றால் பள்ளுப் பிரதியில் மேல் + கீழ் என்று ஆசிரியனால் உலவ விடப்பட்டுள்ள ஒரு சில பிரதிகள் வலுவிழந்துபோய் மறைக்கப்பட்ட மள்ளர்களின் வரலாறு அதாவது விளிம்புநிலை வரலாறு பள்ளுப் பிரதியின் மையத்திற்குள் பயணம் செய்ய ஏதுவாக அமையும். இந்த மறுவாசிப்பு எல்லையில்லாதது என்பதால் ஒரு சில எல்லைக்குள் நான் நின்று கொள்கின்றேன்.

## அடிக்குறிப்புகள்

1. Rober Diyanni, Reading Fiction, Poetry and Drama, pp.1360-1370.

   இந்நூலில் இடம் பெற்றுள்ள மறுவாசிப்பு மற்றும் வாசகர் அனுபவக் கோட்பாடு குறித்த செய்திகள் இப்பகுதியில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இப்பகுதியைத் தமிழில் ஆக்கம் செய்யத் துணை புரிந்தவர் பேராசிரியர். எம்.பரணிதரன் (ஆங்கிலப் பேராசிரியர், குமர குரு இன்ஜினியரிங் கல்லூரி கோவை) ஆவார்.

2. ஞானசேகரன், தே., மள்ளரியமும் இலக்கியமும், ப.30.

3. செயகுமார், த., தலித் மள்ளரிய நோக்கில், பக். 19-20.

4. ஞானசேகரன், தே., மு.கா.ப., ப. 40.

5. ஆனந்தகுமார், பா., பின்னைக் காலனித்துவம் - ஒரு பொது அறிமுகம், (கட்டுரை) இரா. சந்திரசேகரன் (ப.ஆ.) தமிழ் இலக்கியக் கொள்கைகள், ப. 123.

# 2. பள்ளு இலக்கிய வகைமை-தோற்றமும் வளர்ச்சியும்

சங்க இலக்கியங்கள் தோன்றிய காலம் வீரயுகக் காலம் என்றும் காப்பிய இலக்கியங்கள் தோன்றிய காலம் பேரரசுகளின் காலமென்றும் சிற்றிலக்கியங்கள் தோன்றிய காலம் குறுநில மன்னர்களின் ஆட்சிக் கால மென்றும் பொதுவாகச் சொல்லுவர். இவ்வகையில் தோன்றிய இலக்கிய வகைகளில் அந்தந்தக் கால மக்களின் சமூகப் பண்பாட்டு வரலாறு இடம் பெற்றிருப்பது வெளிப்படை. சிற்றிலக்கியங்கள் தோன்றிய காலக்கட்டமான 15, 16-ம் நூற்றாண்டுக்காலம் தமிழகத்தில் வேற்று மொழியாளர்களின் ஆட்சி நிலை பெறத் தொடங்கிய காலம். அதாவது தெலுங்கு நாயக்கமன்னர்களின் ஆட்சி நடந்த காலம். இக்காலத்தில் அதாவது கி.பி.16ஆம் நூற்றாண்டுவாக்கில் தோன்றிய சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று பள்ளு இலக்கியம். இப்பள்ளு இலக்கியம் நெல் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருக்கும் மள்ளர் (பள்ளர்) களின் வாழ்வியலையும் பண்பாடுகளையும் நெல் வேளாண்மைத் தொழில் நுட்பங்களையும் எளிய நடையில் விளக்கும் நூல் ஆகும்.

### புதிய இலக்கிய வகைமையின் தோற்றம்

ஜெர்மானிய அறிஞரான கதே (Goethe - 1800) என்பார் பயிரினங்களுக்கு மூலம் ஒன்று இருந்தது போல, இலக்கிய வகைகளுக்கும் மூலம் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்று நம்பினார். இம் மூலத்திலிருந்தே பல்வேறு இலக்கிய வகைகள் தழைத்திருக்க வேண்டும் என்று கூறினார். இம்முறையில் காப்பியம், இசைப்பாடல், நாடகம் ஆகிய மூன்றும் அடிப்படை வகைகள் என அவர் கண்டார். இலக்கியத்தில் கூர்தலற வளர்ச்சி (Evalution of Literature 1911) என்று எழுதிய மெக்கன்சி என்பார் அனைத்து இலக்கிய வகைகளுக்கும் மூலமாக இருப்பது ஆதி இனக்குழு மக்களின் வாய்மொழிப் பாடல்களே என்ற கருத்தைத்

தெரிவித்துள்ளார். தமிழில் இசைக்கூத்து வடிவத்தையே ஆதிவடிவமாகக் கருதும் சிந்தனையும் இங்குக் குறிப்பிடத்தக்கது. இலக்கியங்களெல்லாம் தோன்றாத மிகப் புராதன காலத்தில் இத்தகு இசைக்கூத்து மட்டும் நடைபெற்றிருத்தல் வேண்டும் என்று தமிழ் இலக்கியத் திறனாய்வாளர் கருதுவர்.[1] சங்க கால இலக்கியங்கள் அனைத்தும் மக்களிடம் வழக்கிலிருந்த வாய்மொழிப் பாடல் வடிவிலிருந்து எழுந்தவை என்பதை "கலிப்பாவும் பரிபாடலும் வரிப்பாடலும் அகவலும் தொன்மை மிக்க பா வடிவங்கள். இவை வரலாற்றுக் காலத்துக்கு முந்திய, வாய்மொழிப் பாடல்களிலிருந்து தோன்றிய சிறப்பிற்குரியவை. ஆடலோடு கூடிய இவற்றில் இசைத் தன்மை மிகுதி, தொழிலோடும் செயலோடும் தொடர்புடையவை. இவற்றிலிருந்தே ஏனைய பாக்களும் பாவினங்களும் கிளைத்துள்ளன. இவற்றிலுள்ள வாய்மொழிப் பண்புகளைக் கண்டு கொள்ள வேண்டும்."[2] என்று கூறும் தமிழண்ணலின் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது. பள்ளுப் பாடல்கள் உழத்திப் பாட்டு என்று தான் பாட்டியல் நூல்களில் (பன்னிரு பாட்டியல், நவநீதப்பாட்டியல்) பெயர் பெறுகிறது. வேளாண் தொழிலின் அடிப்படையில் அமைந்த இந்த உழத்திப்பாட்டு, இலக்கிய வகைமைக்கு நேரடியான இலக்கியச் சான்றுகள் (நூல்கள்) எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை

ஆனால் சில பள்ளு நூல்கள் "உழத்திப்பாட்டு" என்று அடையாளப்படுத்தப்படுகின்றன. காட்டாக மாந்தைப் பள்ளு நூல் மாந்தை உழத்திப்பாட்டு என்றே அச்சில் வெளிவந்திருப்பது கருதத் தக்கது. காரணம் இக்காலக் கட்டத்தில் "பள்ளு" என்ற சொல் வழக்கிலில்லை என்பதே ஆகும். இக்காலக் கட்டம் வரை 16-ஆம் நூற்றாண்டு வரை மருதநில உழவர்கள் மள்ளர் என்றே இலக்கியங்களில் பெயர் பெறுகின்றனர். பள்ளர் என்பது 16-ம் நூற்றாண்டு வாக்கில்தான் முதன்முதலில் பள்ளு நூல்களில் இடம் பெறக் காண்கின்றோம். அதிலும் பள்ளு நூல்களில் முதன் நூலாகக் கருதப்படும் முக்கூடற்பள்ளு "பள்ளர்" என்று இவர்களை அழைப்பதை முக்கூடற்பள்ளு நூலின் முதன்மைப் பாத்திரமான வடிவழகக் குடும்பன் ஏற்காது மறுப்பதை இந்நூலின் ஆசிரியரே பதிவு செய்கின்றார். அப்பகுதி வருமாறு:

"பக்கமே தூரப் போயும்
தக்க சோறென் வேளாண்மை

பள்ளா பள்ளா என்பான் மெய்
கொள்ளாதவர் . . . . . . . . . ."

(முக்கூடற் பள்ளு - 15)

இப்பிரதியின் பொருள் "பள்ளர்" என்ற சொல்லை "மள்ளர்கள்" ஏற்க மறுத்து வந்திருப்பதையே காட்டுகிறது. பள்ளர் என்பது இவர்களின் வழிவழியான பெயராக இருந்திருந்தால் இப்பெயரால் பிறர் தம்மை அழைப்பதில் உயர்வு தாழ்வு கண்டிருக்க மாட்டார்கள். மரபு வழியில் இவர்களுக்கு வேறு பெயர் இருக்க "பள்ளர்" என்பது திடுமெனப் புழக்கத்தில் வரும்போது அதனை எதிர்ப்பது இயல்பாகவே இருந்திருப்பதையே மேற்கண்ட முக்கூடற்பள்ளுவின் பாடல் நமக்குக் காட்டுகிறது. அதே நேரத்தில் முக்கூடற்பள்ளுவில் முதன்முதலில் "பள்ளர்" என்ற சொல்லை அறிமுகம் செய்கையில்; இவர்கள் ஏற்கெனவே "மள்ளர்" என்று அறியப்பட்ட "மள்ளர் குலத்தினர்" தான் இப்பொழுது "பள்ளர்" ஆக அடையாளப்படுத்துவதையே

"மள்ளர் குலத்தில் வரினுமிரு பள்ளியர்க்கோர்
பள்ளக் கணவவெனின் பாவனை வேறாகாதோ"

(முக்கூடற் பள்ளு - 13)

என்ற பாடலின் வழி அறிகிறோம். இப்படியாக மள்ளர் தான் பள்ளர் என்று அறிமுகம் செய்து விட்டு மள்ளர், பள்ளர் என்ற இரண்டு சொல்லையுமே ஊடும் பாவுமாகப் பயன்படுத்துகின்றார் முக்கூடற்பள்ளு ஆசிரியர். இவர்களைப் "பள்ளர்" என்று அழைக்கும் வழக்கம் இல்லை என்பதே மேற்கண்ட பிரதி நமக்குத் தரும் வாசிப்பாக அமைகிறது. அதே நேரத்தில் இவர்கள் குடும்பன், பண்ணாடி, காலாடி, தேவேந்திர குலத்தான், இந்திரசாதியார், கடையர், கடைசியர், ஆற்றுக் காலாட்டியர், நீராணிக்கர், பருவகாரர், செந்நெல் முதுகுடியினர் என்றெல்லாம் பல பெயர்களில் பள்ளு நூல் தோன்றிய வட்டாரம் சார்ந்து அடையாளப்படுத்தப் படுவதைக் காண முடியும். இதிலிருந்து தமிழ் மண்ணில் நிலைபேறடைந்து விட்ட ஒரு சமூகத்தைத் திடீரென மாற்றுப்பெயரில் அடையாளப்படுத்துவதில் படைப்பாளனுக்குப் பெரிய சமூகச் சிக்கல் இருந்திருக்கின்றது. என்றும் தெரிய முடிகிறது. ஒன்றைக் குறிக்கப்பயன்படும் கருவிதான் மொழி. அதுவே பொருளாகி விடாது என்பதால் ஏற்கெனவே ஒரு குறிப்பானால் (மள்ளர்) அடையாளப்படுத்தப்

பட்ட ஒரு சமூகத்தை இன்னொருகுறிப்பானால் (பள்ளர்) அதாவது மொழியால் அடையாளப் படுத்துகையில் படைப்பாளன் அதை வாசகனுக்குப் புரிய வைக்க இரண்டையுமே பிரதிகளாகக் கட்டமைத்து உலவவிடுகின்றான். முக்கூடற்பள்ளு முழுவதிலும் மள்ளர் - பள்ளர் என்ற இரண்டு சொற்களில் மருதநில உழவர் அடையாளப்படுத்தப்பட்டு, பள்ளர் என்ற சொல் இவர்களுக்கான குலப்பெயராக நிலை நிறுத்தப்படுகின்றது. இதிலிருந்து "மள்ளர்" என்று 16-ம் நூற்றாண்டு வரை அறியப்பட்ட ஒரு சமூகம் "பள்ளர்" என்று ஆனபோது இவர்களிடம் வழக்கிலிருந்த உழத்திப் பாட்டு, பள்ளுப்பாட்டு, பள்ளுப் பிரபந்தம் என்று வழங்கியிருக்கலாம் என்று இங்கு நாம் புரிந்து கொள்ளலாம். காரணம் 16-ம் நூற்றாண்டு வரை பள்ளுப் பாடல் என்ற இலக்கிய வகை பாட்டியல் நூல்களில் காணப்படாதது இதனை உறுதி செய்யும்.

### நாட்டுப்பாடல் வடிவம்

பள்ளு நூல்களில் இடம்பெறும் பெரும்பாலான பாடல் வடிவங்கள் நாட்டுப்புற மக்களிடம் வழக்கிலிருக்கின்ற வேளாண் தொழிற் பாடல்களே என்றால் மிகையாகாது. உழவர்கள் உழவு உழுதலின் போது பாடும் ஏர்மங்கலப்பாட்டு, நடவுப்பாட்டு, களையெடுப்புப் பாட்டு, அறுவடைப் பாட்டு, பொலிப்பாட்டு, மழை வேண்டிப் பாடும் மழைப்பாட்டு எல்லாமே பள்ளுப் பாட்டில் இடம் பெறும் பாடல் வகைகளாகும். இது தொல்காப்பியர் குறிப்பிடும் எண்வகை வனப்புக்களில் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைவு ஆகியவற்றில் புலன் என்பதன் அடியொற்றியது என்று சொல்லப்படுகிறது. புலன் என்பதற்குத் தொல்காப்பியர்

> "சேரி மொழியாற் செவ்விதிற்கிளந்து
> தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
> புலனென மொழிப புலனுணர்ந் தோரே"
> (தொல். செய் - நூ - 233)

என்பார்.

"வழக்குச் சொல்லினானே தொகுக்கப்பட்டு, ஆராய வேண்டாமல் பொருள் விளங்குவது புலனென்னும் செய்யுளாம்" என இளம்பூரணர் இந்நூற்பாவிற்கு விளக்கம் வரைந்துள்ளார்.

"அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டுகொள்க" என இப்பகுதிக்குப் பேராசிரியர் விளக்கம் தருகிறார்.[3] இந்த உரைகளால் எளிய மக்கள் பேசும் எளிய மொழியமைப்புடன் கூடிய இலக்கியங்கள் தொல்காப்பியர் காலத்தில் வழங்கின என்பதையும் அவை புலன் என்னும் இலக்கிய வகையாகக் கூறப்பட்டன என்பதையும் உணரலாம். பள்ளு இலக்கியங்களும் எளிய மக்களின் வாழ்வியலை உணர்த்துபவை; எளிய மக்களின் சொல்லமைப்புக்களால் ஆனவை. நாடகச் செய்யுட்களாக மிளிர்பவை. எனவே இக்காலப் பள்ளு இலக்கியங்கள் தொல்காப்பியர் கூறிய புலன் என்னும் இலக்கிய வகையைச் சார்ந்தவை என்பது அறியத்தக்க செய்தியாம்[4] என்று ந.வீ. செயராமன் கூறும் கருத்து ஏற்புடையது என்றாலும் தொல்காப்பியர் மக்களிடம் வழக்கிலிருந்த நாட்டுப்புறப் பாடல் வடிவங்களைத்தான் புலன் என்கின்றார் எனலாம். பள்ளுப்பாட்டு நாட்டுப்பாடல் வடிவில் அமைந்ததால் வேண்டுமானால் அதனைப் புலனுடன் ஏற்கலாமே தவிர ஒரு ஆசிரியனால் திட்டமிட்டுச் செய்யுளாக்கப்பட்டுள்ள பள்ளுப்பாட்டை புலனென்று முழுவதும் கொள்ள முடியாது. காரணம் பள்ளுப் பாடல்களில் இடம் பெறும் பல செய்யுட்கள் எளிதில் பொருள்புரியும்படி இல்லை என்பதே ஆகும். அதே நேரத்தில் இம்மக்களிடத்தில் வழக்கிலிருக்கிற மழைக்குறி, மாட்டு வகை, நெல் வகை, கலப்பை வகை, பொலிப்பாட்டு வடிவிலானது எளிதில் பொருள் கொள்ளும்படி இருக்கின்றன. ஆசிரியன் புதிதாகப் படைப்பாக்கம் செய்துள்ள பாடல்களைக் கற்றுணர்ந்தோர் மட்டுமே பொருள் கொள்ள முடியுமென்பதை நாம் இங்கு நினைக்க வேண்டியிருக்கின்றது. இருப்பினும் பெரும்பாலான பள்ளுப் பாடல்கள் எளிய நடையில் சிந்தும் விருத்தமும் ஆன பாக்களால் அமைந்தவை என்பது குறிப்பிடத்தக்கது.

அதே நேரத்தில் வரலாற்றுக்கு முந்திய காலந்தொட்டு வாய்மொழியில் வழங்கி வந்த வேளாண்மைத் தொடர்பான பாடல்கள் உழத்திப்பாட்டு, ஏர்மங்கலப்பாட்டு, முகவைப் பாட்டு என்றெல்லாம் முற்கால இலக்கியங்களில் குறிப்பாக மருத நில வர்ணனையின் போது இடம் பெற்ற இலக்கிய வகைகள் பள்ளு இலக்கியம் தோன்றக் காரணமானவையாக இருந்திருக்கின்றன என்பதை மறுப்பதிற்கில்லை.

### ஏர்மங்கலமும் உழத்திப்பாட்டும்

இது ஏரின் சிறப்புரைத்து வாழ்த்துதல் ஆகும். இந்த ஏர்மங்கலம் தொல்காப்பியத்தில்

**"ஏரோர் களவழியன்றிக் களவழித்**
**தேரோர் தோற்றிய வென்றியும்"** *(தொல்.புறம்.4)*

என்ற நூற்பா ஏர்க்கள, போர்க்கள இயைபினைச் சுட்டும். இங்கு ஏரின் உழவரே போர்க்கள மள்ளராக விளங்குவதால் இவ்வாறு ஏரையும் போரையும் இணைத்துக் காட்டி இலக்கணம் செய்துள்ளார் தொல்காப்பியர் என்றும் கருதலாம். இந்த ஏர்மங்கலத்தைப் புறப்பொருள் வெண்பா மாலை "செந்நெல் கதிரோடு அறுகையும் குவளையையும் கலந்து தொடுத்த மாலையை மேழியில் கட்டிப் பாரை இரண்டாகப் பிளப்பாரைப் போற்றுவார் தொழப் பொன்னேர் பூட்டி நின்றார் ஏரைப்பாடும் ஏர் மங்கலம்" என்று துறை விளக்கம் தரும். இது குடைமங்கலம், வாள் மங்கலம், மண்ணுமங்கலம் போன்றதோர் புறத்துறையே ஆகும். மன்னனுக்குரிய துறைகளுக்கொப்ப உழவர்க்கும் உரைக்கும் மரபை வேளாண் வாகை, திணை நிலை என்னும் புறத்துறைகளாக அறியலாம். (பு.பொ.வெ.மா. நூ. 34)

தொல்காப்பியத்தின் படியும் சங்க இலக்கியத்தின் படியும் அங்குக் குறிக்கப்படும் ஏர்க்கள மள்ளரும் போர்க்கள மள்ளரும் ஒருவரே ஆவர். இதனைத் திவாகர நிகண்டும், பிங்கல நிகண்டும் முறையே

**அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்**
**வருந்தகைத்தாகும் மள்ளர் என்னும் பெயர்**

என்றும்

**செருமலை வீரரும் திண்ணியோரும்**
**மருதநில மக்களும் மள்ளர் என்ப**

என்றும் குறிப்பிடும். இவ்வாறு ஏரையும் போரையும் ஒருங்கே கொண்டு வாழ்ந்த மள்ளர்களிடம் வழக்கிலிருந்த ஏர்மங்கலப் பாடல்கள் இன்றும் இவர்களிடம் வழக்கிலிருக்கின்றன. இப்பாடல்கள் குறித்து வையாபுரிப் பள்ளு நூலின் பதிப்பாசிரியர் அ.மா. பரிமணம் வருமாறு குறிப்பிடுவார்:

"குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் திணை அடிப்படையில் ஐந்திணை மக்கள் வாழ்வு போற்றும் இசைப் பாடல்கள் தோன்றலாயின. இந்த இலக்கிய வளர்ச்சியை சிலப்பதிகாரக் காவியத்தில் காணப்படும் குன்றக்குரவை, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, கானல்வரி முதலான இசைப் பாடல்களில் காணலாம். கானல்வரியில் அமைந்துள்ள ஆற்றுவரிப் பாடல்கள் மருத நில வளத்தையும் அங்கு வாழும் மக்கள் சிறப்பையும் உணர்த்துகின்றன. உழவர் சிறப்புப் பேசப்படுவது "ஏரோர் களவழி" என்று தொல்காப்பியத்தில் குறிக்கப்படுகிறது. உழவுத் தொழிலின் இன்றியமையாமையினால் அத்தொழில் புரியும் உழவர்களின் வாழ்வுச் சிறப்புகளைப் பேசும் பாடல்கள் ஏர் மங்கலம், உழவர் பாட்டு, உழத்தியர் பாட்டு என்று பலவாறாகச் சிறப்புற்றன. உழுதுண்டு வாழும் மக்கள் பள்ளர் என அழைக்கப்பட்ட பின்னர் அவர்கள் பற்றிய பாட்டு பள்ளுப் பாட்டு என்றுஅழைக்கப்பட்டிருக்கலாம்" என்பார்.[5] இக்கருத்து ஏற்புடையதே ஆகும்.

இப்பள்ளுப் பாடல்களிலும் ஏர்மங்கலப் பாடல்கள் இடம் பெறுகின்றன. ஆனால் அது நாளேர் பூட்டுதல் என்ற மட்டிலுமே சுருக்கிப் பேசப்படுகின்றது. ஆனால் இம்மக்களிடம் பொன்னேர் பூட்டுதல் என்பது இன்றும் ஒரு விழாவாகக் கொண்டாடப்படுகின்றது. இராஜபாளையம் வட்டாரத்தில் பொன் ஏர் பூட்டுதலை ஏர்த்திருவிழா என்ற பெயரில் இன்றும் ஆடி மாதத்தில் மள்ளர் குல மக்கள் கொண்டாடுகின்றனர். கொங்கு நாட்டில் பொன் ஏர் பூட்டுதலை நாளேர் பூட்டுதல் எனும் இந்திர விழா அதாவது நாற்று நடவுத் திருவிழா என்று சிவன் மள்ளராக மாறி உழவு செய்ததைக் கொண்டாடும் விழாவாகக் கொண்டாடுகின்றனர். தாராபுரம் வட்டாரத்தில் பொன்னேர் எனும் நாளேர் கட்டுதல் விழா ஆண்டு தோறும் நடைபெறுகின்றது. இச்சமயம் பாடப்படும் பாடல்கள் சிறப்புமிகு ஏர்மங்கலப் பாடலாகவும் உழத்தியர் பாட்டாகவும் அமைகின்றன.

"பொன்னேர் பூட்ட கோளாறு சொன்ன
தேவேந்திரனாம் பேரு"

என்று தொடங்கும் இந்த ஏர்மங்கலப் பாட்டு மழையின் வருகை, உழவு செய்தல், விதை விதைத்தல், நடவு செய்தல், களையெடுத்தல், உரமிடுதல், அறுவடை செய்தல் என்றவாறு உழவுத் தொழில்

அனைத்தையும் இலக்கியமாக்கும் ஒரு நீண்ட பாடலாக அமைகின்றது. அப்பாடலின் சில வரிகள் வருமாறு:

"மான மிருண்டு வரும் அல்லிலே லேலே
மலையிருட்டும் கூட வரும் தில்லாலேலே
மழையே பொழிய வேண்டும் அல்லிலேலேலே
மக்கள் பஞ்சம் தீர வேண்டும் தில்லாலேலேலே
...... ......... ........ .......
மண்வெட்டி கையிலெடுத்து தேவேந்திரன் மகனே
மடைமாரி தண்ணி காட்டுவான் தேவேந்திரன் மகனே
சந்தனக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே
அவன் சரிபார்த்து மேழி செய்வான் தேவேந்திரன் மகனே
குங்குமக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே
கோளாறா மேழி செய்வான் தேவேந்திரன் மகனே"

என்று தொடர்ந்து உழவின் சிறப்பு நூறு வரிகளுக்கு மேல் பாடப்படுகின்றது. இதே உழத்திப் பாடல் கோவை பேரூரில் நடைபெறும் இந்திர விழா எனும் நாளேர் பூட்டுதல் மற்றும் நாற்று நடவுத் திருவிழாவில் பாடப்படுகின்றது. அவை வருமாறு:

"சந்தனக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
இந்தச் சாதிலிங்க நாத்தெடுத்து பள்ளி நடுவாள்
குங்குமக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
குபேந்திரன் நாத்தெடுத்து பள்ளி நடுவாள்"

இதே பாடல் சில வேறுபாடுகளுடன் மாந்தைப் பள்ளில் உழத்திப் பாடல் எனும் பெயரில் இடம் பெற்றுள்ளது.

"செஞ்சுடர்ப் படைவாள் கொண்டு பள்ளருழுவார் – பெண்கள்
சீரகச் சம்பா நெல் நாற்றைச் சேர நடுவார்
இன்னும் பல படை கொண்டு பள்ளருழுவார்–பெண்கள்
எத்தனையோ வித நெல் நாற்றெங்கும் நடுவார்"

என்றவாறு இடம் பெற்றுள்ளதிலிருந்து மள்ளர் குல மக்களிடம் ஏர் மங்கலப் பாடலாக வழக்கிலிருந்த பாடல்களே பள்ளு இலக்கியங்களிலும் காணப்படுகின்றன எனலாம். ஆனால் மள்ளர்கள் தங்களின் தொழில் வன்மைகளையும்

சிறப்புக்களையும் தங்களது பெருமைகளையும் பாடுவதாக அமைந்த உழத்திப் பாடலைப் பள்ளு நூலின் புலவர்கள் புரவலர்களிடம் பரிசில் பெறும் நோக்கில் மள்ளர்களை ஏசும் இலக்கியமாக்கி விட்டனர் எனலாம். இங்கே நாம் கருத்தில் கொள்ள வேண்டியது மறக்களவழிப்பாடல் பரணியாகப் போரை வர்ணிக்கும் ஓர் இலக்கிய வகையாக வளர்ந்தது போல் ஏர்மங்கலப் பாடல் உழவரின் சிறப்புப் பேசும் உழத்திப் பாடலாகவும் ஓர் தனித்த இலக்கியமாக வளர்ந்திருந்ததைப் பன்னிருபாட்டியல் இலக்கண நூல் அறுபத்தி எட்டு வகைச் சிற்றிலக்கியங்களில் உழத்திப் பாட்டும் ஒன்று என்று இலக்கணம் வகுத்திருப்பது மூலம் அறியலாம்.

**"புரவலர் கூறி அவன் வாழிய என்று**

**அகல்வய தொழிலை ஒருமை உணர்ந்தனள்**

**எனவரும் ஈரைந்து உழத்திப் பாட்டே"**

இவ்விலக்கணப் படி உழத்தியரின் தொழில் சிறப்பைப் பள்ளு நூல்கள் சுட்டவில்லை. உழத்தி பெருமை பேசாது ஒழுங்காக வேலை செய்யுமாறு கூறுவதையே பள்ளு நூல்கள் தம் நோக்கமாகக் கொண்டுள்ளன. இதிலிருந்து உழவைப் பற்றி எழுதப்பட்ட பாடல்கள் உழத்திப்பாட்டு எனும் தனி இலக்கிய வகையாக இருந்திருக்க வேண்டும். இந்நூல்கள் அன்றைய அரசியல் மாற்றத்தால் மறைக்கப்பட்டு அதற்கு நேர் மாறாக அவர்களைப் பண்ணை வேலையாட்களாகச் சித்திரிக்கும் பள்ளுப் பிரபந்தமாக்கிப் பிரபலப்படுத்தியிருப்பர் என்றும் கருதலாம். காரணம் பிரதி (Attested) எடுத்தாற்போல் நூற்றுக்கணக்கான நூல்கள் **"நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது"**, எனும் அளவில் உற்பத்தி செய்யப்பட்டதைக் கூறலாம். இருப்பினும் இப்பள்ளு நூல்களின் தலைமக்கள் இன்றும் வேளாண்மையை உயிர்மூச்சாகக் கொண்டு வாழ்வதையும் உழவின் பெருமைகளையும் உழவுப் பாடல்களாகப் பாடி வருவதையும் காணலாம். இதுகுறித்துப் பள்ளு நூலின் தோற்றம் எனும் கட்டுரையில் நா. வானமாமலை குறிப்பிடுவது இங்குக் கவனிக்கத்தக்கது.

"பள்ளுப் பாட்டு இன்று நமக்குக் கிடைக்கும் கதையமைப் போடும் செய்யுளமைப்போடும் 17-ம் நூற்றாண்டுகளுக்கு முன்பு

இருந்ததில்லை என்பது உண்மையே. ஆனால் 17-ம் நூற்றாண்டில் திடீரென்று இது முளைத்து விட்டதென்று சொல்லமுடியாது. பல சிற்றோடைகளாக மலைச்சாரலில் ஓடிவரும் நீர்ப்பகுதிகள் சமவெளியில் கலந்து ஆறாகப் பெருகுவதைப் போல உழவர் வாழ்க்கையைப் பொருளாகக் கொண்டு பழங்காலம் முதல் தமிழ்க் கவிகள் பாடிய பாடல்களும் உழவர்கள்வாழ்க்கையில் உயிரோடு உலவி வந்த நாட்டுப் பாடல்களும் கூத்துமே பள்ளுப் பாட்டு உருவாகக் காரணமாக இருந்திருக்கவேண்டும். தமிழ்க் கதையான இராமாயணத்தில் கம்பன் கோசல நாட்டு உழவர்களைத் தமிழ் நாட்டுப் பள்ளர்களை மனதில் கொண்டே வர்ணித்தான். உழவுத் தொழிலையும், உழவையும் போற்றி ஏரெழுபது பாடினான். அவன் காலத்திலும் அதற்கு முன்பும் உழவரை மறந்து அரசரைத் துதித்து வாழ்ந்த புலவர்கள் இருந்தார்கள். சோழ மன்னர்களைப் புகழ்ந்து உலாக்களும், பரணிகளும் பாடினார்கள். ஆனால் கம்பன் போன்ற புலவர்கள் உண்மையான தமிழ்க் கவி மரபைக் காத்தார்கள். இலக்கணத்திலும் அரசரது வெற்றியைக் கூறும் வாள்மங்கலம், குடைமங்கலம் என்ற துறைகளோடு ஏர் மங்கலமும் இடம் பெற்றது"[6] என்று கூறுவதிலிருந்து மள்ளர்களின் உழவுப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல் மரபிலும் இலக்கிய மரபிலும் போற்றப்பட்டதை அறிகிறோம்.

### உழத்திப் பாட்டும் - மழைப்பாட்டும்

மருத நில மக்களான மள்ளர்கள் நெல்லின் மக்கள் என்றும் செந்நெல் முதுகுடியினர் என்றும் ஏருடன் பிறந்தவர்கள் என்றும் மழையின் மைந்தர்கள் (இந்திரனின் மக்கள்) நீராணிக்கர் என்றும், நீர்க்கட்டி என்றும் பண்டைக் காலம் தொட்டு இன்று வரை புகழப்படுபவர் ஆவர். இம்மக்களின் முன்னோரே நெல்லினை முதல் முதலில் இப்பூவுலகில் பயிர்செய்தவர் ஆவர். இதனால் நெல் பயிரிட்ட மருதநிலத்தின் தலைவன் வேளிர் என்று அழைக்கப்பட்டான். இவனே பின்பு வேந்தனானான். "நல்வினை செய்தவர்களின் உயிர்கள் இறந்த பின் மேலுலகத்திற்குச் செல்லுமென்றும், உலகில் (மருதநிலத்தில்) அரசனாயிருந்தவன் மறுமையில் மேலுலகத்திலும் அரசனாவான் என்றும் மருதநில மாந்தர் கருதி, முதன் முதலில் இறந்த அரசனையே வேந்தன் என்று பெயரிட்டு வணங்கினார்கள். மழை மேலிருந்து பெய்வதால், மேலுலக வேந்தனாகிய தங்கள்

தெய்வத்தினிடமிருந்தே வருவதாகக் கருதி, மழை வளத்திற்காகவும் அவனை வழிபட்டார்கள்"[7] எனும் கூற்றிற்கேற்ப மருத நில மள்ளர்கள் மழை வளம் வேண்டி இன்றும் தங்களின் குல முதல்வனான இந்திரனை வழிபடும் மழை வழிபாடு மழைப்பாட்டு எனும் இலக்கியமாக இம்மக்களிடத்தில் இன்றும் வழக்கிலிருப்பதைக் காண முடிகின்றது. இம்மக்கள் மேல் பாடப்படும் பள்ளுப் பாடலிலும் மழை வேண்டி மள்ளர்கள் இந்திரனை வழிபடும் முறை சிறப்பித்துப் பேசப்படும். இவ்வாறு மழை வேண்டி வழிபடும் மள்ளர்களும், மள்ளத்தியர்களும் சேர்ந்து பாடும் மழைப்பாட்டு, ஏர்வலப் பாடல்கள், நாளேர் பாடல்கள், ஏர் மங்கலப்பாடல்கள், நெல் விதை விதைப்புப்பாடல்கள், நெல் அளவைப் பாடல்கள் முதலியன இம்மக்களின் வேளாண் வாழ்வினை விளக்கிக் காட்டும் திறத்தன. இப்பாடல்களையே உழத்திப் பாட்டு எனும் பெயரில் பன்னிரு பாட்டியல் இலக்கண நூல் குறிக்கின்றது. இவ்விலக்கியம் நமக்குக் கிடைக்கவில்லை.

### மழைப்பாட்டு

மதுரை மாவட்டம் சோழவந்தானில் மழை இல்லாக் காலங்களில் கிராமப் பெரியோர்கள் கூடி அனைத்துச் சமூகத்தாரும் நெல் மணிகளை வசூல் செய்து உரிய முறைப்படி தேவேந்திரர் தலைவர்களிடம் கொடுத்து ஊர் மக்கள் அனைவரும் மேளம், தாளம் முழங்கச் சென்று, ஊரின் வடக்கு எல்லையில் வீற்றிருக்கும் செல்லாயி அம்மனுக்குப் பொங்கலிட்டு மழை வேண்டுதல் இன்றும் நடைபெறுகின்றது. இது போன்ற வழிபாட்டு முறை பாலமேடு, தேவாரம் போன்ற ஊர்களிலும் இருக்கின்றது.[8]

இதே போன்று திருப்பரங்குன்றம் பகுதியில் விளாச்சேரியிலுள்ள அழகு நாச்சியம்மனுக்குப் புரட்டாசி மாதத்தில் மழை வேண்டி நோன்பிருக்கும் மள்ளர் குல உழத்தியர்கள் யாருடைய நிலத்திற்கு வேலைக்குச் சென்றாலும் எங்கும் உண்பதில்லை. இந்த எட்டு நாட்களிலும் கோயில் வாசல், ஊர் எல்லை, அய்யனார் கோயில் பகுதிகளில் அழகுநாச்சியாரை வேண்டி மழைப்பாட்டு பாடுகின்றனர். இவர்களுள் ஒரு முதிய பெண் பாட ஒவ்வொரு பாடல் முடிந்த உடன் பிற பெண்கள் குலவையிடுகின்றனர். இறுதி நாளில் எல்லாச் சாதியினரும் அழகு

நாச்சிக்கு மாவிளக்கு எடுத்து வழிபாடு செய்கின்றனர். இசுலாமியர்கூடத் தங்களுக்கான காணிக்கைப் பொருட்களை இக் கோயிலுக்குக் கொடுத்தனுப்புகின்றனர். இவ்வாறு மழை வேண்டிப் பாடும் பெண்கள் எல்லாக் கிராமங்களிலும் மள்ளர் குல உழத்தியராகவே இருப்பதை நாம் இங்கே நினைக்க வேண்டும். மழை வேண்டி வழிபடும் வள வழிபாட்டைச் சிலப்பதிகாரம் காட்டும் இந்திர விழாவிலிருந்து நாம் ஓர் வழியாகப் பெறமுடியும். இது இன்றும் இம்மக்களிடம் இந்திர விழா எனும் பெயரில் வழிபடப்படுவதைக் கோவை பேரூர் பட்டீசுவர மள்ளர் திருக்கோயிலில் இன்றும் காணலாம். இதே வள வழிபாட்டு முறையே பல பள்ளுநூல்களில் இடம்பெறுவதைப் பள்ளு நூல் படிப்போர் உணர்வர்.

*"மாரிப் பொருட்டால் வரங்குறித்து மள்ளரெல்லாம்*
*சேரிக் குரவையெழத் தெய்வ நிலை போற்றினரே"*
*(முக்கூடற்பள்ளு, பா. எண்.30)*

எனும் பாடல் வரிகளில் மழைவேண்டி மள்ளர்கள் குலவை ஒலி எழுப்பி, மழை வரம் வேண்டுதல் பாடப்படுவதைக் காண்கின்றோம்.

*"காவுக் இறைவனாகும் இந்திரன்*
*ஏவற் பணி கொண்டெழுந்த கார்"*
*(முக்கூடற்பள்ளு, பா. எண். 37)*

இதில் காவுக்கு இறைவன் அதாவது கற்பகப்பூங்காவின் தலைவனாகிய இந்திரனின் ஏவற்கட்டளை ஏற்று மழை பொழிந்தது என்று அறிகின்றோம். இங்கே மழைக் கடவுளாக இந்திரனே வர்ணிக்கப்படுகின்றார். இதனையே இன்றைய உழத்திப் பாட்டு எனும் மழைப்பாட்டும்

*"சந்திரரே சூரியரே சாமிபகவானே*
*இந்திரரே இப்ப மழை பெய்ய வேண்டும்"*

என்றும்

*வடக்கே மழை கருக்கவே*
*வாய்மடை எல்லாம் சங்கு புரளவே*
*தண்டொதுங்கி தடியொதுங்கி*
*வருகுதாங்காவேரி*

*தாழை மடலொதுங்கி வருகுதாங்காவேரி*
*கெண்டை மீன் வாய்திறந்து வருகுதாங்காவேரி*
*அத்துணை காவேரியை - நம்ம*
*தேவேந்திர ராசா தண்ட மாலையிலே*
*தடுத்தொதுக்கி வாராங்கோ*
*சேரக் குலவையிடுங்க*
*தேவேந்திரக் கன்னி யெல்லாம்*
*(ரங்கசாமி, 76, தேவேந்திர குல வேளாளர்,*
*புலியகுளம் கோவை)*

என்றும்,

*"மானமிருண்டு வரும் அல்லிலே லேலே*
*மழையிருட்டும் கூட வரும் தில்லா லே லே லே*
*மழையே பொழிய வேண்டும் அல்லிலே லே லே -*
*அங்கே*
*மக்கள் பஞ்சம் ஆறவேண்டும் தில்லாலே லே லே*
*ஆத்திலேயும் தண்ணி வர அல்லிலே லே லே - தன்னா*
*அலைபுரண்டு போக வேண்டும் தில்லாலே லே - அங்கே*
*மண் வெட்டி கையிலெடுத்து தேவேந்திரன் மகனே-அங்கே*
*மடைமாறித் தண்ணி காட்டுவான் தேவேந்திரன் மகனே"*
*(ஐ. முத்தம்மாள் (65) தேவேந்திரகுல வேளாளர்*
*வீராச்சிமங்கலம், தாராபுரம்)*

என்றும்,

*"பழனியில் குடியிருக்கும் முருகப்பெருமானே*
*பார்வதி பெத்தெடுத்த செந்தில் வடி வழகா*
*ஈசன் மகனல்லவா இருவாச்சி பூவல்லவா*
*பாலக்கா திண்ண மக்கா ஏரோட்டி வாங்க மக்கா*
*ஏலக்கா திண்ண மக்கா ஏரோட்டி வாங்க மக்கா*
*பத்துத் துளி துளிக்கும் பத்து ஏரும் பூட்டி நிற்கும்*
*அந்தப் பத்தேரு மின்னால பார்வதி சாலுமிட்டா*
*எட்டுத்துளி துணிக்கும் எட்டு ஏர் பூட்டி நிற்கும்*
*அந்த*
*எட்டு ஏர் மின்னால எட்டு ஏர் சாலுமிட்டா*
*நெல்லு விளைய வேணும் நித்தம் மழை பெய்யனும்*
*கொள்ளு விளைய வேணும் கொள்ள மழை*
*பெய்யனும்*

சோளம் விளைய வேணும் சொகுசு மழை
பெய்யனும்
பாசி போல் மின்னல் மின்ன
பவளம் போல் கால் இறங்க
ஊசி போல் மின்னல் மின்ன
உதயம் போல் கால் இறங்க
இந்த மானகிரி ராசாவே
மழை பேஞ்சா ஆகாதோ – இந்தச்
சோனகிரி பெண்டுக எல்லாம்
சோத்துக்கு அழுகுறோமே
சோறுசோறு என்று சொல்லி
சோம்புதே மக்கள் எல்லாம்
கஞ்சி கஞ்சி என்று சொல்லி
கதறுதே மக்கள் எல்லாம்
கூழு கொதிய வேணும்
குழந்த பசி ஆற வேணும்
மாவு கொதிய வேணும்
மக்க பசி ஆற வேணும்"
(இராசலட்சுமி (55) தேவேந்திர குல வேளாளர்
சிங்கா நல்லூர், கோவை)

இப்படியாக மழை வேண்டிப் பாடும் மள்ளத்தியர்களின் மழைப் பாடல்களில் உலகைப் புரக்கும் மழை வேண்டுதலை வரமாக வேண்டுவதைக் காண்கின்றோம். காரணம் மருத நிலத்து வாழ்க்கை உலகைப் புரக்கும் நெல்லை விளைவித்துக் கொடுக்கும் வேளாண் வாழ்க்கை ஆகும். நெல் விளைய மழை வேண்டும் அதனால் நெல் விளைவிக்கும் ஆற்றல் படைத்த மருதத் திணைக்குரிய உழத்தியர்கள் மழை வேண்டி இறைவனை வழிபடுதல் பல பாடல்களாக இவர்களிடம் வழக்கிலிருக்கின்றன. இங்குப் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடும்.

"நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"
(புறநானூறு, பா.எண்.186)

என்பதற்கேற்ப நெல்லையும், நீரையும் உண்டாக்கி மன்னனின் கடமைக்குத் துணை செய்யும் மருத நில உழத்தியர்களைக் காண்கின்றோம். இவ்விடத்தில் உழத்திப்பாட்டின் இலக்கணத்தை நினைக்க மன்னனை வாழ்த்தி வயல் வேலைகளின் வன்மைகளைத்

தெரிந்த உழத்திப் பெண் பாடும் பாட்டே உழத்திப் பாட்டு என்பதை மேற்கண்ட சான்றுகள் உறுதிப்படுத்தும்.

## மழை வேண்டும் வளமைச் சடங்கு

மழை வேண்டிப் பாடும் உழத்திப் பாடலில் மழை வந்தவுடன் தேவேந்திரர்கள் கொழுவினைத் தயார் செய்து ஏரில் இணைத்து மாடுகளை உழவுக்குத் தயார் செய்து உழவு செய்தல் வரை படிப்படியாக வர்ணிக்கப்படுகின்றன. கொங்கு நாட்டில் வயலில் வேலை தொடங்கும் முன் மல்லாண்டை எனும் வளமைத் தெய்வத்திற்கு வழிபாடு செய்த பின்னரே உழவினைத் தொடங்குவர். இதே போன்று அறுவடையின் போதும் மல்லாண்டை வழிபாடு நடைபெறும். இந்த மல்லாண்டை சாமி வழிபாடு பள்ளு இலக்கியங்களிலும் குறிக்கப்படுகின்றது. இதே வள வழிபாடு பரிபாடலில் மருத நில மக்களால் மழை வேண்டிச் செய்யும் சடங்காகக் காணப்படுகின்றது. சங்கு, நண்டு, இறவு, வாளை போன்றவற்றை வையையில் இட்டனர். விளைக! பொலிக! எனக் கட்டளை இட்டனர். இவ்வாறு சங்கை நதியிடல் தொத்து மந்திரமாக (Contagious magic) மழை வேண்டிச் செய்யப்பட்டது. தொடர்பு கொண்டிருக்கும் இரு பொருள்களிடையே நிரந்தரத் தொடர்பு இருக்கும் என்பது தொத்து மந்திரமாகும். நீரோடு நெடுநாள் தொடர்பு கொண்டிருந்த சங்கு, சிப்பி போன்ற பொருள்களுக்கு நீரை வரவழைக்கும் இயல்பு உண்டு என்ற நம்பிக்கையை இங்குக் காணலாம். இவற்றை ஆற்றில் இட்டால் ஆற்றில் நீர் பெருகும்; ஆற்றில் நீரைப் பெருக்க மழை பெய்யும் என நம்பினர் . . . மீனினம் பெருக வேண்டும் என்பதற்காக ஒத்த மந்திரமாக (Imitative Magic) நண்டு, இறவு, வாளை போன்றவற்றை நதியிலிட்டுச் சடங்கு செய்தனர். ஏற்பட வேண்டிய விளைவும், செய்யப்படுகின்ற செயலும் ஒத்திருப்பது "ஒத்த மந்திரம்" ஆகும்.[9]

இதே மந்திரப் பாடலும், மந்திரச் செய்கையும் உழத்தியர் பாடும் இன்றைய பாடல்களிலும் காணப்படுகின்றன. பொன்னால் ஆன நண்டுகள், நத்தைகள், தவளைகள், மீன்கள் எல்லாம் கொண்டு வந்து நதியிலிட்டு வழிபாடு செய்வதைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இப்பாடல் வரிகள் வருமாறு:

"இடி இடிக்க மழை பொழிய
இரு கரையும் தண்ணிவர
. . . . . . . . . . . . . . . . . . . .

*பொன்னால் நண்டுகளைக்*
*கொண்டு வந்தாரு தேவேந்தரு*
*பொன்னால் மீனுகளைக்*
*கொண்டு வந்தாரு தேவேந்தரு*
*பொன்னால நத்தைகளை*
*பொன்னால தவக்களையைக்*
*பொன்னால மாடுகளைக்*
*கொண்டு வந்தார் தேவேந்திரரு*
*பொன்னால பச்சத்தாளை*
*பொன்னால பெரிய கிச்சடி*
*கொண்டு வந்தாரு தேவேந்திரரு*
*பொன்னால நெல்லுகளை*
*பொன்னால பெரிய கிச்சடி*
*கொண்டு வந்தாரு தேவேந்திரரு"*

*(கருப்பாயம்மாள் (50) தேவேந்திரகுல, வேளாளர், இராமநாதபுரம், கோவை)*

இப்பாடலில் முதலில் இடம் பெறும் மழை வேண்டும் வருணனைகளை அடுத்து, நதியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது. இதனைச் செய்தவன் தேவேந்திரன் (இந்திரன்). இவனே பின்பு நதியில் மீனையும், நண்டுகளையும், தவளைகளையும், நத்தைகளையும் கொண்டு வருகின்றான் என்கின்றது பாடல் வரிகள். மழை பெய்து வெள்ளம் வந்தால் நண்டு, மீன் தவளைகள் அனைத்தும் பெருகிவிடுதல் ஓர் யதார்த்தம், இந்த யதார்த்தம் கட்டாயம் நடந்தாக வேண்டும் என்பதைத் தமது மந்திரப் பாடலால் கட்டளையிடுகின்றாள் மருதநில உழத்திப் பெண். இந்த மாதிரியான ஒரு மழை வேண்டும் பாடல் பேரூர் இந்திர விழா எனும் நாற்று நடவுச் சடங்கின் போதும் பாடப்படுகின்றது.

அப்பாடல் வருமாறு:

சந்திரரே சூரியரே சாமி பகவானே
இந்திரனை நோக்கி எடுத்தேன் இள முடியை
(நாற்று)

...... ...... ...... .......

இளமுடி வாடாம எங்குரலும் மங்காமே
தேவேந்திர மார்கள் சேர குலவையிடுங்கள்

தேவேந்திர ராஜனுக்கு
...... ....... ...... .........
இந்திரனை நோக்கி எடுத்தேன் இளமுடியை
இளமுடி வாடாமே எங்குரலும் மங்காமே
சிறுமணலாம் காரிமா கற்பூரம் நம்ம
நல்லதொரு மாரிக்கு என்னென்ன
வெகுமானம் வெத்தலை பொட்டி எடுத்து
வீதியிலே வைத்து வேணுமின்ன பொங்கலுக்கு
தாழமிட்டு வாராங்க சமயம் கலையாமே
மாமலையெல்லாம் தண்ணி வர தண்டொதுங்கி
தடியொதுங்கி வருகுதாம் காவேரி
கொண்டை மீன் வாய் திறக்க வருகுதாம் காவேரி
ஆறால் மீன் வாய்திறக்க
வருகுதாம் காவேரி
யாருக்குன்னு வாய்திறக்க
பட்டுக் கொடை பிடித்த
பாண்டிய ராசனுக்கு வாய்திறக்க
முத்துக் கொடை பிடிக்க முதலைக்கு வாய்திறக்க
என் ஜன்னலுக்கு நீர் போக்கி
என் தேவ தேவேந்திரனுக்கு வாய்திறப்பேன்
ஊசி போல் மின்னல் மின்னி
உபயம் போல் கால் இறங்கி
பாசி போல் மின்னல் மின்னி
பத்து துளிதுளித்து வருகுதாம் காவேரி”
(மாரியாயி (95) தேவேந்திர குல வேளாளர்,
சொக்கம்புதூர், கோவை)

இப்பாடலில் மழை வருவதும் காவேரியில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதும் தங்களது குல முதல்வனான இந்திரனின் ஆணையால்தான் என்கின்றாள் இம் மருத நில உழத்தி. காவேரியில் மீன்களும், முதலைகளும் வாய் திறந்து புது வெள்ளத்தைக் குடிக்கின்றன. இவ்வாறான கற்பனை மழை கட்டாயம் வந்துவிடுமென்ற நம்பிக்கையில் செய்யப்பட்டதாகும். நெல் நாற்றைக் கையிலெடுத்துக் கொண்டு குரவையொலி எழுப்பி மழை வேண்டித் தனது குல முதல்வனான இந்திரனை வேண்டும் மள்ளத்தியரை இப்பாடலில் நாம் பார்க்கின்றோம். மள்ளர்களும், மள்ளத்தியர்களும் வயலில் இறங்கி மழை வேண்டி இந்திரனை

வேண்டினால் மழை கட்டாயம் வருமென்பது நம்பிக்கை. இதே நம்பிக்கையைப் பள்ளு நூல்களிலும் பேரூர்ப் புராணத்திலும் காண முடியும். இவ்வாறாக மழை வேண்டிப் பாடும் பாடல்கள் இம்மக்கள் பாடும் உழத்திப் பாடல்களில் நிறையவே காணக்கிடக்கின்றன.

### ஏர் மங்கலப் பாடல்கள்

உழவர் தமது உழவுத் தொழிலைத் தொடங்கும் முன்னர் ஏர்மங்கலம் பாடினர். மேலும் தொல்காப்பியம் வாகைத் திணையின் துறைகளுள் ஒன்றாக ஏர்மங்கலத்தைக் குறிப்பிட்டு, உழவர்களின் வாழ்க்கை, பாடல் பொருளாக அமைவதற்கும் ஏற்கெனவே வழி வகுத்துள்ளது. இந்த ஏர்மங்கலப் பாட்டின் வளர்ச்சி நிலையே உழத்திப் பாட்டும், கம்பர் பாடியதாகச் சொல்லப்படும் ஏரெழுபது முதலியன ஆகும். பள்ளு நூல்களில் ஏர்வகைகளையும் நெல்வித்து வகைகளையும் மாட்டு வகைகளையும் சொல்லிய பின்னர்ப் பொன் ஏர் பூட்டுவதற்கு நல்ல நாள் பார்த்து உழவு செய்தலைக் காண்கின்றோம். இந்த இலக்கியப் பாடல்கள் அனைத்தும் மள்ளர்களிடம் வழக்கிலிருந்த ஏர்மங்கலப் பாடல்களிலிருந்தே பள்ளு நூல் புலவர்களால் எடுத்தாளப்பட்டுள்ளன என்பதை இங்கே நினைக்க வேண்டும். இம்மள்ளர்கள் பாடும் ஏர்மங்கலப் பாடல்கள் வருமாறு.

**"சந்தனக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே–அவன்**
**சரிபார்த்து மேழி செய்வான் தேவேந்திரன் மகனே–**
**குங்குமக் கலப்பை வெட்டி தேவேந்திரன் மகனே–அவன்**
**கோளாறா மேழி செய்வான் தேவேந்திரன் மகனே–அவன்**
**ஏரிக்கரையோரத்திலே தேவேந்திரன் மகனே–அவன்**
**ஏர்க்கலப்பை பூட்டையிலே தேவேந்திரன் மகனே**
**கூடைப் பெட்டி தானெடுப்பாள் தேவேந்திரன் மகளே–அவள்**
**கூடநின்று விதைவிதைப்பான் தேவேந்திரன் மகனே**
**கச்சை வரிந்து கட்டி தேவேந்திரன் மகனே–அவன்**
**கலப்பையைக் கையில் பிடிப்பான் தேவேந்திரன் மகனே**
**பக்குவமா நிலத்தை உழுதிடுவான் தேவேந்திரன் மகனே**

(ஐ. முத்தம்மாள், தேவேந்திர குல வேளாளர்,
வீராச்சிமங்கலம், தாராபுரம்)

என்றும்,

"பொன்னால கொழுவுகளை
எடுத்து வந்தார் தேவேந்திரரு
பொன்னால ஏரும் மேழிகளைக்
கொண்டு வந்தாரு தேவேந்திரரு
பொன்னால கருவத்தடி
எடுத்து வந்தார் தேவேந்திரரு"

*(கருப்பாயம்மாள், முற்காட்டியபடி)*

இவ்வாறாக மருத நில வேளாண் மக்களிடம் வழக்கிலிருக்கும் ஏர்மங்கலப் பாடல்கள் தமிழகம் முழுவதும் பாடப்படுவதாகும். இது கருதியே இவர்களை ஏருடன் பிறந்தவர்கள் என்று இவர்கள் குறித்த தொன்மங்களும் வரலாறுகளும் தெரிவிக்கின்றன. இன்றும் ஒவ்வொரு மள்ளர் வீட்டிலும் ஆறு, ஏழு என்ற எண்ணிக்கையில் கலப்பைகள் இருப்பதைக் காணமுடியும். ஏரின் எண்ணிக்கையைப் பொறுத்தே மள்ளரின் செல்வச் செழிப்பு கணக்கிடப்படும். குறைந்தது ஓர் ஏராவது இருப்பவரே மள்ளர் என்று பெயர் பெறுவார் என்ற நிலையும் கிராமங்களில் இருந்து வருகின்றது. இது கருதியே "ஏரும் போரும் எங்கள் வாழ்வு" என்ற பொது வழக்காறும் இவர்களிடம் வழக்கிருக்கின்றது என்றும் கூறலாம். இதனை உறுதி செய்வதாக பூச்சியம்மன் வில்லுப் பாடலில் வரும் இம்மக்கள் குறித்த வர்ணனை அமைகின்றது.

**"இஷ்டமுடன் வாழ்ந்து வந்தார்
இந்திர குலப் பண்ணையர்கள்
ஒயிலான் உமையாள் என்று
உண்மையுடன் வாழ்ந்து வாரார்
தேவேந்திர குல மதிலே
வாசமுள்ள ஊரதிலே
வாழ்ந்து வரும் நாளையிலே
ஆளேர் விவசாயங்கள்
அழகுடனே தானடக்கும்
ஏழேர் விவசாயங்கள்
இன்பமுடன் நடக்குதய்யா"[10]**

சொந்தமாக 7 ஏர் வைத்து உழுவது செல்வச் செழிப்பின் குறியீடாகக் கூறப்படுகிறது. ஒரு ஏர் 8 மரக்கால் (64 செண்ட்) நிலப்பரப்பை உழும். 7 ஏர் 64 x 47 = 448 சென்ட் நிலப்பரப்பை அதாவது 4 ஏக்கர் 48 சென்ட் உழும்.

### விதை விதைப்புப் பாடல்

தேவேந்திர குல முதல்வன் தேவலோகத்திலிருந்து நெல்வித்து வகைகளையும் பிற நஞ்சைப் பயிர்களையும் பூமிக்குக் கொண்டு வந்ததாக இம்மக்கள் குறித்த பல தொன்மக்கதைகளும் கல்வெட்டுச் சான்றுகளும் பள்ளு நூல்களும் தெரிவிக்கின்றன. இம்மக்களின் திருமணத்தில் பாடப்படும் மங்கல வாழ்த்துப் பாடலில் இவர்களின் தோற்றம் குறித்த வர்ணனை "தேவேந்திரர் வர்ணிப்பு" எனும் பெயரில் பாடப்படுகின்றது. இப்பாடல் இம்மக்களின் வேளாண் வாழ்க்கையை ஒரே மூச்சில் சொல்லி முடிக்கும் மிக உன்னதமான ஒரு தொன்மப் பாடலாக (பழம்பாடல்) விளங்குவதைக் காண முடியும், அப்பாடல் வருமாறு:

"தேவாதி தேவர்களான
தேவேந்திரச் சாதியார்
விருதுகளாவது
வைகையில் உதித்து
வருணன் பொழிந்து
ஈஸ்வரி தேடி இருளில் நடந்து
கூவிய சத்தம் குமரனை நோக்கி
வாரி எடுத்து வள்ளலை அணைத்தவரான
சேத்துக்கால் செல்வரான
செந்நெல் முடிக் காவலரான
கொத்துக்கு முத்து கொட்டி அளந்தவரான
முத்தளக்கும் கையாதி பரனே
மூன்று கை குடையாதி பரனே
பள்ளனும் பள்ளியும்
காலினால் உழப்பிய செந்நெல்லை
தேவர்கள் பாலால் அமிர்தம் பொழிவராம்
கொட்டுடன் கோல மேழி கலப்பை
நெட்டுடன் பரம்பு சங்கிலி
நேரான கால் கயிறுடன்
மொட்டை வெள்ளானை ஏறி
தெய்வ குலத்தில் தேவரிடத்தில் (மேலுலகம்)
இஞ்சி எலுமிச்சை இனிய பலாவும்
வெள்ளரிக் கொடியும் வேனாமாமரமும்
சந்தனமும் கமுகும் சாதிலிங்கமும்

தென்னை பொன் உலக் கோலும்
பூத்தாமரையும் 4448 நெல்விதையும்
யானைவால் மயிரினால்
மூக்கணாங் கயிர் கொண்டு
கோர்த்து நூலேணி வழியாக
பூலோகம் இறங்கி
ஓடையை குறுக்காட்டி
ஏரிகள் போட்டு
வாகான பூமியை வயல்களாகச்
சேர்த்து உழுது விதைத்து
வேளாண்மை செய்து
அன்னதானம், சொர்னதானம்
வஸ்திரதானம், கோதானம்
பூதானம் என்று சொல்லப்பட்ட
32 தான தர்மம் செய்யப்பட்ட வருமான
நம் தேவர்களுக்கெல்லாம்
இரண்டு பொண்டாட்டி என்றும்
தேவேந்திரரிடத்தில்
நடனமாடும் பெண்களை
நாத்துநட அழைத்து
சேத்தை அள்ளிமேல் போட்டு
தேவர்களுக்கு ஆகாது என்று
இனி மண்வெட்டி கொண்டு
மலை தகர்த்தும் கண்டரானாலும்
மகா வெற்றியினாலும்
மலை கலங்கினாலும்
மனங் கலங்காதாவராயினும்
வள்ளக் கொடியில் ஈஸ்வரன்
வேர்வைத் துளியில் துள்ளிப் பிறந்தவரான
இனி வெள்ளானை வெள்ளைக் குடை விசிறி
வெஞ்சாமரை கொண்ட வருமான
இனி மங்கலம் பாடுவதற்கு
வரம் தரும் தேவர்களே
கல்யாண சிறப்பை
கவனமுடன் கேட்பீர்கள்
...... ....... ......." "

இப்பாடலில் தேவேந்திர குல மக்களின் வேளாண் வாழ்க்கை வர்ணிக்கப்படுகின்றது. காடு கண்டு கழனியாக்கிக் குளம் வெட்டி, விதை கண்டு வேளாண் செய்த விதம் தங்களின் குலப் பெருமையாகப் பேசப்படுகின்றது. இதே வர்ணனையும் குலச் சிறப்பும் போடி பகுதியை நாயக்கர் ஆட்சிக்கு முன்பு ஆண்ட வீரப்பகிழான் குடும்பனாரின் கதைப்பாடலிலும் இடம் பெறுவதைக் காணமுடியும்.

“மஞ்சி கொஞ்சும் மேற்கு மலை
மலையாள மேற்றிசை சாரலுமே
கொட்ட குடி மலைதனில் முகில்மோதி
குதித்துத் திரண்டு வரும் வெள்ளம்
அணையும் குளம் நிரப்பி
அடங்கா வாய்க்கால் எழுப்பி
மழவரும் உழவருமே
உழுது சம்பா நெல் விதைச்சு
தங்கமணி குன்று மணி
தாளடிச்ச சம்பா நெல்லு
சீமைக்குப் போகும் சீரகச் சம்பா
அரியரியாய் நட்டு வச்சு
ஆயிரமாயிரம் நெல் அடிச்சு
ஆயிரம் வேலி நஞ்ச புஞ்ச கட்டி
அனுதினமும் அன்னதானம்
ஆக்கிப் படைச்ச காலாடியார்
பார்புகழும் பாண்டியராம் எங்குலம்”[12]

இப்பாடலிலும் அணை, குளம், நெல் வேளாண்மை கண்ட குலம் தேவேந்திர குலமென்று திரும்பத் திரும்பச் சொல்லப் படுவதைக் காண்கிறோம். நெல்விதைக்கும் போது மள்ளத்தியர்கள் பாடும் பாடல் வருமாறு.

“பள்ளிமக பள்ளி தெய்வேந்திரப் பள்ளி
மம்பட்டி தோளிலிட்டி மட தொறக்கப் போனாள்
தான் போய் வெள்ளம் தனியே புறப்படவே
அரசச் சம்பா பேர்பாதி நீர்ச்சம்பா பேர் பாதி
பள்ள மகன் பள்ளன் தெய்வேந்திரப் பள்ளன்
சம்பா விதையெடுத்து சரியான நேரம் பார்த்து

வீசி எறிஞ்சான் வீச்சுக்கு ஏழுவிதை
அவன் தெய்வேந்திரன் பள்ளன்"

(இருளாயி, (90) தேவேந்திர குல வேளாளர்,
போலிபட்டி, உசிலம்பட்டி வட்டாரம்,
மதுரை மாவட்டம்)

என்றும்

"ஆத்தூறு சிக்கடிச் சம்பா அல்லிலே லே லோ
அழகான நெல்லெடுத்து தில்லாலே லே லோ
அளவுடனே விதை விதைப்பான் தேவேந்திரன் மகனே
கருங்குருவை நெல்லெடுத்து தேவேந்திரன் மகனே - அவன்
கணக்கா விதை விதைப்பான் தேவேந்திரன் மகனே-அவன்
நேர்த்தியான விதையெடுத்து தேவேந்திரன் மகனே
பட்டம் பார்த்து நெல் விதைப்பான் தேவேந்திரன் மகனே
பக்குவமாய் நாற்று எடுப்பான் தேவேந்திரன் மகனே"

(ஐ. முத்தம்மாள், முற்காட்டியபடி)

இவ்வாறு கழனியில் நெல் விதைக்கும் திறன் உழத்தியர்களின் உழத்திப் பாடல்களிலும் பெரிதும் பேசப்படுவதைக் காண முடியும். இவ்வாறாக நாற்று நடுதல், களையெடுத்தல், கதிரறுத்தல், நெல் அளத்தல் முதலிய வேளாண் தொழில் திறன்களும் பாடல்களாக இம்மக்களால் பாடப்படுகின்றன.

"களையெடுத்துப் பயிர் வளர்ப்பாள் குடும்பனார்
பொண்ணு - அவள்
கண்டிப்பாக உரமும் போடுவாள் தேவேந்திரன் மகளே
நெல்லும் விளைந்திடுமாம் அல்லிலே
நேர்த்தியாக கதிராகுமாம் தில்லாலே
கருக்கறுவாள் கையிலெடுத்துத் தேவேந்திரப்பெண்-அவள்
கால் கொலுசு சலசலங்க தேவேந்திரப் பெண்ணே
கதிரு அறுத்து குவித்திடுவாள் தேவேந்திரப் பெண் - அவள்
கட்டுக்கட்ட வந்திடுவான் தேவேந்திர மகனே"

(ஐ. முத்தம்மாள்)

என்றும்

"நெல்லுக் கதிரறுத்து
நேரம் பார்த்து கட்டுக்கட்டி

**தூக்கி விடு அந்த புள்ள**
**தூரம் தொல போற கட்டு”**

என்றும் நெல் அறுத்துக் கட்டுக் கட்டிக் களத்திற்குக் கொண்டு போய்ச் சேர்ப்பது வரை பாடப்படும்.

நெல்லடித்தலும் நெல் அளத்தலும் நெல்லைக் களத்தில் அடித்துத் தூற்றி அளந்து மூட்டை போட்டு வண்டிகளில் ஏற்றி விடும் வரை அச் செயல்களை வர்ணித்துப் பாட்டுப் பாடும் மரபு இம்மக்களிடம் காணப்படுகிறது. இவ்வாறு நெல் களத்தில் பாட்டுப்பாடும் போது நெல் வேளாண்மையின் தொடக்கம் முதல் முடிவுவரை பாடுவது மரபு. அவ்வகையான ஒரு எளிமையான பாடல் வருமாறு காணலாம்.

**“ஏரு உழுதது யாரு – ஏரை**
**நைசா உழுதது யாரு**
**வரப்பு வெட்டுனது யாரு – வரப்பை**
**நைசா வெட்டுனுது யாரு**
**வாய்க்கா வெட்டுனது யாரு – வாய்க்கால்**
**நைசா வெட்டுனது யாரு**
**பரம்பு அடிச்சது யாரு – பரம்பை**
**நைசா அடிச்சது யாரு**
**நாத்து அரிச்சது யாரு – நாத்தை**
**நைசா அரிச்சது யாரு**
**நாத்து நட்டது யாரு – நாத்தை**
**நைசா நட்டது யாரு**
**தண்ணி கட்டுனது யாரு – தண்ணியை**
**நைசா கட்டுனது யாரு**
**களை எடுத்தது யாரு – களையை**
**நைசா எடுத்தது யாரு**
**கதிரு செமந்தது யாரு – கதிரை**
**நைசா கட்டுனது யாரு**
**கதிரு அடிச்சது யாரு – கதிரை**
**நைசா அடிச்சது யாரு**
**நெல்லு தூத்தினது யாரு – நெல்லை**
**நைசா அளந்தது யாரு**
**சாக்கு பிடிச்சது யாரு – சாக்கை**
**நைசா பிடிச்சது யாரு**

*சாக்கை மூட்டுனது யாரு - சாக்கை*
*நைசா மூட்டுனது யாரு*
*சாக்கை கொப்பரை வாயில் மூட்டி - மூட்டையை*
*மாட்டு வ்ண்டியிலே ஏத்தி"*

*(பேச்சியம்மாள் (45) தேவேந்திர குல வேளாளர், போலிப்பட்டி, உசிலப்பட்டி, மதுரை மாவட்டம்)*

இப்பாடல் நெல் வேளாண்மையின் தொடக்கமான ஏர் உழுதல் தொடங்கி, வரப்பு வெட்டுதல், வாய்க்கால் செய்தல், பரம்பு அடித்தல், நாற்றுப் பறித்தல், நாற்றைச் சுமத்தல், தண்ணீர் பாய்ச்சுதல், களையெடுத்தல், கதிரு அறுத்தல், கதிரைக் கட்டாகக் கட்டிச் சுமத்தல், கதிரை அடித்தல், நெல்லைத் தூற்றுதல், நெல்லைச் சாக்கில் மூட்டுதல், நெல் மூட்டைகளை வண்டியில் ஏற்றுதல் வரை மிக எளிமையாக வர்ணிப்பதைக் காண்கின்றோம். இந்த இலக்கிய உத்தி கைதேர்ந்த ஒரு உழத்திப் பெண்ணால் தான் முடியும். அதிலும் கற்பனை வளமிக்க ஒரு பெண்ணால் தான்முடியும் என்பதை நாம் இங்கே நினைக்க வேண்டும். இம்மக்களிடம் வழக்கிலுள்ள ஏர்மங்கலப் பாடல்கள், உழத்திப் பாடல்களின் தாக்கம் தமிழ் இலக்கியப் பரப்பு முழுவதிலும் நீக்கமற நிறைந்திருப்பதைக் காணமுடியும். இவ்வுழத்திப் பாடல்களை உள்வாங்கிக் கொண்டே பள்ளு இலக்கியங்கள் தோன்றின. ஆனால் இப்பாடல்கள் குறிப்பிடும் உழவின் பெருமை பேசாது உழவர்களை ஏசும் ஏசல் இலக்கியமாகப் போனதைத் தமிழ் இலக்கிய வரலாறு நமக்குக் காட்டத் தவறவில்லை. நாட்டுப் பாடல்களில் காணப்படும், மிகையுணர்வுகள் அப்பாடல்கள் வழக்கிலிருக்கும் இனத்தின் பண்பாட்டைப் பிரதி பலிக்கின்றன என்றும் ஒவ்வொரு பண்பாட்டிற்கும் ஓர் உள்ளொருமையும் (Inner harmonies) வெளியீட்டு முறையும் (Expression style) உண்டு என்று கூறும் மானுடவியல் கோட்பாட்டின்படி மள்ளர்களிடம் வழக்கிலுள்ள உழத்தியர் பாடல்கள் இம்மக்களின் பண்பாட்டினைப் பிரதிபலிப்பன என்றால் மிகையாகாது. அதே நேரத்தில் பள்ளுப் பாடல்கள் அவ்வாறு இல்லை என்பதை இங்கே நினைக்க வேண்டும். அதற்கான காரணம் 'மள்ளர்' மரபினைப் பள்ளர் என்று தலைகீழாக்கிப் பண்ணை வேலையாள் போல் சித்திரிக்க முயன்றதே ஆகும். இந்த வகையான அதிகாரக் கட்டமைப்புக் குறித்து பின்பு விரிவாகப் பேசுவோம்.

**பள்ளு நாடகம்**

பள்ளு இலக்கியங்களைப் பள்ளு நாடக இலக்கியம் என்றும் அடையாளப்படுத்துவர். வயலில் வேலை செய்யும் உழவர், உழத்தியர்கள் தங்களின் தொழிற்திறனைப் பாட்டு வடிவில் பாடலாக்கிய போது அதை அப்படியே நடித்துக் காட்டும் ஆற்றலும் பெற்றிருந்திருப்பர் என்பதில் மாற்றுக்கருத்தில்லை. இந்த வகை இலக்கியம் தான் உழத்திப்பாட்டு. மழை வேண்டியும், பயிர் நன்கு வளர்ந்து மகசூல் பெற வேண்டியும் தாம் வழிபடும் விருப்பத்தெய்வக் கோயிலில் பொங்கலிட்டு, கிடாய்வெட்டி, கும்மிப்பாடல் பாடி வேண்டியிருப்பர். இவ்வாறு விழாக் காலங்களில் இறைவன் முன் நிகழ்த்தப்பட்ட இவர்களின் பாடற்/ஆடற்கலையின் சிறப்பு யாரோ ஒருவன் மனதில் நாடகப் படைப்பாக இடம்பெற்று மறுபடைப்பாக்கம் செய்யப்பட்டுப் பள்ளு நாடகம் எனும் வகையாகத் தோற்றம் பெற்றிருக்கலாம். பொதுவாக எல்லாப் பள்ளு நூல்களுமே நாடகக் கூறுகளுடன் தான் வடிவமைக்கப்பட்டுள்ளன. இலக்கியப் பிரதிகளைக் காட்டிலும் நாடகப் பிரதிகள் நாடகமாக்கப் படுகையில் பெருமளவில் மக்களிடம் பரவும் தன்மையுடையன. பள்ளு நூல்கள் பெரும்பாலும் ஏதேனும் ஓர் இறைவனுடன்/ இறைத்தளத்துடன் தொடர்புப்படுத்தி உருவாக்கப்பட்டிருக்கின்றன. முக்கூடற்பள்ளு, குருகூர்பள்ளு, வையாபுரிப்பள்ளு, திருமலை முருகன் பள்ளு, கதிரை மலைப் பள்ளு இவ்வகையின ஆகும். இப்பள்ளுப் பிரதிகளில் மூத்த பள்ளி ஒரு சமயத்தவராகவும் இளைய பள்ளி ஒரு சமயத்தவராகவும் அமைந்து தங்களின் கடவுளே சிறந்தவன் என்று பேசும் ஏசல் முறை பிரசித்தி பெற்ற பகுதி. 16, 17-ம் நூற்றாண்டில் சைவம் - வைணவ சமயத்திற்குள் நடந்த சமயப் பூசல்கள் பள்ளு நாடகங்களின் வழி மக்களிடம் நடித்துக் காட்டப்பட்டிருக்கின்றன என்றும் கருதலாம். ஏனென்றால் பள்ளனும், பள்ளியும் பள்ளு நூல்களில் அறிமுகம் செய்யப்படும் போதே ஒரு நாடக மாந்தரை அறிமுகம் செய்வது மாதிரி தான் அறிமுகம் செய்யப்படுகின்றார்கள்.

"தடி சுற்றி ஏப்பமிட்டே
அடி வைப்பதும்
மறுக்கும் மது வெறி கொண்டு

உறுக்கும் சிரிப்பும் தோன்ற
வடிவழகக் குடும்பன் வந்து
தோன்றினானே"

(முக்கூடற்பள்ளு, பா. எண். 7)

"மிருகால் நடி நடிப்பும்
திரு நீறிடும் நெடிப்பும்
ஏழூர்க் குடும்பன் வந்து தோன்றினானே"

(கண்ணுடையம்மன் பள்ளு, பா.எண்.11)

இப்படியாக நாடகச் சாயலில் பள்ளு இலக்கியம் பிரதியாக்கப்பட்டிருப்பது எதற்கு என்பதைப் பின்னர் விரித்துப் பேசுவோம். இருப்பினும் பள்ளு நாடகம் அரசியல், சமூக நோக்கங்களுடன் அக்காலத்தில் மக்களிடம் பெரிதும் நடித்துக் காட்டப்பட்டிருந்திருக்கும் என்றே கருத வேண்டியிருக்கின்றது. ஏனென்றால் பள்ளு நூல்கள் நிறைய வழக்கிலிருப்பதற்கு இதுவும் ஒரு காரணம் என்றே சொல்ல வேண்டும். **"நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது"** என்ற பழமொழி பள்ளு நூலின் எண்ணிக்கையை வியப்பதற்காக எழுந்ததென்றே கருதலாம்.

## பள்ளுப் போலிகள்

பள்ளு நூல்கள் நூற்றுக்கணக்காகத் தோன்றி மக்களிடையே ஒரு பரப்பரப்பான இலக்கியமாக இடம் பெற்று விட்டதால் இவ்விலக்கிய அமைப்பைப் போன்று பல போலிப் பள்ளு நூல்கள் தோன்றத் தொடங்கியதைப் பள்ளு இலக்கியத் தோற்றம் வளர்ச்சி வரலாற்றில் பார்க்க முடிகிறது. அவ்வகையில் புகழ்பெற்ற பள்ளு இலக்கியங்களில் எளிய சிந்துப் பாடல் அமைப்பில் "வைத்தியப்பள்ளு" எனும் பெயரில் சில பள்ளு நூல்கள் தோன்றியுள்ளன. இதே போன்று மன்னார் மோகனப் பள்ளு, திருநீலகண்டன் பள்ளு, வேதாந்தப் பள்ளு, வைத்தியப் பள்ளு, அகத்தியப் பள்ளு இருநூறு போன்றனவும் பள்ளுப் போலிகளாகவே கருதத்தக்கன. இதில் வேதாந்தப் பள்ளு அத்வைத வேதாந்தக் கருத்துக்களைப் பள்ளு இலக்கிய வகை மூலம் சொல்ல முயல்கின்றது. பாடல்கள் எளிதில் புரியும்படி இல்லை. ஆனால் பள்ளு நூலின் இலக்கணம் பள்ளன், பள்ளியர் இருவர், பண்ணைக்காரன், வயல்வேலை என்று மேலோட்டமாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

அகத்தியர் பெயரால் வழங்கப்படும் பல மருத்துவ நூல்களில் "அகத்தியர் பள்ளு இருநூறு" எனும் இந்நூலும் ஒன்று. அகத்தியரின் மருத்துவ முறைகள் தமிழ்நாட்டு மருத்துவர் களிடையே மிகவும் பரவலாக வழக்கில் இருந்ததால், புலமை உள்ள மருத்துவர்கள் அந்த மருத்துவ முறைகளைப் பள்ளு என்றும், கும்மி என்றும், பிள்ளைத்தமிழ் என்றும் வகை வகையாகத் தத்தம் திறமைகளுக்கு ஏற்ற வகையில் பாடி வைத்துள்ளமை தமிழ் இலக்கிய வரலாற்றில் பிரசித்தமானவை. பள்ளு நூலிற்கும் இதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. காரணம் பள்ளு நூலில் சொல்லப்பட்டுள்ள மள்ளர் (பள்ளர்) அதாவது நெல் வேளாண்மை செய்யும் மருத நில உழவர்களின் வேளாண் வாழ்க்கை இதில் சொல்லப்படவில்லை. அதற்கு மாறாகப் பள்ளு நூலின் வடிவ அமைப்பில் மருத்துவ முறைகள் மட்டுமே சொல்லப்பட்டுள்ளன. பள்ளீரே என்று உழக்குடிப் பெண்ணை முன்னிலைப்படுத்தி, அவர்களிடம் நோய், அதற்கான மருந்து இது என்று சொல்வது போன்ற உரையாடல் அமைப்பில் அதாவது இப்படிச் செய்வதால் இப்படியான மருத்துவப் பலன் கிடைக்கும் என்றவாறு ஒரு வைத்தியர் உரையாடுவது போன்று இந்நூலில் இடம்பெறும் பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

> **"ஆதி முனி தானுரைத்த பள்ளு தன்னி**
> **லன்பாக யெத்திய நூலாய்ந்து சொல்லி**
> **மேவுங் கடல் சூழ்மிக்க பொதிகை வளர்**
> **காவு தமிழ் முனிவர் கருத்தி லுகந்தது காண்"**

என்று தொடங்கும் அகத்தியப் பள்ளுவின் இறைவணக்கப் பாடல் வரிகள் அகத்தியரின் மருத்துவத்தை ஆராய்ந்து சொல்லும் தன்மையது இந்நூல் எனும் கருத்தைத் தெரிவிக்கின்றன.

> **"மேவலிகு மிகு முனி சொன்ன முறையிதே**
> **. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .**
> **மிகவுங் கேளீர் பள்ளீரே**
> **. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .**
> **இறக்க விட்டே யரைத்து வுருண்டை**
> **சேர்த்துப் பாடும் பள்ளீரே" (பாடல் 7)**

என்றவாறு ஒவ்வொரு மருத்துவக் குறிப்பு சொல்லப்படும் போதும் அகத்திய முனிவர் சொன்ன மருத்துவக் குறிப்பு இது;

இதனைத் தெரிந்து பயன்படுத்துங்கள் பள்ளீரே என்றவாறு பாடலின் கருத்துக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இந்நூல் ஒரு வகையில் பள்ளுப் போலி நூல் ஆகும். பள்ளு இலக்கியத்தின் எளிய மொழியமைப்பும் அதில் இடம் பெறும் சிந்து இசையும் பொது மக்களால் விரும்பத்தக்கதாக அமைந்திருந்ததால், புதிய கருத்துக்களைச் சொல்ல முயலும் புலவர்கள் பள்ளு இலக்கிய வடிவத்தினைத் தேர்ந்தெடுத்தனர். அவ்வகையில் அகத்தியரின் மருத்துவ முறைகளைப் பொது மக்களுக்குத் தெரிவிக்கும் நோக்கில் இந்நூல் படைக்கப் பட்டிருக்கலாம். ஆனால் இந்நூலில் இடம்பெறும் நஞ்சு முறிக்கும் வைத்திய முறைகளை வைத்தியம் அறிந்தவர்கள் மட்டுமே தெரிய முடியும் என்பதே உண்மை. ஏனென்றால் வைத்தியக் குறிப்புகளைச் சொல்லும் பாடலடிகளை எளிய நடையில் இந்நூலாசிரியரால் அமைக்க முடியவில்லை. கவியில் புலமை இருக்கிறது எளிமை இல்லை. இந்நூலின் ஆசிரியர் யாரென்று தெரியவில்லை. ஹகிம் பா.மு. அப்துல்லா சாயபு என்பவரின் உரைக் குறிப்புடன் எஸ்.பி. இராமச்சந்திரன் என்பவர் இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இந்நூலில் இடம் பெறும் பல வைத்தியக் குறிப்புக்கள் எளிதில் பின்பற்றிச் செய்யக் கூடியவை என்றாலும், இதில் குறிப்பிடப்படும் மருத்துவப் பொருட்களைச் சேகரிப்பதும், இதில் குறிப்பிட்டவாறு மருந்து செய்தலும் இயலாத ஒன்று. இவைகள் சித்த மருத்துவ மேதைகளால் மட்டுமே அறிந்து செய்யப்படக் கூடியதாய் உள்ளன. இந்நூலில் இரசவாத மருத்துவ முறை மிக விரிவாக விரித்துச் சொல்லப்பட்டுள்ளது. 28க்கும் மேலான இரசவாத முறைகள் மிக விளக்கமாகப் பாடப்பட்டுள்ளன. இவையல்லாது 103 வகை நோய்களும், அதற்கான மருத்துவ முறைகளும் இந்நூலில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

### பள்ளுப்பாட்டின் இலக்கணம்

பள்ளுப் பாட்டின் இலக்கணம் என்று இல்லாமல் உழத்திப் பாட்டின் இலக்கணம் என்று கி.பி.14ஆம் நூற்றண்டில் எழுந்த நவநீதப் பாட்டியல் கூறும் இலக்கண வரையறையே பள்ளுப் பாட்டின் இலக்கணமாக எல்லோராலும் உரைக்கப் படுகின்றது. அதன்படி

1. கடவுள் வணக்கம் (காப்பு)
2. மூத்த பள்ளி வரல்
3. இளைய பள்ளி வரல்
4. குடும்பன் (பள்ளன்) வரல்
5. பள்ளியர் குடித்தரங் கூறல்
6. பள்ளியர் பெயர்ப் பெருமை கூறல்
7. நாட்டு வளங்கூறல்
8. நகர் வளங்கூறல்
9. குயில் கூவக் கேட்டு மகிழ்தல்
10. மழை வேண்டி கடவுட் பரவல்
11. மழைக்குறியோர்தல்
12. மழை பொழிதல்
13. ஆற்றுவரவு (வெள்ளம் பாய்ச்சல்)
14. அதன் சிறப்புக் காண்டல்
15. ஐந்திணை வளங்கூறல்
16. பண்ணைத் தலைவன் வரவு
17. பள்ளிகள் முறையீடு
18. இளையவளைப் பண்ணைத் தலைவன் உரைப்பது
19. பள்ளன் வெளிப்படல்
20. பண்ணைச் செயல் வினவல்
21. பள்ளனவை கூறல்
22. ஆயரை வருவித்தல்
23. ஆயர் வருகை
24. ஆயர் பெருமை கூறல்
25. மூத்த பள்ளி முறையீடு
26. பள்ளன் கிடையிலிருந்தான் போல் வரல்
27. அவனைத் தொழுவில் மாட்டல்

28. அவன் புலம்பல்
29. மூத்த பள்ளி அடிசில் கொண்டு வரல்
30. பள்ளன் அவளொடு கூறல்
31. அவன் அவனை மன்னிப்பு கேட்க வேண்டுதல்
32. அவள் மறுத்தல்
33. அவன் துன்பப்படல் (அவன் ஆற்றல்)
34. அவள் அவனை மீட்க வேண்டிப் பண்ணைத் தலைவனைப் பரவல்
35. விதை முதலிய வளம் கூறல்
36. கிடை வளங்கூறல்
37. காளை வளங்கூறல்
38. ஏர்பூட்டி உழுதல் (ஏர்மங்கலம்)
39. காளை வெருளல்
40. காளை பள்ளனை முட்டல் பள்ளன் விழுதல்
41. பள்ளிகள் புலம்பல்
42. பள்ளன் எழுந்திருத்தல்
43. பண்ணைத் தலைவர்க்கு அறிவித்தல்
44. நாற்றுநடல்
45. அருவி வெட்டல், கடாவிடுதல்
46. நெற்பொலி தூற்றல் அளத்தல் (முகவைப் பாட்டு)
47. மூத்த பள்ளி முறையீடு
48. பள்ளிகளுள் ஒருவர்க்கொருவர் ஏசல்

இவ்வுறுப்புக்களில் சில குறைந்தும் கூடியும் திரிந்தும் வருவனவுங் கொள்க என்று சுட்டப்படுகிறது.[13]

## அடிக்குறிப்புகள்

1. இராசா, கி., - இலக்கிய வகைத்திறனாய்வு, ப.2.
2. தமிழண்ணல், - புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.12.

3. செயராமன், ந.வீ. - பள்ளு இலக்கியம், ப. 4.

4. மேலது, ப. 4.

5. பரிமணம், அ.பா. வையாபுரிப்பள்ளு, ப. 5.

6. வானமாமலை, நா., பள்ளு நூலின்தோற்றம் (கட்டுரை) சரசுவதி, நவம்பர், பக். 13-16.

7. தேவநேயப்பாவாணர், ஒப்பியன் மொழிநூல், ப.201.

8. முத்துமணி தேவேந்திரர், இரா; தமிழகக் கிராமங்களில் தேவேந்திர குல வேளாளர் தலைமக்களுக்குக் கிடைத்து வரும் கோயில் மரியாதைகள், (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ.) தமிழர் பண்பாட்டு வரலாறு, தொகுதி - 1, ப. 173.

9. சுப்பிரமணியன், கா., சங்ககாலச் சமுதாயம், பக். 18-19.

10. சிவசுப்பிரமணியன், ஆ., பூச்சியம்மன் வில்லுப்பாட்டு, ப. 48.

11. பின்னிணைப்பு, தேவேந்திரர் மங்கலவாழ்த்துப்பாடல்.

12. பின்னிணைப்பு, தேவேந்திரர்கள் வீழ்ந்த வரலாற்றுக் கதைப்பாடல்.

13. குமாரசுவாமி, வ., தண்டிகைக் கனகராயன் பள்ளு, (1932) ஆராய்ச்சிக் குறிப்பு, ப. 3.

# 3. தமிழ் இலக்கியமும் மருதநில மக்களும்

தமிழ் இலக்கியத்தில் குறிப்பாகச் சங்க இலக்கியம் முதல் பள்ளு இலக்கியம் வரை மருதநில மக்களின் வேளாண்வாழ்க்கை எவ்வாறு மள்ளர்களின் அடையாளங்களுடன் சித்திரிக்கப் பட்டுள்ளது என்பதை இப்பகுதியில் சுருக்கமாக விளக்க முயன்றுள்ளேன்.

## மருதநில வேளாண் வாழ்க்கை

சங்க காலம் முதல் 16ஆம் நூற்றாண்டு வரை அதாவது பள்ளு நூல்களின் காலம் வரை இலக்கியங்கள் மூலம் நமக்குக் கிடைக்கும் மள்ளர்கள் குறித்த சான்றுகள் இவர்களை வீரர்கள், உழவர்கள், குறிப்பாக மருதநிலத்தின் கழனிக்காவலர் என்றே அடையாளப்படுத்துகின்றன. மள்ளர்கள் எல்லா நிலத்திலும் அதாவது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை நிலத்திலும் கருப்பொருளாகப் பேசப்படுகின்றனர். இதில் மருத நிலத்தவர் மட்டும் மள்ளர் என்ற கருத்து ஏற்புடையதா என்ற வினா எழுவது இயற்கையே. இதற்கான பதிலை நாம் இடைக்கால இலக்கியமான பள்ளு நூல்களிலும், கல்வெட்டுச் சான்றுகளிலும், நாட்டுப்புற வழக்காறுகளிலும் தேடி, சங்க காலத்தில் மள்ளர் என்று அறியப்படுபவர்கள் தான் பள்ளு நூல்களில் அறியப்படும் மள்ளர் (பள்ளர்) ஆவர் என்று சொல்ல முடியும். இவ்வாறு வரலாற்றுக் காலம் நெடுகிலும் தனது தொடர்பு அறுந்து போகாமல் மீண்டும் மீண்டும் இலக்கியங்களிலும் வரலாற்றுச் சான்றுகளிலும் இம்மக்களின் மருதநில நெல் வேளாண்மை வாழ்க்கை பேசப்படுதலை நாம் கவனத்தில் கொள்ளவேண்டும். மருதநில வர்ணனை என்றால் அது மள்ளர்களின் வேளாண் வாழ்க்கையைக் காட்டுவதாகவே தமிழ்ப் புலவர்கள் படைத்துக் கொண்டதை நாம் இங்கே நினைத்துக் கொள்ள முடியும். இப்படியான ஒரு வாசிப்பைத் தமிழ் இலக்கியத்தைக் குறிப்பாக மருதநில வாழ்வியல் செய்திகளைப் படிக்கையில் காய்தல், உவத்தலின்றி ஏற்றுக்கொண்டால் அங்கே பள்ளு நூலில் இடம் பெறும் பள்ளர்கள் மள்ளர்களாய் அர்த்தம் பெறுவார்கள்.

வயலும் வயல் சார்ந்த இடமும் மருத நிலமாகும். தீம்புனல் உலகம் என்று போற்றப்படும் மருதம் வற்றாத நீர்வளஞ்சான்ற பகுதியாகும். வான் பொய்ப்பினும் தன் பொய்யாக் காவிரி பாயும் நிலவளஞ்சான்ற கழனிகள் மருத நிலத்திற்குச் சான்றாகும். "கரும்பும் செந்நெல்லும் தென்னையும் வாழையும் கமுகும் மாவும் இஞ்சியும் மஞ்சளும் விளைவு அறாமல் விளையும் நிலம் மருதமென்று" (பட்டினப்பாலை 8, 16-19) சங்க இலக்கியம் சான்று பகரும். இம்மருதநில மக்களின் முதன்மையான உணவு செந்நெல்லும் வெண்ணெல்லும் ஆகும் (தொல் - பொருள் - 20 இளம்பூரணர் உரை). இம்மக்களின் முதன்மைத் தொழில் நெல் விளைவிப்பதே. நெல் விளைவித்தல் இடையறாது கடுமையான உழைப்பால் உருவாவது. "இவ்வாறான உழவுத் தொழிலை மேற்கொள்வோர் உழவர் எனப்பட்டனர். உழுதல் என்பது இடைவிடாது முயலும் மெய்ம்முயற்சி பயிர்த் தொழிலுக்கு வேண்டப்படுதலின் இத்தொழிலை உழவு என்ற சொல்லால் பண்டையோர் வழங்கினர்."[1] இத்தகைய கடும் உழைப்புமிக்க மருதநில மக்கள் மள்ளர், மழவர், உழவர், களமர், கடையர், கடைசியர், உழத்தியர் என்று சங்ககாலத்தில் பெயர் பெற்றனர். இவ்வுழவர்கள் தம் தொழிலில் சோம்பியிராதவர் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை "மடியா வினைஞர்" என்ற தொடரால் சிறப்பித்துக் கூறுகின்றது. இப்பாடல் வருமாறு.

"தொல்பசி அறியா துளங்கா இருக்கை
மல்லற் பேரூர் மடியின் மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி"

இத்தொடரால் தொன்றுதொட்டு வறுமையால் வந்தபசி அறியாத, நிலையான குடியிருப்பினை உடைய வளப்பமுடைய பெரிய ஊர்களில் வாழ்ந்தவர்கள் மருதநில உழவர்கள். இவர்கள் சோம்பியிராதவர்கள் ஆவார் என்ற கருத்தைப் பெறலாம். இவ்வாறு உழவுத் தொழிலால் நெல் முதலிய பொருள்கள் விளைவிக்கும் உழவர்கள் நாட்டின் உயிர் நாடியாக கருதப்பட்டனர். இதனை,

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்" (புறம் - 18)

என்றவாறு புறநானூற்றுப்பாடல் குறிப்பிடக் காண்கின்றோம். இந்த உணவை உண்டுசெய்த இந்த உழவர்களே அரசனின் வெற்றிக்கும் காரணமாக அமைந்தார்கள். இதனை,

"பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுகால் மருங்கின் ஈன்றதன் பயனே"
(புறம்.25-26)

என்ற பாடலில் அறியலாம். இதுமட்டுமே அல்லாது இந்தப் பெருந்திறல் உழவரே ஏர்க்களத்தில் ஏருழவர் ஆகவும் போர்க்களத்தில் வாள் உழவராகவும் தொழிலாற்றி மன்னனுக்கு வெற்றி தேடித் தந்தனர். இங்கே "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தக்குடி" என்பதற்கு முனைவர் குருசாமி சித்தர் கூறும் பின்வரும் கருத்து நினையத் தக்கது. "வாள் என்பதற்கு ஏருழும் கலப்பை என்ற பொருளும் உண்டு. கலப்பையோடு அதாவது ஏரோடு தோன்றிய முதல்குடி என்பதே தமிழினத்திற்குப் பெருமை ஆகும். அவ்வகையில் ஏருடன் முன் தோன்றிய தமிழர்களின் மூத்தக்குடி மள்ளர் குடி என்பார்." இந்த மள்ளர்கள் புறப்பொருளில் பேசப்படுகையில் மள்ளர்கள் அதாவது வீரர்கள் என்றும் அகப்பொருளில் பேசப்படுகையில் மல்லர்கள் அதாவது செல்வ வளமுடையவர்கள் என்றும் சங்க இலக்கியத்தில் குறிக்கப்படுவதாகத் தமிழறிஞர் முனைவர் எம். மணிவேல் குறிப்பிடுவார்.[2] இதனையே,

"அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
வருந்தகைத்தாகும் மள்ளரெனும் பெயர்"
(திவாகர நிகண்டு)

என்றும்

"செருமலை வீரரும் திண்ணியோரும்
மருத நிலமக்களும் மள்ளரென்ப"
(பிங்கல நிகண்டு)

என்றும் கூறுவதைக் காண்கின்றோம். இங்கே மருதநில உழவரும் வீரரும் மள்ளரென்று இலக்கணப் படுத்தப்பட்டுள்ளதை அறியமுடியும்.

இந்த உழவர்கள் வாழும் ஊர்கள் அவற்றின் சிறுமை, பெருமை கருதிச் சிற்றூர், பேரூர் என அழைக்கப்பட்டன. (கலி.109-116). இந்த ஊர்கள் செல்வம் நிரம்பித் திகழ்வனவாதலினாலும் மல்லர் வாழ்வதினாலும் மல்லற் பேரூர் எனப் புகழப்பட்டன. மருத நிலத்தில் நெல் விளைவதனால் மருத நிலத்தின் ஊர்கள்

"வெண்ணெல் வைப்பின் நன்நாடு" (அகம், 201–13)

"நெல்லின் செம்மல் மூதூர்" (புறம் – 97)

என்றும் போற்றப்பட்டன. இதனால் செந்நெல் விளையும் மருத நிலத்தையும் மருத நிலத்தூரையும் கைப்பற்றுதலே பண்டைய போராகக் கருதப்பட்டது. இதனைப் புறநானூறு 57, 97 ஆகிய பாடல்களின் வழி அறியலாம். போரில் வெற்றி பெற்ற வீரர்கள் செந்நெல்லையும், வேழத்தையும் (கரும்பு) பரிசிலாகப் பெறுவதையே பெருமையாகக் கருதியதையும் புறநானூற்றுப் பாடலின் வழியாக அறிய முடியும். "இவ்வாறு சங்க காலத்தில் மருத நில வாழ்க்கை பிற நில வாழ்க்கைகளில் எல்லாம் செழிப்பு மிக்கதாயிருந்தது. இங்குக் குழு வாழ்க்கை அழிந்து அரசு தோன்றியது பிற மக்களையும் அரசில் இணைத்துக் கொள்ளப் பல போர்கள் நிகழ்ந்தன"[3] என்ற செய்தியையும் நாம் அறிந்து கொள்ள முடியும். புறம் 97-ஆம் பாடலில் ஔவையார் அதியமானின் வீரத்தைப் புகழ்ந்து பாடும்போது,

**"பிணிக்கதிர் நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்க உரித்து ஆகல் வேண்டின், சென்றவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே. . ."**

நெல் விளையும் ஊர்களை அதியமானிடம் இருந்து காப்பாற்ற விரும்புவோர் அவனுக்குத் திறை செலுத்திக் காப்பாற்றிக் கொள்ளட்டும் என்றே பாடுகின்றார். ஆக, போர்கள் நெல்விளையும் மருத நில ஊர்களைக் கைப்பற்றவே நடந்தன என்பதைத் தெரியமுடியும்.

சங்க கால மன்னர்களின் அரசு இருக்கை மருத நிலத்திலே இருந்தது. இந்த அரணத்தைக் கைப்பற்றும் போர் உழிஞை ஆகும். இந்த **"உழிஞைக்குப் புறம் மருதம்"** என்பதும் இங்கே நினைக்கத் தக்கது. புறநானூற்றுப் பாடல்களில் எல்லாம் வேந்தனை வர்ணிக்கும் போது அவனின் மருத நில வளத்தை மீண்டும் மீண்டும் வர்ணிப்பதைப் பார்க்கின்றோம். காட்டாக, சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னியை மதுரைக் குமரனார் எனும் புலவர் வாழ்த்தும்போது மருதநிலமே சிறப்பித்துப் பேசப்படுகின்றது.

**"கொண்டைக் கூழைத் தண்தழைக் கடைசியர்
சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்
மலங்குமிளிர் செறுவின் தளம்பு தடிந்திட்ட**

பழன வாளைப் பரூஉக்கண் துணியல்
புதுநெல் வெண் சோற்றுக் கண்ணுறை ஆக,
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி,
நீடு கதிர்க் கழனிச் சூடுதடு மாறும்
வண்கை வினைஞர் புன்தலைச் சிறா அர்
தெங்குபடு வியன்பழம் முனையின், தந்தையர்
குறைக்கண் நெடும்போர் ஏறி, விசைத் தெழுந்து
செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்
வைகல் யாணர் நன்னாட்டுப் பொருநன்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . ." (புறம், 61)

சென்னியின் சோழ நாடு மருத வளத்தால் மிகுந்தது. கொண்டை முடித்து அதிலே தழையும் செறுகியவராக உழத்தியர் (கடைசியர்) பயிரிடத்தே வளர்ந்த ஆம்பலும் நெய்தலும் ஆகியவற்றைக் களைந்து ஒதுக்குவர். வயலிடத்தே, பொய்கையிற் கிடைத்த பருத்த வாளை மீனைத் துணைக் கறியாகக் கொண்டு, புது நெல்லின் வெண் சோற்றை விலாப் புடைக்கத் தின்று உழவர்கள் மகிழ்வர். அப்பெரு உணவால் வயலிலே சூட்டை இடும் இடம் அறியாது தடுமாறுவர். அவர் சிறுவர்களோ தென்னை நெற்றை விரும்பாது உயரக் குவிந்த போரின் மீது ஏறி நின்று, பனம் பழம் பறிக்க உந்திக் கொண்டு இருப்பர். இத்தகைய புது வருவாய் மிகுந்த வளநாட்டின் வேந்தனே என்று பாடுவதைக் காண்கின்றோம். சங்க காலத்தில் நெல் விளையும் மருதநிலத்தைக் கைப்பற்றி அதனை ஆட்சி செய்யும் தலைவனே வேந்தன் எனப் பெயர் பெறுவதைக் காணமுடியும். சங்க இலக்கியத்தில் மருதநில உழத்தியர் கடைசியர் என்று அறியப்படுவது போன்று பள்ளு நூலும் "காவி நாறுங் கடைசியர் காலில்" (செண்பகராமன் பள்ளு) என்று குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.

வேளாண்மை வாழ்க்கை எனும் உழுதொழில் உழுதல், உரமிடுதல், நீர்ப்பாய்ச்சுதல், விதைத்தல், களைஎடுத்தல், காத்தல், அறுவடை, பதப்படுத்துதல் எனப் பல கூறுகளாய் அமைவது நெல் வேளாண்மை மிக நுட்பமான கடுமையான தொழில் என்பதைக் காட்டுகிறது. இந்த நெல் வேளாண்மை குறித்துத் தமிழ் இலக்கியம் முழுவதும் சங்கம் முதல் பள்ளு நூல்கள் வரை மருதநிலத் திணைநில வாழ்க்கையாய்ப் பேசப்படுவது மள்ளர்களின் வேளாண் வாழ்க்கையே ஆகும். இந்த மருத நில வேளாண் வாழ்வின் அதாவது நெல் வேளாண் வாழ்வின் தனித்த இலக்கிய வகையே பள்ளு நூல்கள். சங்க இலக்கியத்தில்

குறிக்கப்படும் ஏர்மங்கலமும், பன்னிரு பாட்டியல் குறிப்பிடும் உழத்திப் பாடலும் பள்ளு நூல்களின் மூலம் என்பது முன்னமே விளக்கப்பட்டுள்ளது.

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. உணவைப் பெருக்கும் உழவுத் தொழில் சங்க காலத்தில் தலைமைத் தொழிலாக, உயிர்த் தொழிலாகப் போற்றப்பட்டது. உழவு செய்தவர்கள் வேளாண் மாந்தர் என்று போற்றப்பட்டனர். இவர்கள் குறித்துத் தொல்காப்பியம்.

"வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"
(தொல் – பொருள் –மரபு 81)

என்றவாறு உழவர்களுக்கு உழவுதான் உயிர். உழுதலும், பயிரைக் காத்தலும் விளைச்சலைப் பெருக்குவதும் தவிர்த்து இவர்களுக்கு வேறுவினை உழவுக் களத்தில் இருந்திருக்கவில்லை என்று குறிப்பிடும் இத்தகைய வேளாண் வாழ்க்கையால் இம்மக்களிடம் அதுகுறித்துப் பல இலக்கியங்கள் தோன்றின. அவ்வகை இலக்கிய வகைகளில் ஏர்மங்கலம் எனும் பொன் ஏர்ப் பாடல் வகை அன்று முதல் இன்று வரை மள்ளர்களால் ஏர்க்களத்தில் பாடப்பட்டு வருவதைப் பார்க்க முடியும். கொங்கு நாட்டில் வேளாண்மையின் தொடக்க விழாவாக அமையும் இந்திர விழா எனும் நாற்று நடவுத் திருவிழாவை இன்றும் இம்மக்கள் பொன் ஏர்விழா என்றும் நாற்று நடவுவிழா என்றும் நடத்தி வருவதைப் பார்க்க முடிகின்றது. அதிலும் சிவனே மள்ளனாக (உழவன்) மாறி வயலில் நெல் நாற்று நடவு செய்தார் எனும் பழமரபு நம்பிக்கையின் அடிப்படையில் இவ்விழா நடத்தப்படுவதும் அவ்விழா மருநில வேந்தன் நினைவாக வழிபடப்படும் இந்திர விழாவாக அமைவதெல்லாம் இம்மக்களின் வேளாண் பண்பாட்டைச் சிறப்பிப்பதே ஆகும். சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் ஏர்மங்கலப் பாடலே இன்று மள்ளர்கள் கழனியில் பாடுகின்ற பொன் ஏர்ப் பாடலாகும். சங்க அகப்பாடல், இதனை

"கழனி உழவர் கலி சிறந்ததெடுத்த்
கறங்கிசை . . . . . . . . . . . . ." (அகம். 266. 17–18)

என்று குறிப்பிடும். இந்த மக்களின் வேளாண் தொழில் குறித்துப் பல புராணங்களும், பல சிற்றிலக்கியங்களும் இம்மக்கள் குறித்தும் புறநானூறு முதல் கம்பன் வரை சொல்லியுள்ள வேளாண் சார்ந்த

பண்பாட்டைக் காணுதல் இங்கு இவர்களை மருத நில மக்களாய்ப் புரிந்து கொள்ளத் துணை செய்யும்.

## புறநானூறு முதல் கம்பன் வரை

புறநானூற்றில் மொத்தம் 15 இடங்களில் மள்ளர், மல்லர், மல்லல் என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன. இந்த மூன்று சொற்களுமே முறையே வீரர், வலிமை, வளமை என்று அறியக்கிடக்கின்றன. (பாடல்கள் : 10, 18, 77, 78, 79, 80, 81, 84, 89, 174, 192, 219, 251, 254, 399) 399ஆம் பாடலில் மட்டும் மள்ளர் என்பது உழவரையும் குறிப்பதாக உள்ளது. இதே புறநானூற்றில் மருத நிலத்தில் வேளாண்மைத் தொழில் செய்யும் ஆண் உழவன், உழவர், உழுவர், களமர் என்றும் பெண்கள் கடைச்சியர் என்றும் குறிக்கப்படுகின்றனர் (பாடல்கள் : 13, 42, 61, 65, 109, 209, 212, 230, 289, 384, 387, 395). நற்றிணைப் பாடல்கள் மருத நிலத்தவரை மட்டுமே உழவர் என்று குறிக்கின்றன. களமர் என்போரைக் குறிஞ்சி நிலத்தவராகக் குறிக்கிறது. பாலை நிலத்தவர் வில்லேர் உழவராக வருகின்றனர் (பாடல்கள்: 3, 125, 315, 331, 340), குறுந்தொகை மருதநிலத்தில் நேரடியாக உழவு செய்வோரையே உழவர் என்கின்றது (பாடல், மருதம் 10). ஐங்குறுநூற்றில் மருதத்திணை ஒன்றில் மட்டுமே உழவர் என்ற சொல் காணப்படுகின்றது. "வித்திய உழவர் நெல்லோடு பெயரும்" (மருதம், பா. 3). இதே போன்று மள்ளர் என்ற சொல்லும் வீரர், உழவர் என்ற பொருளில் எல்லா அகப்பாடல்களிலும் புறப்பாடல்களிலும் மாறிமாறிக் கையாளப்பட்டு, மல்லல் (வளமை) மல்லர் (வலிமை) மள்ளர் (வீரர்) மள்ளர் (உழவர்) என்று ஆகி, போர்க்களத்தில் இருக்கையில் போர்க்கள மள்ளர் என்றும் ஏர்க்களத்தில் இருக்கையில் ஏர்க்கள மள்ளர் என்றும் மள்ளர் எனும் சொல் அறியக்கிடக்கின்றது. இத்தகைய ஒரு பெரிய சிக்கல் மிக்க வினாவுக்கு விரிவான பதிலையே மள்ளரிய அறிஞர் குருசாமிசித்தர் தனது "தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குலவேளாளர் அடிப்படைச் சான்றுகள்" எனும் நூலில் தருவார். விரிவான விளக்கம் வேண்டுவோர் இந்நூலைப் படிக்கலாம். இங்கே நமது புரிதல் தமிழ் இலக்கியம் முழுவதும் ஒரு தொடர் சங்கிலி இணைப்பால் பள்ளு இலக்கியம் வரை மள்ளர்களின் மருதநில வேளாண் வாழ்க்கை மள்ளர் மரபாக அறியக்கிடக்கிறது என்பதே ஆகும். கம்பர் இதை மிக அற்புதமாகச் செய்து காட்டுவதை வருமாறு காணலாம்.

கம்பராமாயணம்

"கதவினை முட்டி, மள்ளர் கை எடுத்து ஆர்ப்ப எய்தி"
(பாலகாண்டம், ஆற்றுப்படலம், பா.6)

ஆறுகளில் வெள்ளம் வந்ததால் உழவர்கள் கைகளை உயர்த்தி ஆரவாரம் செய்தனர் என்பது இதன்பொருள். அதே வேளையில் கால்வாய்கள் உடையாமல் காத்து நிற்கின்ற பணியையும் இவர்கள் செய்வதைக் கம்பன்

"காத்த கால்மள்ளர் வெள்ளக்கலிப் பறை கறங்க"
(பாலகூாண்டம், ஆற்றுப்படலம், பா. 18)

என்று பாடுகிறார். இதுமட்டுமா? அணைகளை நிரப்புவதற்கும் மள்ளர்கள் முயல்வதை

"குரப்பு அணை நிரப்பும் மள்ளர் குவிப்புற"
(பாலகாண்டம், மிதிலைக்காட்சிப் படலம், பா. 10)

மள்ளர்குல உழத்தியர்களைக் கடைச்சியர் என்றும் பாடுகின்றார்

"பண்கள் வாய் மிழற்றும் இன்சொல்
கடைச்சியர் பரந்து நீண்ட"
(பாலகாண்டம், நாட்டுப்படலம், பா. 10)

இசையுடன் இனிய பாடல்களைப் பாடும் மருதநில உழத்தியர்கள் என்பது இப்பாடலின் பொருள். இவ்வகையில் மள்ளர்களை மருதநில உழவர்கள் என்றே அடையாளப்படுத்தும் கம்பர் மள்ளர் என்பதற்கு வீரர், உழவர் என்பதற்கும் மேலாக அவர்கள் ஒரு குலத்தினர் என்று வரையறை செய்து காட்டுவார். அவ்வரிகள் வருமாறு:

"குன்றுடைக் குல மள்ளர் குழுக்குரல்"
(பாலகாண்டம், நாட்டுப்படலம், பா. 32)

குன்றுகளுக்கு (சிறிய நாடுகளுக்கு) உரிமையுடைய மள்ளர்குல வீரர்கள் எழுப்பும் ஆரவார ஒலி என்பது இப்பாடலின் நேர்பொருள். இப்படியாக அமைந்த கம்பன் காவியம் சங்க கால இலக்கியத்தையும் பிற்கால இலக்கியத்தையும் (பள்ளு நூல்கள் வரை) மள்ளர் மரபாக இணைக்கும் ஒரு பெருங்கதையாடலை

(Meta Narrative) நமக்குக் கட்டித் தருகின்றது எனலாம். கம்பனின் காவியம் மள்ளர் மரபு பேசும் விதத்தை **"கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு"** எனும் நூலில் முனைவர் அ.அறிவுநம்பி மேலும் விரிவாக ஆராய்ந்துள்ளது இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது. இந்த மக்களின் வேளாண் தொழில் குறித்துப் பல புராணங்களும், பல சிற்றிலக்கியங்களும் சிறப்பித்துப் பேசியுள்ளன. தியாகராச லீலையில் திருநாட்டுப் படலம் "வயலில் உழும் மள்ளர்களின் உழும் தொழில் ஈடுபாடு காதலன் அவனது காதலியோடு வைத்துள்ள அன்பின் கூடலுக்கு ஈடானது" என்று போற்றும் அப்பாடல் வருமாறு:

**"பழுதறு மெழில் வாயன்பிற் பாவைய ருவளகத்திற்**
**பொழுதுற விடாரங் கேள்வர் புணர்தொழில்**
**விரைதல்போல**
**வெழுபெரும் பொன்னி நீர்செய் யிடைத்தகு பருவமேவ**
**வொழுகுவென் கருவி மள்ள ருழுதொழில் விரைவர்**
**மாதோ"[4]**

இவ்வாறு மள்ளர்களின் நிலத்தின் மீதான ஈடுபாட்டை விளக்கிய தியாகராசலீலை தொடர்ந்து பல சிறப்புக்களை அடுக்கிச் சொல்கின்றது. மள்ளர்கள் பாடும் பாடல்கள் எருதுகளை மகிழ்விக்கும் என்று விநாயகப் புராணம் எனும் நூல் குறிப்பிடுகின்றது.

**"இடக்கு மள்ளரெழுப்பிய பாட்டினால்**
**நடக்கும் பூணிகணன்று களிக்குமே"**
**(விநாயகப் புராணம், பாடல். 98)**

என்ற மள்ளர்களின் ஏர்மங்கலப் பாடலைக்கூறிய விநாயகப் புராணம் மள்ளர்களின் தலைவனான தேவேந்திரனுக்கு ஏன் ஆயிரம் கண்கள் படைக்கப்பட்டது என்று வருமாறு காரணம் கூறுகிறது.

**"கையினால் பிடித்தடித்தும் கடவடியில் பருத்திட்டும்**
**வையெல்லாம் தணப்பித்து மருவு பதர் நவை நீக்கிச்**
**செய்யெலா மிகக் குவிக்குஞ் செந்நெல் வளநோக்குதற்கே**
**மெய்யெலாம் விழி படைத்தான் விண்ணவனா மிந்திரனே"**
**(விநாயகப் புராணம், பாடல். 127)**

வயலில் மள்ளர்கள் அடித்துக் குவித்திருக்கும் செந்நெல்லின் வளத்தைப் பார்த்து மகிழ்வதற்காகவே இந்திரனுக்கு

உடலெல்லாம் கண்கள் படைக்கப்பட்டதாகக் கச்சியப்ப முனிவர் சொல்வது இங்கு நினைக்கத்தக்கது.

மருதநில மள்ளர்களின் குல முன்னோன் வேந்தன் அதாவது தேவேந்திரன் என்பதும் அவனின் வழிவந்தோரே மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர் என்பதும் பல நிலைகளில் தமிழ் இலக்கியங்கள் கூறியிருப்பது போன்று விநாயகப் புராணமும் இந்திரனை மள்ளர் குலத்தில் வந்து உதித்தவன் என்று வருமாறு கூறுவதைக் காணமுடிகின்றது.

"முந்துதங்குலத்திடை வந்த மொய்ம்புடை
இந்திரக் கடவுளுக்கினிய வைப்பிடைத்
தந்தொழில் புரிவதே தக்கதாமென
வெந்திறற் களமர்கள் வினைஞராயினர்"
(விநாயகப் புராணம், பாடல் : 13)

முன்னாளில் தமது குலத்தில் உதித்து வந்த, இந்திரக் கடவுளாகிய தேவேந்திரருக்கு இனியதான, வயலில் தம் தொழிலைச் செய்வதே விருப்பமானது என்று வலிமைமிக்க களமர்கள் இனிய வினையாகிய வேளாண் தொழில் செய்தனர் என்பது இப்பாடலின் பொருள். களமர் என்று குறிக்கப்படும் பெயரும் மள்ளரைக் குறிக்கும் பெயரே ஆகும். விநாயக புராணம் மருதநில உழவர்களாகிய தேவேந்திரர்களை மள்ளர், களமர் என்ற இரண்டு பெயர்களில் மாறிமாறி அழைக்கின்றது.

"தங்கவர்க்கே தக்கதெனவகத் தெண்ணிக் களைகளைய
தங்கும் வயற்தொழில் மள்ளர் தையலாரை
செலவிடுத்தார்"
(விநாயகப் புராணம், பாடல் : 112)

களை களைவது தங்களுக்கே சரியானது என எண்ணிய மள்ளர்கள் தம் மகளிரான மள்ளத்தியர்களை அனுப்பிவிட்டு வயலில் முளைத்த களைகளைக் களைந்தனர். இவ்வாறு களையெடுத்துப் பயிர்காக்கும் மள்ளர்கள் நீர் பாய்ச்சி நெற்பயிரைக் காக்கும் விதம் எப்படி இருந்தது என்றால் நல்ல தாய் பசியறிந்து தன் குழந்தைக்குப் பாலூட்டுவது போன்று இருந்ததாம் என்று கச்சியப்ப முனிவர் வருமாறான பாடலில் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது.

"முளைகள் சேற்றில் பதிந்து முதிர்ந்திடும்
தளைநெடும் பணைசார்ந்து நற்றாயென

*அளவினுக்கமை வுற்ற வளவையில்*
*களமர் மென்புனல் காறிறந்தூட்டுவார்"*
*(விநாயகப் புராணம், பாடல் : 105)*

1903இல் பதிக்கப்பட்ட திருத்தலையூர்த் தலபுராணத்தில் மருதநில நாட்டு வளங்கூறும் பகுதியில் மள்ளர்களின் நெல் வேளாண் சிறப்பு பேசப்படுகின்றது. இதில் மள்ளர், களமர் என்ற இரண்டு சொற்களுமே புலவரால் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. உரையாசிரியர் களமர் என்பதற்கு மள்ளர் என்றே உரை கண்டிருப்பதை இங்கே சொல்லியாக வேண்டும்.

"மங்கை வன்முலை தொட்டிட மள்ளர் களரியைச்
செங்கை யாற்கட்டிச் சேர்ப்பர் கட்டெடுப்பர் சார்களத்திற்
சங்கை நீத்தரி தட்டுவர் கூப்புவார் நெற்றாள்
யங்கை யாலிராக் கதரமரர் களமர் கடுப்ப"
(திருத்தலையூர்த் தலபுராணம், பாடல் : 37)

மள்ளர்கள் தங்களின் இனிய துணையான மள்ளத்தியர்கள் மார்பு தொட்டிட நெல்லரிகளை எடுத்துக் கட்டாகக் கட்டுவர். பின்னர் அக்கட்டுகளைக் களங்களில் போட்டு அடித்த நெல்லைப் பிரித்துக் குவிப்பார்கள். இக்காட்சி தேவர், அசுரர் செய்கின்ற போர் போல இருக்கும் என்பது இப்பாடலின் பொருள். இப்பாடலில் மருதநில உழவர் எனும் பொருள்படும்படி மள்ளர் என்று சொன்ன புலவர் அதே மள்ளர் நெற்களத்தில் நெல்லை அடித்துப் பிரிக்கும் போது "களமர்" என்று பெயர் பெறுவதாகக் காட்டியிருப்பது நினைக்கத்தக்கது. இத்திருத்தலையூர்த் தலபுராணத்தில் மள்ளர், களமர் என்ற இரண்டு பெயர்களிலேயே தேவேந்திர குல வேளாளர்கள் நாட்டுப்படலம் முழுமையும் பேசப்பட்டுள்ளனர்.

இந்தத் திருத்தலையூர்த் தலபுராணத்திலும் மருதநிலக் காவுக்கு இறைவனாம் தேவேந்திரனே மள்ளர்களின் முன்னோன் என்று சொல்லப்பட்டுள்ளது. இவன் மள்ளர்கள் பாடுகின்ற ஏர்மங்கலப் பாடல்களைக் கேட்டு உளம் மகிழ்ந்து வயலுள் வந்து தங்குவான் என்று சொல்லப்படுகின்றது.

"திண்பகட்டினை சுவலிணைத் தோட்டுவார் செய்ய
பண்புவச்சிர பாணியோன் கேட்டுளம் பரியும்"
(திருத்தலையூர் தலபுராணம், பாடல் 22)

இவ்வாறாக மள்ளர் என்போர் களமர் என்றும் அறியப்படுவதைப் பிங்கல நிகண்டும் திவாகர நிகண்டும் வருமாறு குறிப்பிடுவதைக் காணலாம்.

பள்ளு நூலில் இந்திரன் மரபினர் என்று மள்ளர்கள் குறிக்கப்படுவதை,

**"இந்திரன் குலத்தோன்றிய நாள் முதலாக"**
**(கட்டிமகிபன் பள்ளு, பா. 14)**

**"தேவேந்திரப் பள்ளனும் நான்"**
**(வையாபுரிப்பள்ளு, பா.8)**

ஆகிய பிரதிகள் உறுதி செய்யும்.

**திவாகர நிகண்டு**

**மருதநில மக்கள் பெயர் (8)**

**"களமர், தொழுவர், மள்ளர், கம்பளர், வினைஞர், உழவர், கடைஞர், கிளைஞர் என்று அவையவை கழனிக்கு அடைந்தவர் பெயரே"** (நூற்பா எண். 305)

**பிங்கல நிகண்டு**

**மருதநில மக்கள் (576 – 580)**

**"களம ருழவர் கடைஞர் சிதலர்**
**மள்ளர் மேழியர் மருத மாக்கள்**
**உழத்தியர், கடைசிய ரந்நிலப் பெண்டிர்"**

இந்த இரு சான்றுகளிலிருந்தும் மருதநில மக்கள் மள்ளர் என்பதோடு களமர் என்றும் அழைக்கப்பட்டிருக்கின்றனர் என்பதை உணர முடியும்.

மேற்கண்டவாறு சங்க இலக்கியம் முதல் புராண இலக்கியம் வரை மருத நில வேளாண் மக்களாகக் குறிக்கப்படும் மள்ளர்களின் பெருமைமிகு வேளாண் வாழ்வு நாயக்கர் ஆட்சிக் காலத்தில் தோன்றிய பள்ளு நூல்களிலும் பேசப்படுகின்றது. இதில் முன்னைய பெருமைமிகு வாழ்வு பள்ளராய்த் தாழ்த்திச் சொல்லப்படுகின்றது. காரணம் நாயக்கர் ஆட்சியில் மள்ளர் மரபு வீழ்த்தப்பட்டு உழைக்கும் வேளாண் மக்களாக இவர்கள் தள்ளப்பட்டதே ஆகும். பள்ளு நூல்களில் இடம்பெறும்

வேளாண் வாழ்வு தவிர பள்ளியர்களின் வருணனையில் கொச்சைச் சொற்கள் புகுத்தப்பட்டு, சிருங்காரச் சுவை கூட்டப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இந்தச் சிருங்காரச் சுவை பிற்காலத்தில் தோன்றிய எல்லாப் பிரபந்த இலக்கியங்களுக்குமே பொருந்தும். தெய்வம் தொடர்பான பிரபந்தமாயினும் சரி, மன்னன் தொடர்பான பிரபந்தமாயினும் சரி, மக்கள் தொடர்பான இலக்கியமாயினும் சரி சிருங்காரச் சுவை இருந்தே தீர வேண்டியது என்பதான காலமாக இது இருந்திருக்கின்றது. காட்டாக. . . கூளப்ப நாயக்கன் காதல் (மன்னர் தொடர்பானது) குற்றாலக் குறவஞ்சி (இறைவன் மற்றும் குறவர் தொடர்பானது) ஆகியவற்றைச் சொல்லலாம். இந்தவகை இலக்கியங்கள் அன்று தமிழகத்தை ஆண்ட மன்னர்களையும், ஜமீன்களையும் (பாளையப்பட்டுக்கள்) மகிழ்ச்சியூட்ட எழுதப்பட்டதாகத் தெரிகின்றது. இந்த வகையான சிருங்காரச் சுவை நிறைந்த இலக்கிய வகைகளின் போக்கு இந்தியா முழுமைக்கும் 17, 18ஆம் நூற்றாண்டு வாக்கில் இருந்தது என்று இந்திய இலக்கியம் குறித்து ஆய்வு செய்துள்ள ரொமிலா தாப்பர் (Romila Thaper) குறிப்பிடுவது இங்கு மனங்கொள்ளத் தக்கது. "பாலுணர்வு விருப்ப நடத்தை இந்திய நிலவுடைமைச் சமூக அமைப்பின் வீழ்ச்சிக்கால ஆரோக்கியமற்ற பண்பாட்டு வெளிப்பாடாக அமைந்திருந்தது"[5] என்பதற்கேற்ப நாயக்கர் ஆட்சியில் தோன்றிய எல்லா இலக்கியங்களிலுமே (தமிழ்ப் பிரபந்தங்கள்) சிற்றின்ப நாட்டத்துடன் எழுதப்படுதல் தமிழ்ப் புலவர்களின் கடமையாக அமைந்துவிட்டன. இதுகுறித்து 18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தெலுங்குக் கவிஞர் சௌடப்பா தமது சதகத்தில் "ஒரு கொச்சையான சொல்லைக் கேட்காவிட்டால் இராஜாவுக்குச் சிரிப்புவராது" (ஓகிந்த பூதாடக தொறகு நவ்வு புட்டது) என்று பாடியுள்ளதைப் பா. ஆனந்தகுமார் தமது இந்திய ஒப்பிலக்கியம் எனும் நூலில் குறிப்பிடுவது கருதத்தக்கது.

பள்ளு நூல்களில் இடம்பெறும் பள்ளியர் வருணனைகள் அக்கால நாயக்க ஜமீன்களை மகிழ்ச்சிப்படுத்த புலவர்களால் எழுதப்பட்டன. அங்குச் சொல்லப்படும் பல செய்திகள் அன்றைய காலத்தில் நிலவிய சமூக அரசியலைச் சார்ந்தவை. காரணம் உழைக்கும் மக்களின் அகவாழ்வு உன்னதமானது, போற்றுதற்குரியது.

## அடிக்குறிப்புகள்

1. சசிவல்லி, வி.சி., பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.96.
2. மணிவேல், எம்., சங்க இலக்கியத்தில் மள்ளர் மரபுகள் (அறக்கட்டளைச் சொற்பொழிவு உரை), மள்ளர் மலர், ஜூன், 2000, ப. 19 - 23.
3. சுப்பிரமணியன், கா. சங்ககாலச் சமுதாயம், ப. 56.
4. தியாகரராசர் லீலை, நாட்டுப்படலம், பாடல் 96.
5. ஆனந்தகுமார். பா., இந்திய ஒப்பிலக்கியம், ப.33.

# 4. பள்ளு இலக்கியங்களில் மள்ளர் குலப்பெயர்கள்

மருதநில நெல் வேளாண்மையைச் சிறப்பிக்க எழுந்த பள்ளுப் பாடல்களில் அதன் பொருண்மைக்கு அப்பால் ஏசல்களும் ஆதிக்க வரலாறு சொல்வதும் மிகையாகக் காணப்பட்டாலும் அதனுள் நெல்லின் மக்களான மள்ளர்களின் வேளாண் பண்பாட்டிற்கான அடையாளங்கள் இல்லாமலில்லை. நெல்வகை அறிந்தவர், மாட்டுவகை தெரிந்தவர், ஏறுவகை அறிந்து கட்டுபவர், மழையை வருவிக்கும் மழையின் மக்கள் என்பதெல்லாவற்றையும் விட இவர்கள் யார்? இவர்கள் மள்ளர், தேவேந்திரர், குடும்பன், பண்ணாடி, காலாடி என்றெல்லாம் பெயர் பெறக் காரணமென்ன என்பதற்கான தடயங்களை யெல்லாம் பள்ளு நூலாசிரியர்கள் ஆங்காங்கே ஓர் உட்பிரதியாக (Inner Text)ச் செய்தே இருக்கின்றார்கள். இதனை அறிவதன் மூலமும் இதனைப் பள்ளுப் பிரதிக்கு மேலான பிரதியாக நாம் உரையாடல் நிகழ்த்தி (Discourse) வெளிக்கொணர்கையில் இம்மக்கள் தொடர்பாகச் சமூகத்தளத்தில் இருக்கும் பெருங்கதையாடல் (Meta Narrative) மறைந்து இம்மக்களின் குறுங்கதையாடல் (Micro Narrative) பெருங்கதையாடல் தளத்திற்கு வர ஏதுவாகும்.

### மள்ளர்களின் பல்வேறு குலப்பிரிவுகள்

தமிழக அரசு வெளியிட்டுள்ள அட்டவணைச் சாதியினர் (Scheduled Caste) பட்டியலில் தமிழகம் தழுவிய அளவில் தேவேந்திரகுல வேளாளர்கள் ஆறு இனப்பிரிவாக அறியப்பட்டுள்ளனர். அவை 1. பள்ளன் 2. தேவேந்திர குலத்தான் 3. கடைஞன் 4. காலாடி 5. குடும்பன் 6. பண்ணாடி என்பதாகும். இங்குக் குறிக்கப்பட்ட ஆறு பிரிவுகள் தமிழகம் முழுவதும் காணப்படுவதாகும். இவையல்லாது நாடு அடிப்படையிலும் குல அடிப்படையிலும் 300க்கும் மேற்பட்ட உட்பிரிவுகள் அதாவது குலப்பிரிவுகள் இருப்பதை அண்மைக்கால ஆய்வுகள் கண்டு சொல்லியுள்ளன. இத்தகைய குல எண்ணிக்கைகள் இம்மக்களை ஒரு தொன்மையான குடி என்பதைக் காட்டுவதாகும். இங்கே

பள்ளு இலக்கியங்களில் இடம்பெறுகின்ற மள்ளர் குலப் பிரிவுகளை வருமாறு காணலாம்.

குடும்பன்

*"மைக்கடல் முத்துக்கீடாய்*
*மிக்க நெல் முத்துண்டாக்கும்*
*வடிவழகக் குடும்பன்*
*நானே யாண்டே" (முக்கூடற்பள்ளு, பா. 16)*

என்றும்

*"குமார யெட்டேந்திரன்*
*பண்ணைச் செழிக்குமெட்டக்*
*குடும்பன் தோன்றினானே"*
*(எட்டையபுரப் பள்ளு, பா.10)*

*"வள்ளல் பழனியப் பேந்திரன் பண்ணைவளம்*
*பார்க்கிறராமன்*
*மைந்தன் உடையக் குடும்பன் வந்து தோன்றினானே"*
*(தென்புதுவைப்பதி தேவாங்கப்பள்ளு, பா.14)*

என்ற பள்ளுப் பாடல்களில் இடம்பெறும் "குடும்பன்" எனும் பெயர் தேவேந்திரர்களுக்குரிய குலப்பெயர்களில் ஒன்றாகும். பெரும்பாலான பள்ளு நூல்கள் பள்ளனின் இயற்பெயரோடு அவனது குலப்பெயரான குடும்பன் எனும் குலப்பெயரையும் இணைத்தே "வடிவழகக் குடும்பன்", "உடையக் குடும்பன்" என்றவாறு அறிமுகம் செய்வதைப் பார்க்கின்றோம். திருநெல்வேலி, மதுரை, திண்டுக்கல் மாவட்டங்களில் தேவேந்திரர்களுக்கான குலப்பட்டமாக இது வழங்கிவருகின்றது. "குடும்பன்" என்பதற்குப் பள்ளர்களின் தலைவன், உழவர்களின் தலைவன் என்று அகராதிகளில் பொருள் சொல்லப்படுகின்றது. முக்கூடற்பள்ளுவில்

*"ஆருக்கும் பணியான்*
*குடும்பு செய்து ஊராருக்கு உழைப்பான்" (பா.88)*

என்று வருவதை நோக்கக் குடும்பு என்பது ஒருவகையான சமூக நிறுவனம் என்று அறிகிறோம். இதனையொட்டிக் குடும்பு என்பதற்கு என்ன பொருள் என்று தமிழக வரலாற்றில் தேடினால் சோழர் ஆட்சிக் காலத்தில் வேளாண்மை நிலங்கள் பல குடும்புகளாக (பிரிவுகள்)ப் பிரிக்கப்பட்டு அதனைக் குறிப்பிட்ட

வர்களின் மேற்பார்வையில் பராமரிக்கும் முறை இருந்தது அறியக்கிடக்கிறது. "பள்ளு இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்பே பிற்காலச் சோழராட்சியில் குடும்பு என்ற சொல் வழக்கிலிருந்ததாகத் தெரிகிறது. சோழர் ஆட்சிக் காலத்தில் மிகவும் சிறப்புப்பெற்று விளங்கிய கிராம ஆட்சி முறை கிராம மக்களுக்கு முழுச் சுதந்திரம் அளிக்கும் வகையில் அமைந்திருந்தது. கிராம ஆட்சியின் முக்கிய அமைப்புக்களாக விளங்கியவை ஊர், சபை எனும் அமைப்புக்களாகும். இச்சபை அமைப்பில் பல வாரியங்கள் இருந்தன. இதில் ஏரிவாரியம், ஏரி, குளம், ஊருணி போன்ற நீர் நிலைகளைப் பாதுகாத்தது. இது போன்றே கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், குடும்பு வாரியம் போன்றனவும் செயல்பட்டன. ஒவ்வொரு கிராமமும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு பகுதியும் பல குடும்புகளாகப் (Wards) பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு குடும்பிற்கும் ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்பட்டார்".[1] இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் "குடும்பன்" பட்டம் பெற்றவராக அறியப்பட்டு, அதுவே பின்பு அவர்களுக்குரிய குலப்பெயராக அடையாளம் பெற்றிருக்கலாம். இத்தகைய வேளாண் பண்பாட்டு அடையாளமுடைய பட்டமே பள்ளு நூல்களில் குறிக்கப்படும் "குடும்பன்" எனும் பட்டம் ஆகும். பழனிச் செப்பேடும் பல குடும்பனார்களின் பெயர்களைக் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.[2] இதே போன்று தேவேந்திர குல வேளாளர்கள் "குடும்பர்" பட்டங்களைத் தொன்மைக் காலத்திலிருந்தே தமக்குரிய குல அடையாளங்களில் ஒன்றாகக் கருதிப் பயன்படுத்தி வந்ததை அறிஞர் குருசாமிசித்தர் 50க்கு மேலான கல்வெட்டு மற்றும் செப்புப்பட்டயங்களிலிருந்து சான்றுகளைக் காட்டுவது இங்குக் கவனிக்கத்தக்கது. இதில் இவரே கண்டுபிடித்து வெளியிட்ட "குடுமிச்சிகள்" குறித்த கல்வெட்டுச் செய்தி குறிப்பிடத்தக்கது.[3] இக்கல்வெட்டு கோயமுத்தூர் மாவட்டம், கோயமுத்தூர் வட்டம், சூலூர் செலகிரிச்சல் கல்வெட்டு என்று அறியப்படுகிறது. இதில் கீரனூரில் இருக்கும் ஐங்கைக் குடுமிச்சிகளில் சோழன் உமையான அணுத்திரப் பல்லவரைசி என்று கண்டிருக்கிறது. இதேபோன்று கண்ணாடி புத்தூர் கல்வெட்டு (உடுமலைப்பேட்டை வட்டம்) ஒன்று நிலக்கொடை அளித்த குடும்பர் குறித்தசெய்தியைத் தருகிறது. அதாவது "குடும்பரில் சிங்கன் சோழனான அணுத்திரப் பல்லவரையன்" என்பது இக்கல்வெட்டில் இடம்பெறும் செய்தி.[4]

இத்தகைய சான்றுகள் குடும்பன் எனும் சொல் எத்தகைய தொன்மை வாய்ந்தது என்பதை நமக்கு அறியத் தருகின்றன.

**கடையர் – கடைசியர்**

மருத நிலத்தில் வாழ்கின்ற மக்கள் உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என்ற பெயர்களில் சிறப்பாகத் தமிழிலக்கியங்களில் அறியக் கிடக்கின்றனர். நிகண்டுகள் மருத நில மக்களை வருமாறு வகைப்படுத்தும். அவை வருமாறு.

**ஆண்பாற் பெயர்**

> **"களமர் தொழுவர் மள்ளர் கம்பளர்**
> **உழவர் வினைஞர் கடைஞர்"**
> **(சூடாமணி நிகண்டு – விருத்தம் : 275)**

**பெண்பாற் பெயர்**

> **"கடைச்சி, ஆற்றுக் காலாட்டி"**
> **(சூடாமணி நிகண்டு – விருத்தம் : 275)**

**இதேபோன்று திவாகர நிகண்டு**

> **"களமர், தொழுவர், மள்ளர், கம்பளர், வினைஞர்**
> **உழவர், கடைஞர், கிளைஞர் என்று அவையவை**
> **கழனிக்கு அடைந்தவர் பெயரே" (நூற்பா எண். 304)**

ஆண் மக்கட்பெயரை வகைப்படுத்துவது போலப் பெண் மக்களின் பெயர்களை

> **"உழத்தியர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர்**
> **அடுத்த கழனிக்கு அடைத்த மகளிர்"**
> **(நூற்பா எண்.305)**

இந்த வரையறை சங்க இலக்கியச் சான்றுகளில் தேடினால் வினைஞர், களைஞர், கருங்கை வினைஞர் என்று மருதநில உழவர்களாகப் பெரும்பாணாற்றுப்படையில் காணமுடிகிறது. (பா.வரி-143 முதல் 223 வரை) இளங்களமர் (பொருநராற்றுப்படை, பா.வரி - 194), களமர் (மலைபடுகடாம், பா. வரி. 469), கடைசியர் (புறநானூறு, பா.61) என்று மருதநில உழவர்களுக்கான அடையாளங்கள் விரிந்து காப்பிய இலக்கியம் பள்ளு இலக்கியம் வரை தொடர்ந்து பயின்று வருவதைப் பார்க்கலாம். கம்பராமாயணத்தில்

"பண்கள் வாய்மிழற்றும் இன்சொல் கடைச்சியர்"
(நாட்டுப்படலம், பா.10)

என்று இடம்பெறும் கடைச்சியர் என்பது மருதநில உழத்திப் பெண்ணையே குறிக்கின்றது. மள்ளர்களைக் கம்பர் ஓரிடத்தில் "கடைவாய் மள்ளர்" என்று அழைப்பதாக அ. அறிவுநம்பி சான்று காட்டுவது[5] இங்கே கருதத்தக்கது. இப்படியாக நாம் புராண இலக்கியம்; பக்தி இலக்கியம்வழிப் பள்ளு இலக்கியம் வரை மருத நில உழவரைத்தேடினால் அவர்கள் கடையர் - கடைசியர் என்ற ஒரு அடையாளமும் பெறுவதைப் பார்க்க முடியும். கடைசியர் பெண்பாற் பெயர், கடையர் ஆண்பாற் பெயர் ஆகும். 17ஆம் நூற்றாண்டில் தோன்றிய வீரமாமுனிவரின் தொன்னூல் விளக்கம் மருதத் திணையின் கருப்பொருளை விளக்குகையில், அதாவது மக்கள் குறித்துச் சொல்லுகையில்[6]

உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர்

என்று வரையறை செய்யும். இவ்வரையறையிலிருந்தும் இதற்கு முன்னர்த் தோன்றிய நிகண்டுகள், இலக்கண நூல்கள் தருகின்ற வரையறையிலிருந்தும் நாம் ஒன்றை மிகத் தெளிவாகப் பெறமுடியும். அவை உழவர், உழத்தியர் எனும் மக்கட்பெயர்கள் மருதநில மக்களை மட்டுமே குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றன என்பதே ஆகும். ஏன் மருதநிலத்தில் மட்டும்தான் உழவு வேலை நடந்ததா? பிற நிலங்களில் இல்லையா? என்ற கேள்வி எழும். மிகச் சிறப்பாக உழவுத்தொழில் நடந்தது, இன்னும் நடப்பது ஆறும் ஆறு சார்ந்த வயல் நிலங்களில் தான் என்பது வெளிப்படை. பிற நிலங்களிலும் உழவு நடந்தது? இன்னும் நடக்கிறது? அது செந்நெல்லையும், வெண்ணெல்லையும் உருவாக்கும் உழுகளமல்ல. அந்தந்த நிலம் சார்ந்த புன்செய்ப் பயிர்களை விளைவிக்கும் உழுகளமாகவே அவை அமைந்தன. வெகு அண்மைக் காலத்தில்தான் உழுதல் எல்லோருக்குமான தொழிலாக மாறியிருக்கின்றது. இருப்பினும்மருத நிலத்தின் பிரத்யேகமான பயிராகிய நெல்லை விளைவிப்பதில் கைதேர்ந்தவர்கள் மள்ளர்கள் தான் என்பதை இங்கே ஏற்றாக வேண்டும். காரணம் நெல் வேளாண்மைக்கெனத் தோன்றிய ஒரு இலக்கிய வகைமை இவர்களைத் தானே பாடுபொருளாக்கி யுள்ளது. கடவுள்கூட (அதாவது சிவன்) பள்ளனாக நெல் வேளாண்மை செய்ய ஆசைப்பட்டதும் இம்மக்களாக வடிவெடுத்துத்தானே. இதனால்தான் பள்ளு நூல்களில்

மள்ளர்குல உழத்திப் பெண்கள் சங்ககால மரபுப்படி கடைசியர் என்றும் உழவர்கள் கடையர் என்றும் அறியப்படுகின்றனர்.

"விடும்பு மழவர் நுளையர் கடையர்"
(எட்டையபுரப்பள்ளு, பா. 57)

"குடிதழைத்திடு குரவை இட்டு ஏழுகடல்
முழக்கிடுகடைசியர்
குழைவு நாற்றைப் பழைய சேற்றில் அளவில்லாமல்
நடச் செய்தே. . . . . . . . . . . . . . . . . . . . . . . ."
(வடகரைப் பட்பிரபந்தம், பா. 131)

இப்படியாக அடையாளம் பெறும் கடையர், கடைசியர் எனும் பெயர்கள் மருதநில உழவர் உழத்தியர்களின் பெயர்கள் என்பதை அறிதல் பள்ளுப் பாடல்களை வாசிப்பதற்குப் பெரிதும் உதவும். ஏனென்றால் மள்ளர்களின் சாதிப்பெயர்களில் ஒன்று "கடையர்" என்பதாகும். இதன்வழி இவர்கள் "கடையப்பள்ளர்" என்று இன்றைய சமூக வழக்கில் அழைக்கப்படுகின்றனர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. "கடையர்" என்பது பழனிச் செப்பேட்டில் குறிக்கப்படுவதைக் காண்க.

**பண்ணாடி**

"செந்நெல் சூழ் மோரூரின் நல்லபுள்ளி – பண்ணைத்
திறமுடைய பண்ணாடி தோன்றினான் ஆண்டே"
(மோரூர் நல்ல புள்ளியம்மன் பள்ளு, பா. 76)

"பாண்டினாட்டில் கூண்ட வீரப்
பண்ணாடி மகன் கண்ணனும்"
(சாமிநாதப்பள்ளு, பா. 32)

என்று பள்ளு நூல்களில் குறிக்கப்படும் பண்ணாடி எனும் பெயர் கொங்கு நாட்டுத் தேவேந்திரர்களுக்குரிய சாதிப் பெயர்களில் ஒன்று. அரசு ஆணையும் "பண்ணாடி" என்பதற்குத் தேவேந்திர சாதியாரில் ஒரு பிரிவினர் என்றே குறிக்கின்றது. பண்ணை என்றால் மருதநிலம் என்பதே நேர்பொருள் ஆகும். மருத நிலத்தை ஆள்பவன் தென்தமிழகத்தில் குடும்பன் என்று அறியப்படுவது போன்று இப்பகுதியில் பண்ணாடி என்று அறியப்படுகின்றான் அவ்வளவே. இப்பகுதியில் வழங்கும் ஓர் உழத்திப்பாட்டு

"வாராங்கோ வாராங்கோ
பண்ணாடி வாராங்கோ

நீலக் கொடை பிடிச்சு
நிலம் பார்க்க வாராங்கோ
பச்சைக் கொடை பிடிச்சு
பயிர் பார்க்க வாராங்கோ"

என்று பண்ணாடியை மருத நிலத்தின் தலைவன் வருவதாகப் பாடத் தொடங்கி, இறுதியில் இந்திரன் வருகின்றான் குலவையிடுங்கள் பெண்களே என்று பாடல் முடியும். இப்பகுதியில் வழங்கும் உழத்திப் பாடல்களில் இப்பாடல் மிகச் சிறப்புப்பெற்றது. இப்பகுதியில் வழங்கும் **"மலைக்கு மண்ணாடி தரைக்குப் பண்ணாடி"** என்று ஒரு பழமொழி பிரசித்தி பெற்றது ஆகும். பழனிச் செப்பேடும் பல பண்ணாடிகளின் பெயர்களைக் குறிப்பிடுவதைக் காண்கிறோம். இந்தப் பெயரும் இவர்களின் நெல் வேளாண்மையுடன் தொடர்புடையதே ஆகும்.

**காலாடி - ஆற்றுக் காலாடியர்**

**"நாற்றுக்கால் பூந்துளவத் தாரழகர் முக்கூடல்
சேற்றுக்கால் மள்ளருக்குத் தென்றற்கா லென்னாமோ
ஆற்றுக்கால் ஆட்டியருள் ஆட்டெழுங்கால் பண்ணைநடும்
நாற்றுக்கால் விட்டு நடுகைக்கால் ஏறாதே"**
**(முக்கூடற்பள்ளு, பா. 127)**

இந்தப் பாடலில் 'ஆற்றுக்காலடியர்' என்ற ஒரு சொல் இடம் பெறுகின்றது. இப்பிரதி தரும் நேர்பொருள் நீரில் காலை மட்டும் வைத்து ஆட்டிவிளையாடும் மருதநிலப்பெண் என்பதே பொருள். மள்ளர்களுள் ஒரு பிரிவினர் "காலாடி" என்ற குலப்பெயரில் அழைக்கப்படுகின்றனர். இதற்கு விளக்கம் தரும் அறிஞர் புலவர் ஆ. குப்புராசு 'காலாடி' என்றால் நடமாடல் - சுற்றித்திரிதல் - வாழ்ந்து வருபவர் என்று பொருள் கொண்டு ஆற்றோரங்களில் குளித்தல்-மீன்பிடித்தல் ஓடி ஆடி விளையாடுதல், வயலில் வெள்ளாமை செய்ய ஆற்றின்வழிக் காலாட்டுதல்-போய் வந்து கொண்டு இருத்தல் - மேடை பார்த்தல், ஆற்று நீரைப் பயன்படுத்துபவர் என்று பொருள் கொள்ளலாம். நீர்கட்டி, வாய்க்காரர், தண்ணீர் பார்ப்பவர், பருவகாரர் என வயலில் பணியாற்றும் உழவர்க்கு, களமர்கட்கு அவரவர் செய்யும் தொழிலுக்குச் சில பெயரிட்டு அழைக்கப் பெறும் பழக்கம் இன்றும் உண்டு. அந்த வகையில் ஆற்றுக்காலாட்டியர் என்ற சொல் பயன்பட்டிருக்கலாம்[7] என்று கூறுவது இங்குக் கருதத்தக்கது. வையாபுரிப் பள்ளில்

நீராணிக்குடும்பன், நீர்க்குடும்பன் என்ற பெயர்கள் காணப்படு கின்றன. இதல்லாமல் இம்மக்களின் தொழிலோடு தொடர்புப் படுத்தி, சேற்றுக்கால் செல்வர்கள்,சேற்றுக்கால் மள்ளர்கள், சேற்றுக்கால் செவ்வியர்கள் என்றெல்லாம் பள்ளு நூல்கள் அடையாளப்படுத்துகின்றன.

*மள்ளர் – பள்ளர் – பெயர்க்காரணம்*

*மள்ளர்கள் எல்லோரும் ஏர்பூட்டி*
*(வையாபுரிப்பள்ளு, பா.172)*

*மள்ளர்கள் பள்ளியருடனே கூடி வந்து*
*(செங்கோட்டுப் பள்ளு, பா. 197)*

*பண்ணை மள்ளச் சாதிக் குடும்பன்*
*(பொய்கைப் பள்ளு, பா.25)*

*மள்ளர்குலத்துக்குப் புத்திகள் வந்தது ஆண்டே–*
*உங்கள்*
*மனதறிந்து நாங்கள் நடக்கமுடியுமோ ஆண்டே*
*(செங்கோட்டுப் பள்ளு, பா. 693)*

*பண்ணைக்குள்ள மாடும் விரையும் உள்ளதெல்லாம்*
*படிப்படியே சொல்லு மள்ளா பள்ளா வென்றான்*
*(வடகரைப் பிரபந்தம், பா. 106)*

*மள்ளர் குலத்தில் வரினுமிரு பள்ளியர்க்கோர்*
*(முக்கூடற்பள்ளு, குடிப்பெருமை, பா.5)*

இக்காட்டுகளிலிருந்து மள்ளர்தான் பள்ளர் என்று குறிப்பிடுகின்றனர் என்று அறியலாம். இதனை உள்வாங்கிக் கொண்டு தமிழிலக்கியங்களில் காலவரிசைப்படிப் பின்னோக்கிச் சென்றால் அங்கு மள்ளர் என்று குறிக்கப்படும் மக்களை மருதநில உழவர்களாகக் காணமுடியும்.

*"குன்றுடைக் குலமள்ளர் குழுஉக்குரல்"*
*(கம்பராமாயணம், பாலகாண்டம்,*
*நாட்டுப்படலம், பா. 32)*

இப்பாடலில் மள்ளர் என்போர் ஓர் இனம் என்றே கம்பர் குறிப்பிடுவதைக் காண்கின்றோம்.

**தேம்பாவணி**

**களித்த மள்ளர்கள் தூண்டும் ஏற்று இனம்**
**(தேம்பாவணி நாட்டுப்படலம், பா.32)**

இங்கே மருதநில உழவர்கள் மள்ளர் என்று குறிக்கப்படுவதைக் காண்கின்றோம்.

**பேரூர்ப்புராணம்**

**வருத்திய வேனில் வருபுனற்கெதிரு மள்ளரின்**
**மனமகிழ்ந்தருத்த (திருநகரப் படலம், பா. 68)**

இங்குச் மள்ளர் உழவர் என்று குறிக்கப்படுவதைக் காண்கின்றோம்.

**புறநானூறு**

**. . . . . . . . . . . . . ஆர்நார்ச்**
**செறியத் தொடுத்த கண்ணிக்**
**கவிதை மள்ளன் கைப்பட்டோரே (புறநானூறு, 81)**

இங்குச் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியின் வீரம் குறித்து வரும்போது மள்ளர் என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காண்கின்றோம். இவ்வாறே தமிழ் இலக்கியங்களில் 120 நூல்களுக்குமேல் ஆதாரங்காட்டி மள்ளர் தான் இன்றைய பள்ளர், இவரே மூவேந்தர் மரபினர், என்றவாறு முனைவர் குருசாமிசித்தர் நிறுவுவார்.[8] இக்கருத்து ஏற்புடையதே ஆகும். மள்ளர் என்பது ஒரு குடி, ஓர் இனம், ஒரு குலம் என்ற கருத்து உறுதிப்படும் நிலையில் இன்றைய பள்ளர் இனத்தின் பண்பாட்டு வேர் (Cultural Root) மூவேந்தர் வரலாற்றோடு தொடர்புடையதாகவே விளங்குகின்றது.

**மள்ளர் – பள்ளர்**

மள்ளர்தான் இன்றைய பள்ளர் ஆவர் என்று குறிப்பிடும் அறிஞர்கள் கருத்துக்கள்:

**வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன்**

"சங்க இலக்கியத்தில் வரும் வீர இனத்திற்குப் பேர்போன மள்ளர் பள்ளரின் மூதாதையர் ஆவர்[9] (The ancient heroic tribe called Mallar described in the Sangam classic were probably the ancestors Pallars).

**டாக்டர் ஜி. ஒப்பர்ட்**

மள்ளர் பள்ளர் ஆனது உச்சரிப்பு வேறுபாடே ஆகும் என்பார்.[10]

**கே. வேலுப்பிள்ளை**

பழந்தமிழ் இலக்கியத்தில் வரும் மள்ளர் பிற்காலத்தில் பள்ளர் என வழங்கலாயினர்.[11]

**எம். சீனிவாச அய்யங்கார்**

பள்ளர் அல்லது மள்ளர் பாண்டிய படை மறவர் ஆவர் என்று குறிப்பிடும் இவர் மேலும் பண்டைத் தமிழகத்தில் பள்ளர் என்ற வகுப்பு இல்லை. அவருக்குப் பதில் மள்ளர் என்ற வகுப்பு இருந்தது. இவர் விவசாயத் தொழிலாளராகவும் படை மறவராகவும் இருந்தனர் என்பார்.[12]

**மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர்**

பள்ளர் என்பது மள்ளர். மருதநிலத்தில் வாழும் உழவர். பாலைநிலத்து மறவர் படைஞராகுமுன் மருத நிலத்து உழவரே போர்த் தொழில் செய்து வந்தனர். அதன் பின்பும் உழவர் போர்த் தொழிலை விட்டு விடவில்லை என்பார்.[13]

**ஒப்பியல் அறிஞர் மேஜர் முனைவர் கதிர்மகாதேவன்**

சங்க இலக்கியத்தில் வீரம் என்ற சொல் இல்லை. இது சமஸ்கிருதச் சொல். ஆனால் மள்ளர் எனும் சொல் இருக்கின்றது. புறநானூற்றில் மன்னர்க்கும் மள்ளர் என்று பெயர். மக்களுக்கும் மள்ளர் என்று பெயர். அந்த மள்ளர்கள் ஏர்க்களத்தில் உழவராகவும் போர்க்களத்தில் வீரராகவும் வாழ்ந்தனர் என்பார்.[14]

**மொழியியல் அறிஞர் முனைவர் சி. சிவசண்முகம்**

தமிழ் மொழியில் ஒலியியல் அடிப்படையில் மகரம் பகரமாகும் என்பதற்கேற்ப மள்ளர் எனும் சொல் பள்ளர் என்றும் மாறியிருக்கலாம் என்பார்.[15]

**தமிழறிஞர் முனைவர் குருசாமிசித்தர்**

தமிழ் இலக்கியங்களில் மள்ளர் என்று குறிக்கப்படுபவர்களே இன்று பள்ளர் என்றும் தேவேந்திர குல

வேளாளர் என்றும் குறிக்கப்படுபவர்கள் ஆவர் என்று தனது தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) எனும் நூலில் நிறுவியுள்ளார்[16].

## வரலாற்று அறிஞர் தேவ ஆசீர்வாதம்

மூவேந்தர் யார்? வேளாளர் யார்? பள்ளர் அல்ல மல்லர் ஆம் மன்னர் என்றவாறு இவர் எழுதியுள்ள மூன்று நூல்களில் இலக்கியம், வரலாறு, கல்வெட்டு, குடிக்கணக்கெடுப்பு, இன்றைய மள்ளரின மக்களின் பண்பாடுகளை ஆதாரமாக்கி மள்ளர்தான் பள்ளர் என்று முடிவு செய்கின்றார்[17].

மேற்கண்ட அறிஞர்களின் கருத்துக்களிலிருந்து சங்க இலக்கியங்களில் குறிக்கப்படும் மள்ளர் இனமே இன்று பள்ளர் என்று குறிக்கப்படுவதாக முடிவுக்கு வரலாம். இக்கருத்தை வலியுறுத்துவதாகவே நிகண்டுகளின் கருத்துக்களும் அமைகின்றன.

## திவாகர நிகண்டு

**அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்**
**வருந் தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்**

## பிங்கல நிகண்டு

**செருமலை வீரரும் திண்ணியோரும்**
**மருதநில மாக்களும் மள்ளர் என்ப**

என்றவாறு நிகண்டுகள் மள்ளரைப் போர் வீரராகவும் மருதநில மக்களாகவும் உழவராகவும் குறிப்பிடும்.

மள்ளர் என்போரை வீரராக, உழவராகக் காட்டும் சங்க இலக்கியம் மருத நில வாழ்க்கையை உழவர் வாழ்க்கையாகக் காட்டத் தவறவில்லை. "சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் மருத நில மக்கள் ஏனையோரினும் நாகரீகத்தில் மேம்பட்டவர் ஆவர். இங்கு வாழ்ந்த குடிமக்கள் மள்ளர், உழவர், உழத்தியர், கடைசியர், கடையர், ஆற்றுக்காலாட்டியர் என்று குறிக்கப்படுகின்றனர். இன்று தேவேந்திரர் என்று அறியப்படும் இம்மக்களின் தொழில் வேளாண்மை ஆகும். வேறு தொழில்கள் இவருக்கு இல்லை. இவர்களின் மேற்சொன்ன மருதநில வாழ்க்கையும், இவர்கள் இன்றும் தங்களின் கடவுள் தேவேந்திரன் (வேந்தன்) என்று

வணங்கி வருவதும் இவர்கள் சங்ககால மருதநில மக்களின் வழித்தோன்றல்கள் என்பதை வலியுறுத்தும்."[18] இதனடிப் படையிலேயே மள்ளர் மரபு பள்ளு நூல்களில் இடம்பெறுகிறது.

தேவேந்திர குல வேளாளர்

"தெம்புடனே பள்ளன் – பள்ளி கூடியே
வந்து – இந்தத் தேவேந்திரப் பள்ளன்
வந்து கும்பிடுகிறேன்"
(மோரூர் நல்ல புள்ளியம்மன் பள்ளு, பா.78)

தேவேந்திரப் பள்ளனும் நான்"
(வையாபுரிப் பள்ளு, பா.8)

"எத்தேச காலமுந்தான் வற்றாத செல்வமும் பெற்
றிருந்து வளர்ந்த புரந்தரன் குலம்நான்"
(செங்கோட்டுப் பள்ளு, பா.208)

"வளைக்குந்தானை மன்னவர்க்கதிகப் படையாதிகம்
வகுக்கு மதி தேவேந்திரப் பள்ளனும் நான்"
(கட்டிமகிபன் பள்ளு, பா.13)

இவ்வாறு பள்ளுப் பிரதிகளில் மள்ளர்களே தங்களைத் தேவேந்திரனோடு இணைத்துத் "தேவேந்திரப்பள்ளன்" என்று அடையாளப்படுத்திக் கொள்வதாகச் செய்திகள் காணப்படு கின்றன. இது குறித்து முன்பே தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. மேலும் பின்வரும் "நெல்லின் தோற்றக் கதை" எனும் இயலில் மானுடவியல் நோக்கிலும் இதற்கான சமூகப் பண்பாட்டுப் பின்புலத்தை நான் சொல்ல முயன்றிருக்கின்றேன். இருப்பினும் இங்கே குறிப்பாகக் கொங்கு நாட்டிலுள்ள மள்ளர்கள் "தேவேந்திர குலத்தான்" என்றே குடிக்கணக்கெடுப்பிலும் அரசு ஆணையிலும் குறிக்கப்படுகின்றனர் என்று தெரிவது இப்பிரதி தரும் உண்மைப் பொருளை அறிய உதவும்.

வட இந்தியாவின் பண்பாட்டு வரலாறு (Social History of North India) என்பது வட மொழியில் புனையப்பட்ட வேதகால இலக்கியங்கள், இதிகாசங்கள், புராணங்களிலிருந்து தொடங்குவது ஆகும். தமிழ்நாட்டின் பண்பாட்டு வரலாறு (Social History of Tamil Nadu) தமிழில் எழுதப்பட்ட தொல்காப்பியம், சங்ககால இலக்கியங்களிலிருந்து தொடங்குவது ஆகும். தமிழகத்தில் வடமொழியாளர்களின் ஆதிக்கம் ஏற்படும்

முன்னரே இங்கு நாகரீகமும், அரசியலும் மேலோங்கி இருந்தன. இது குறித்து டாக்டர் க. கைலாசபதி வருமாறான கருத்தைச் சொல்வார்.

"சிறு சிறு குலங்களாகவும் குடிகளாகவும் குலங்களின் இணைப்புக்களாகவும் சிதறிக் கிடந்த தமிழகத்து மக்கள் ஓயாத போரில் ஈடுபட்டிருந்தனர். ஓயாத போர், படையெடுப்பு, ஊர் அழிவு, அரசுரிமைச் சண்டை ஆகியவற்றின் அடிப்படையிலேயே சங்ககாலத் தமிழகத்திலே மெல்ல மெல்ல அரசுகள் தோன்றலாயின. சங்க காலத்தில் அரசு செலுத்திய பேரரசரும் தொடக்கத்தில் சிறு கூட்டத்தினருக்குத் தலைவராக இருந்திருத்தல் வேண்டும். சங்க காலத்தில் நடுப்பகுதியில் அவர் அரசரான நிலையை அடைந்தனரென அக்கால நூல்கள் வாயிலாக அறிகின்றோம். ஈற்றில் பொருளாதாரத்திலும் தொகையிலும் சிறந்த உழவர் (மருத நிலத்) தலைவனே தமிழ் நாட்டு அரசியலில் வலிமை சிறந்து விளங்கினான். இந்தச் சூழலில்தான் வடமொழியாளர்களின் ஆதிக்கம் தமிழகத்தில் தோன்றியது" (பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.96) இக்கருத்தின்படி வடமொழியாளர்களின் செல்வாக்கு தமிழகத்தில் ஏற்படும் முன்னரே மருதநில உழவர் குடியினர் அரசியலில் வலிமை பெற்று விளங்கினர் என்பதும் மருதநிலத் தலைவன் வேந்தன் (தேவேந்திரன்) என்று சுட்டப்பட்டான் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும்.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் நிலத்தை நால்வகையாகப் பாகுபாடு செய்தனர். மலையும் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி என்றும், காடும் காடு சார்ந்த பகுதியை முல்லை என்றும், வயலும் வயல் சார்ந்த பகுதியை மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த பகுதியை நெய்தல் என்றும் பிரித்துக் கண்டனர். அதனடிப்படையில் கடவுளர்களையும் பிரித்துக் கண்டனர். இதனைத் தொல்காப்பியம்

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"**

என்று குறிப்பிடும். இங்குக் குறிக்கப்படும் வேந்தனே (வயலும் வயல் சார்ந்த) மருத நிலத்தின் கடவுள் ஆவான். தொல்காப்பியரின் இலக்கணப்படி மருதநிலத்தின் கடவுள் வேந்தன் என்றே அறிகின்றோம். அப்புறம் ஏன் உரையாசிரியர்கள் மருதநிலக் கடவுளை வேந்தன் என்று குறிக்காமல் இந்திரன் என்றே குறிக்கின்றனர் என்பதற்கு மறைமலையடிகள் வருமாறு விளக்கம் தருவார்.

"ஆரியர்களின் இந்திரன், இடி, மின்னல், மழை முதலியவற்றிற்குரிய தெய்வமாதலோடு, அவர்தம் பகைவரோடு போராடுங்கால் அவர்க்கு உதவி புரிந்து வெற்றியைத் தருபவனாகவும், அவர்களும் சோமபானம் (மது) விலங்கின் இறைச்சி போன்றவற்றை நிறைய உட்கொண்டு அவர் வேண்டிய நலங்களையெல்லாம் அவர்க்கு விளைவிப்பவனாகவும் சொல்லப்படுகின்றான். தமிழர் வணங்கிய இந்திரனோ (வேந்தன்) வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலத்தில் உள்ள உழவர்களால் மழையின் பொருட்டு மட்டும் வேண்டி வணங்கப்பட்ட மழையின் கடவுள் ஆவான். மழையின் பொருட்டாகவேயன்றி வேறெந்த நன்மைப்பேற்றின் பொருட்டாகவேனுந் தமிழர்களால் அவன் வணங்கப்பட்டவன் அல்லன். இருக்கு வேதத்திலுள்ள பாட்டுக்களில் மூன்றில் ஒரு கூறு இந்திரன் மேற் செய்யப்பட்டிருத்தல் போல, தமிழ் நூல்களில் எங்கும் ஒரு பாட்டேனும் இந்திரன் மேற்செய்யப்பட வில்லை. தொல்காப்பியம் முதலான மிகப் பழைய தமிழ் நூல்களில் "இந்திரன்" என்னுஞ் சொல்லே காணப்படவில்லை. மருத நிலத்து மக்களால் கொண்டாடப்பட்ட தெய்வம் வேந்தன் என்றுசொல்லப்படுகின்றது. தமிழர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் ஆரியர் மழையின் பொருட்டாக வணங்கிய இந்திரனும் மழைக்கடவுளாதல் பற்றிப் பிற்காலத்தவரால் இவ்விருவரும் ஒருவராகக் கொள்ளப்படுவராயினர். அவ்வாறு கொள்ளப்படினும் தமிழர்க்குரிய வேந்தனுக்கும் இருக்குவேத ஆரியர்க்குரிய இந்திரனுக்கும் ஏதோர் இயைபும் இல்லையென்பது நன்கு விளங்கும். உற்று ஆராயுங்கால் தமிழர்க்குரிய "வேந்தன்" என்போன் தமிழர்க்குள் முதன் முதற் தலைவனாய்த் தோன்றி மழை பெய்யுங்காலமும் அம்மழையினுதவியாற் பயிர் செய்தற் கேற்ற வளவிய நிலமும் அந்நிலத்தைத் திருத்திச் செவ்வனே பயிர்

விளைவிக்கும் வகைகளும் நன்குணர்ந்து உழவுத் தொழிலைக் கற்பித்துத் தமிழ் மக்களை மேல் நிலைக்குக் கொணர்ந்தவன் ஆதல் வேண்டுமென்பது புலப்படும். நன்றி செய்த முன்னோரை நினைத்து அவர்களைப் பரவுதல் (வழிபடுதல்) தமிழர்க்கு இயற்கையாதலால் அவர்களின் வழியில் வந்த மருதநிலத்து உழவர் முதல் வேந்தனான அவனது ஆவியை வேண்டி வணங்குவரானார் என்பர்"[19].

பழனிப்பட்டயம், பள்ளு இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், புராணங்கள் முதலியனவும் தேவேந்திர குல வேளாளரை இந்திரன் மரபினர் என்றே கூறுகின்றன. தேவேந்திரர்களை, இந்திரனுடன் தொடர்புப் படுத்தியும், நஞ்சை வேளாண்மையைக் குறிப்பாக நெல்லை இவர்கள்தான் முதன்முதலில் உண்டுபண்ணினர் என்றவாறும் பல புராணக் கதைகள் வழங்குகின்றன. வேளாண் வாழ்க்கையை முழுவதுமாகச் சித்தரிக்கும் பள்ளுப் பாடல்களில் இம் மக்களே கதை மாந்தர்களாக விளங்குவதைப் பார்க்கின்றோம். இதிலிருந்து மருதநில மக்களான மள்ளர் வழியினரே இன்றைய தேவேந்திரரர்கள் என்ற கருத்தைப் பெறமுடியும். இங்கு மருத நில மக்கள் மழை வேண்டி அவனது ஆவியை வழிபட்டதனால் பிற்காலத்தில் மழைவேண்டி வழிபட்ட ஆரியர்களின் தெய்வமான இந்திரனும் ஒன்றெனக் கருதப்படலாயினர்.

தமிழர்களின் கடவுள் கோட்பாடு முன்னோர்களின் வழிபாடு (Ancestral Worship) என்பதை நாம் நினைக்க வேண்டும். தமிழர்கள் நில அடிப்படையில் நால்வகை நிலத்துத் தெய்வங்களை வணங்கினர். "இந்த நால்வகை நிலத்துத் தெய்வங்களும் அந்தந்த நிலத்து மக்களுக்குத் துணை செய்த வீரர்களின் தலைவராக இருக்கலாம்" என்று சாமி சிதம்பரனார் குறிப்பிடுவது (பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.31) இங்குக் கருதத்தக்கது. இக்கருத்துக்கள் தமிழர்கள் நில அடிப்படையில் தெய்வங்களைப் பிரித்து வழிபட்டமையைப் புரிய உதவும். இங்கு நாம் கருத வேண்டியது மருத நிலத்துக் கடவுளான வேந்தன் ஆரியக் கலப்பு ஏற்பட்ட பின்னர்ப் புராணத்துடன் தொடர்புடைய இந்திரனுடன் சேர்த்துப் பேசப்பட்டான். பின்னர் வேந்தன் இந்திரனாகிப் பின்பு தேவேந்திரனாகி மருத நிலத்து மக்களான தேவேந்திர குல வேளாளர்க்கு முழுமுதற் கடவுளாக விளங்கியிருக்க வேண்டும். ஆக தேவேந்திரகுல வேளாளர்களுடன் பண்பாட்டு அடிப்படையில் தொடர்புடையவன் மருதநிலக்

கடவுளான வேந்தன் (இந்திரன்) தானே தவிர புராணத்துடன் தொடர்புடைய கடவுள் இல்லை. ஆக ஆரியர்களின் கடவுள் இந்திரன் வேறு; மருத நிலக்கடவுள் இந்திரன் வேறு என்பதை நாம் புரிய வேண்டும். இருப்பினும் இந்தியப் பண்பாட்டில் எல்லாச் சமுதாயத்தின் வரலாறும் கட்டுக் கதைகளோடு சம்மந்தப்பட்டு வழக்கிலிருப்பது போலவே சில கதைகள் இவர்களிடமும் வழக்கிலிருக்கின்றன. ஆனால் தமிழகத்தில் வேளாண்மையை உண்டு செய்து அரசியல் அமைத்து, நாகரிகத்தை உண்டாக்கிய உழவர் பெருங்குடி மக்களான தேவேந்திர குல வேளாளரின் பண்பாட்டு வரலாறு வேளாண்மையோடு தொடர்புடைய மருத நிலக்கடவுளான வேந்தனிடமிருந்தே தொடங்குகின்றது என்பதை இங்கு நினைய வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

1. பரமேஸ்வரி, சி., தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும், ப. 15.
2. பின்னிணைப்பு, பழனிச்செப்பேடு.
3. இந்தியன் எக்ஸ்பிரஸ், 10.5.2002.
4. குருசாமிசித்தர்,சேர சோழ பாண்டிய மூவேந்தர் மரபினரின் அடையாளங்கள், ப. 7.
5. அறிவுநம்பி, அ., கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு, ப.44.
6. வீரமாமுனிவர், தொன்னூல் விளக்கம்.
7. குப்புராசு, கி.ஆ., மள்ளர்எனும் தேவேந்திரகுல வேளாளர் குலப்பிரிவுகளும் கூட்ட முறைகளும், ப27.
8. குருசாமி சித்தர், தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் (நூலின் ஒட்டுமொத்தப் பணியின் மதிப்பீடு இங்கு மேற்கோள் கருத்தாக ஆக்கப்பட்டுள்ளது.)
9. Hanumanthan, K.R., Untouchability, A Historical Study, p.100.
10. Oppert, G., The Original Inhabitants of India, p. 10.
11. தேவ ஆசீர்வாதம், இரா., பள்ளர் அல்ல மள்ளர், ப. 119.

12. மேலது., ப.118.

13. தேவநேயப்பாவாணர், ஒப்பியன் மொழி நூல், ப.44.

14. மேஜர், கதிர்மகாதேவன், Who are the sons of the soil (ஆங்கிலக் கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ.) தமிழர் பண்பாட்டு வரலாறு (தொகுதி-1) ப.43.

15. பரமேஸ்வரி, சி., மு.கா.ப., ப.16.

16. குருசாமி சித்தர், மு.கா.ப. (நூலின் ஒட்டு மொத்தக் கதையாடல்).

17. தேவ ஆசீர்வாதம், இரா., 1) மூவேந்தர் யார்? 2) வேளாளர் யார்? 3) பள்ளர் அல்ல மள்ளர் ஆகிய மூன்று நூல்களில் கண்டு சொன்ன கருத்தியல்.

18. பரமேஸ்வரி, சி., மு.கா.ப., ப.17.

19. மேலது, ப.18.

# 5. மள்ளர் பள்ளராக வீழ்ச்சியுற்ற வரலாறு

16-ம் நூற்றாண்டு வரை தமிழக வரலாற்றில் மள்ளர், மழவர், கருங்களமர், உழவர், கடையர், கடைசியர் என்று அடையாளம் பெற்றிருந்த தேவேந்திர குல வேளாளர்கள் 17-ம் நூற்றாண்டில் குறிப்பாக நாயக்கர் ஆட்சிக் காலத்தில் தோன்றிய பள்ளு இலக்கியங்களில் "பள்ளர்" என்று அடையாளப்படுத்தப்பட்டு அடக்கி ஒடுக்கப்பட்டதைப் பார்க்க முடிகிறது. இந்த ஒடுக்குமுறை எவ்வாறு நிகழ்ந்தது என்பதை வரலாற்றுச் சான்றுகள், இலக்கியச் சான்றுகள், நாட்டுப்புற வழக்காறுகள் எவ்வாறு பதிவு செய்திருக்கின்றன என்பதை இப்பகுதியில் பார்ப்போம்.

**மள்ளர் பள்ளராக வீழ்ந்த விதம்**

மள்ளர் பள்ளராக ஏன் வீழ்ந்தனர்? ஏன் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பட்டியலில் சேர்க்கப்பட்டனர் என்று கேள்வி எழுப்பி அதற்கான விடையையும் வரலாற்று அறிஞர் கே.ஆர். அனுமந்தன் வருமாறு குறிப்பிடுவார்.

"தமிழ் மூவேந்தர் மன்னன் அரசு வீழ்ந்தது மதுரையில் (விஜயநகரப் பேரரசின் பிரதிநிதி அரசான) நாயக்கர் ஆட்சி, இருந்த காலத்தில்தான் இவர்களின் வீழ்ச்சி ஆரம்பமாகியுள்ளது. மராத்தியர்களும் நாயக்கர்களும் தமிழர்கள் இல்லையாதலால், அவர்கள் தங்களது சொந்தக் கரத்தால் மட்டும் ஆட்சியை வேரூன்ற முடியவில்லை. இங்கிருந்த சில சமூகத்தாரை அணைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. சோழ மண்டலத்தில் வன்னியரும் பாண்டிய மண்டலத்தில் கள்ளர்களும் அவர்களுக்குத் துணை நின்றார்கள். இதன் மூலம் பல மானியங்களைப் பெற்றுள்ளார்கள்."[1]

நாயக்கர்கள் பாளையப்பட்டு முறை என்று ஒரு நிலமானியத் திட்டத்தை உருவாக்கினார்கள். மொத்தத்தில் 72 பாளையப்பட்டுக்கள் உருவாக்கப்பட்டன. இப்பாளையங் களுக்குப் பாளையக்காரர்களாகத் தங்களுக்கு

வேண்டியவர்களை நியமித்தார்கள். பெரும்பாலும் தெலுங்கர்களையும் ஒரு சில பகுதிகளில் குறிப்பாக இராமநாதபுரம், புதுக்கோட்டை ஆகிய பகுதிகளில் முறையே மறவர், கள்ளர் சமூகத்தைச் சேர்ந்தவர் களையும் நியமித்தார்கள். பூர்வீகமாகவே நிலவுடைமை யாளர்களாக இருந்த பள்ளர்கள் பாளையப்பட்டு முறை மூலம் நிலவுடைமையை இழந்தார்கள். பலவந்தமாக நிலங்கள் பிடுங்கப்பட்டன. பறித்த நிலங்களைத் தங்களுக்கு வேண்டியவர்களுக்கு உரிமையாக்கினார்கள். இதன் மூலம் நில உடைமை பெற்றவர்கள் அதிகப் படியான நில வரியைத் தங்களது பண்ணைச் சொந்தக்காரர்களுக்குக் கட்ட வேண்டியிருந்ததால், காலப்போக்கில் இருந்த கொஞ்ச நஞ்ச நிலத்தையும் விற்று விட்டு நிலக் கூலிகளாக மாறிவிட்டார்கள். அடுத்துப் பார்ப்பனர்களைக் குருக்களாக நியமிக்காததாலும் பார்ப்பனர்கள் மதமாகிய இந்து மதக் கோட்பாடுகளைப் பின்பற்றாததாலும், நாயக்க மன்னர்களைத் தங்கள் கைக்குள் வைத்திருந்த பார்ப்பனப் புரோகிதர்கள் இவர்களைத் "தீண்டத்தகாதவர்கள்" என்று அறிவித்தார்கள்.

வட இந்தியாவில் சண்டாளர்களுக்கு விதிக்கப்பட்ட சமூகவிதிகளை இவர்களுக்குப் புகுத்தினார்கள். இவ்விதிகளை எல்லாம் பாளையக்காரர்களின் மூலம் திணித்து இவர்களை வீழ்த்தினார்கள்"[2] என்று கே.ஆர். அனுமந்தன் குறிப்பிடுவது ஏற்புடையதே. இதிலிருந்து நாயக்கர் ஆட்சிக் காலத்தில் இவர்கள் மீது தீண்டாமை திணிக்கப்பட்டு, பாளையக் காரர்களால் செயல்படுத்தப் பட்டிருப்பதை அறிகிறோம். ஆனால் மள்ளர்களுக்கும் தீண்டாமைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதை இவர்களின் வேளாண் வாழ்வும், மள்ளர் மரபும் நமக்குக் காட்டும்.

புதிய அரசுகள் வரும்போது பழைய அரசுகளைச் சார்ந்தவர்களின் உடைமைகளைப் பறிப்பது கொடுமைக் குள்ளாக்குவது, சமுதாய வரலாற்றில் நெடுகிலும் காணக்கூடியதே. அவ்வகையில் ஏற்கெனவே அரசர்களாய் இருந்த மள்ளர் இனம் வேற்று மொழியாளர்களால் அடிமைப் படுத்தப்பட்டது. இதன் பின்னர் நடந்த ஆங்கிலேயர் வருகை, சமயப் பூசல்கள் போன்றனவும் வீரமிக்க இம்மக்களைத் தொல்லை செய்யவே செய்தன. இதுகுறித்து முனைவர் குருசாமி சித்தர் வருமாறு குறிப்பிடுவார்.

"மள்ளர்கள் 16ம் நூற்றாண்டில் அரசியல் ரீதியாக முழுமையாக வீழ்ச்சியடைந்தனர். இந்த வீழ்ச்சியின் இன்னொரு பரிமாணம் வேற்றுமொழி ஆட்சியாளர்கள் மள்ளர்களைப் பொருளாதாரம் மற்றும் சமூக ரீதியாக வீழ்த்தியது. இதில் தெலுங்கு நாயக்கர்கள் பெரும் பங்கு வகித்தனர். இவர்களின் திட்டமிட்ட பள்ளேசல்கள் மள்ளர்களைச் சமூக ரீதியாக ஒடுக்குவதற்கும் வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்டன. தமிழ்நாட்டில் உள்ள அனைத்துப் பெரிய கோயில்களும் மள்ளர்களின் நிர்வாகத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக பறிக்கப்பட்டன. தமிழர்களுக் கெதிரான இந்தக் கொடுமைகள் வெள்ளையர்கள் ஆட்சிக் காலத்திலும் தொடர்ந்தன."[3]

வெள்ளையர் ஆட்சியில் வெள்ளாளர்களும் தமது பங்குக்குத் தேவேந்திரர்களின் நிலங்களைப் பிடுங்கியுள்ளதைப் பள்ளு நூல்கள் பலபடப் பேசுகின்றன.

"பள்ளு நூல்களில், கொழு, மேழி போன்ற உழவுக் கருவிகளைத் தங்களிடமிருந்து பிறர் பறித்துக் கொண்டனர் என்று வரும் பள்ளனாரின் கூற்று இதற்கு அரண் சேர்க்கும்.

**"விருதுக்கே காரைக் காட்டார் வழக்கிட்டு**
**மேழி சேரமுன் வேண்டியே கொண்டார்"**
**(முக்கூடற்பள்ளு, 83)**

காரைக் காட்டு வேளாளர் தான் இங்குக் குறிக்கப்படும் வேளாளர் ஆவார். இதே போன்று மேழியை மள்ளரிடமிருந்து பிறர் பறித்துச் சென்ற வரலாறு, பொய்கைப் பள்ளு, திருவேட்டை அய்யனார் பள்ளு, செங்கோட்டுப் பள்ளு ஆகிய பள்ளு நூல்களிலும் இதே முறையில் கூறப்பட்டுள்ளது.

**"கலப்பை யாவும் வணிகர் கைக் கொண்டனர்**
**காணுங்காலை நகைப் பையா வென்பர்"**
**(பொய்கைப் பள்ளு, 101)**

என்று வரும் பொய்கைப் பள்ளுப் பாடலில் வெளிப்படையாகக் கலப்பை யாவையும் வணிகர்கைக் கொண்டனர் என்று வருகின்றது.

**"..... ...... ..... மேழியை**
**விந்தையாகிய வேளாளர் எங்கள்**
**விருதென்றே கொண்டு போனார்"**
***(செங்கோட்டுப் பள்ளு. 427–428)***

என்று வரும் செங்கோட்டுப் பள்ளுப் பாடலில் "**மேழியை வேளாளர் எங்கள் விருதென்றே கொண்டு போனார்**" என்ற செய்தி வெளிப்படையாக உள்ளது. "விந்தையாகிய வேளாளர்" என்பது நுட்பமான ஆட்சியாக உள்ளது. உழவிற்குரிய கலப்பையை எங்களிடமிருந்து, உழவுத் தொழிலுக்கே தொடர்பற்றவர் கொண்டு சென்றார். அவர்களுக்கு அது விருதாக வெற்றிச் சின்னமாக கொடியில் ஏறியது. நாங்கள் நிலம் இழந்தவர்கள் ஆனோம் என்னும் குரல் இதில் உள்ளது. மேழியைப் பறித்தனர் என்பது நிலங்களைப் பறித்தது என்று ஆகும் என்பார் சு. வேங்கடராமன்.[4]

மள்ளர்களிடமிருந்து மேழி பறித்த தகவல்கள் பள்ளு நூல்கள் முழுவதும் ஓர் உள் பிரதியாக (Inter Text) நிறையக் காணப்படுகின்றன. இவைகளில் சில இன்னமும் வருமாறு அமைகின்றன.

**"உழுங் கலப்பையை மாலெடுத்துக் கொண்டு**
**உலகிலியார்க்கும் உழக் கொடுத்தாச்சு**
**கொழு நெடும் பரிக்காரர் கைக் கொண்டார்**
**குலவு நோக்கான் மதன் படைக்கல்லோ**
**பழகும் ஏர்க்கால் எவர்க்கும் பொதுவென்று**
**பாணித்தான் ஒரு வாணிபன் கண்டீர்**
**வளர்கய மரம் தார்க்கம்பு சோலையில்**
**வைத்திருப்பது அறியீரோ யாண்டே,"**
***(தென்காசைப்பள்ளு, பா. 128)***

இப்பாடலுக்கு குருசாமி சித்தர் "உழும் கலப்பையை ஆட்சியர் எடுத்துக் கொண்டு மற்றவர்களுக்கு உழக் கொடுத்தாச்சு. கொழுவை நெடும்பரிக்காரர் (துரை - சமீன்தார்) கைப்பற்றிக் கொண்டார். ஏர்க்காலை எல்லோர்க்கும் பொது என்று ஆணையிட்டான் ஒரு வாணிபன்"[5] என்று பொருள் கண்டிருப்பது சரியானதே. இதேபோன்று திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளுவில் கங்கை குலத்தார் மேழியைப் பிடுங்கினர் என்று ஒரு பாடல் சொல்கிறது.

*"கான மாமலர்த் தண்டலை சூழும்*
*கனக பூமகள் வாழும் நல்லூரினில்*
*நான மீறிய மேழியை இப்புவி*
*நாட்டுக் கங்கை குலத்தோர் கொடுப்போனார்"*
*(திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு, பா.83)*

இவ்வாறான குறுங்கதையாடல்களை (Micro Narrative) படைப்பாளன் போகிற போக்கில் ஒரு சமூக வரலாற்றின் எச்சமாகப் பதிவு செய்திருப்பதைப் பார்க்கையில் இம்மக்களை மருத நிலத்திலிருந்து அப்புறப்படுத்துவதில் நாயக்கர் ஆட்சியுடன் சேர்ந்து தமிழகத்திலுள்ள பிற ஆதிக்கச் சமூகத்தார்களும் ஈடுபட்டிருந்தனர் என்பதாக அனுமானிக்க இடமிருக்கிறது. இந்த ஆய்வு தனியே விரிவாக நடைபெற வேண்டும்.

இது போன்றே தமிழகம் முழுமையும் தேவேந்திரர்கள் பாளையப்பட்டுகளின் நெருக்குதலுக்கு ஆளானார்கள். போடி நாயக்கனூர் பாளையப்பட்டின் ஆட்சியுரிமை பெற்ற போனாய்க்கன் அங்கிருந்த மள்ளர்களின் நிலங்களைப் பிடுங்கிய விதம் கதைப் பாடலாகப் பாடப்படுகின்றது. அவற்றில் சில வரிகள் வருமாறு.

*"ஆயிரமாயிரம் மாடு பூட்டி*
*அம்பாரமாய் நெல் அடிச்சு*
*ஆயிரவேலி நஞ்ச புஞ்சை கட்டி*
*அனுதினமும் அன்னதானம்*
*ஆக்கிப் படைச்ச காலாடியார்*
*பார் புகழும் பாண்டியர் குலம்*
*பாண்டி பண்ணாடி*
*பகை முறிக்கும் தேவேந்திர குலத்தார்*
*படை திரட்டும் காலாடியார்*
*நடுவும் நீதியும் நன்றாய் தான் விளங்க*
*குடும்பர்கள் ஆளுமிந்த*
*அரச குடும்பனாரும்*
*அவர் தம் மாப்பிள்ளைமார்*
*அழகப்பன் காலாடியாரும்*
*அரசாண்ட பூமியிது*
*. . . . . . . .     . . . . . . . . . . .*

பொங்கிட்ட குடும்பரும் காலாடியாரும்
வடுக நாயக்கனோடு
வன்பகை கொண்டிட்டார்
ஆயிரம் பேரைக் கொன்றிட்டான்
ஆயிரம் வேலி கலனியை
அபகரித்தான் .........".[6]

என்று நீளும் இந்நாட்டுப் பாடல் நாயக்கர் ஆட்சியில் மள்ளர்கள் நிலத்தையும் ஆட்சியையும் இழந்தது குறித்துப் பேசும்.

மள்ளர் என்ற பெயரில் வேளாண் மாந்தர்களாக விளங்கிய இம்மக்கள் நாயக்கர் கால இலக்கியங்களில்தான் பெருமளவில் பள்ளர் என்று சுட்டப்படுகின்றனர். மள்ளர் என்பது வீரத்தைக் குறிக்கும், பள்ளம் வீழ்ச்சியைக் குறிக்கும், ஒரு தெலுங்குச் சொல்லாகவும் பள்ளர் என்ற சொல் விளங்குகின்றது. ஜி. ஒப்பர்ட் கூற்றுப்படி "தெலுங்கில் பள்ளம் என்பதற்கு நஞ்சை என்று பொருள்படும். ஆக தெலுங்கர்களின் தமிழக வருகைக்குப் பின்னர்தான் இங்கே நஞ்சைப் பயிர் செய்தவர்களைப் பள்ளர் என்று கூறும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும்" என்ற தேவ ஆசீர்வாதத்தின் கருத்து ஏற்புடையதே ஆகும். மேலும் மள்ளர், பள்ளர் என்ற இரண்டு சொல்லும் பள்ளு நூலில் இடம் பெற்றிருப்பதையும் இங்கே நினைக்க வேண்டும். ஆக நாயக்கர் ஆட்சிக் காலத்தில் தான் மள்ளர் பள்ளராக வீழ்ச்சியுற்றனர் என்பதே வரலாறு காட்டும் உண்மையாகும்.

### வழக்காறுகளில் மள்ளர் வரலாறு

கல்வெட்டுக்கள், செப்பேடுகள், பட்டயங்கள், புதை பொருட்கள் மற்றும் இலக்கியங்கள் முதலியன மக்களின் வரலாற்றை அறிந்து கொள்ள துணைபுரிகின்றன. எழுத்துருப் பெறாத மொழி பேசும் மக்களின் வரலாற்றையும் அறிந்து கொள்வதற்கு நாட்டுப்புற வழக்காறுகள் பெரிதும் துணைபுரிகின்றன. கல்வெட்டுக்கள் முதலானவற்றில் காணப்படுவது போன்றே நாட்டுப்புற வழக்காறுகளிலும் சார்புத் தன்மை, மிகைப்படுத்தல் முதலான தன்மைகள் காணப்படுவது இயல்பு. மேலும் நாட்டுப்புற வழக்காறுகள் காலங்காலமாக வாய்மொழியாகக் கூறப்பட்டு வருவதால்

அவற்றுள் புதியன இணைத்தலும் உண்டு. இவற்றை மனதில் கொண்டு கவனமாக ஆராய்ந்தால் சமூக வரலாற்றை ஓரளவு சரியாக அறிந்து கொள்ள நாட்டுப்புற வழக்காறுகள் துணைபுரியும் எனும் டாக்டர் ஆறு. இராமநாதனின் கூற்றுக்கிணங்க மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களின் வழக்காறுகளில் அம்மக்களின் வரலாறு எழுதப்பட்டுக் கிடப்பதை வருமாறான சான்றுகளில் காணலாம்.

"வந்தவுக வலுக்கனும்
இருந்தவுக இல்லாமப் போகனும்"

"பொம்பளக்கு புருஷன் இல்லாமப் போகனும்
ஆம்பளக்கி பெண்டாட்டி இல்லாமப் போகனும்"

என்ற இரண்டு வழக்காறுகள் பழனி வட்டாரத்தில் குறிப்பாகத் தேவேந்திர குல வேளாளர்களிடம் வழக்கிலுள்ள வழக்காறு ஆகும். இந்த வழக்காறு பழனி அருகிலுள்ள சிந்தலாடம் பட்டியில் ஒரு பெண் தகவலாளி சொல்லியது ஆகும். இந்த வழக்காறு குறித்து மனதில் பதிவு செய்து கொண்டு இதற்கான விளக்கத்தைப் பின்னொரு நாள்அதே சிந்தலாடம் பட்டியில் வாழும் வைத்தியர் தங்கவேலு அவர்களிடம் கேட்டேன். அவர் சொன்ன வரலாறு வருமாறு அப்படியே இடம் பெறுகிறது.

"பழனி வட்டாரத்தில் உள்ள ஓர் ஊரின் பெயர் மஞ்சநாயக்கன் பட்டி. இந்த ஊரின் பழைய பெயர் பழையூர் என்பதாகும். இந்த ஊர்ல மஞ்சம்மாள் எனும் மள்ளர் குலப் பெண்ணின் வம்சாவளியினர் பிரசித்தி பெற்று வாழ்ந்ததால் பழையூர் என்பது மறைந்து மஞ்சப்பட்டி என்றாகியது. இதன் பின்னர் நாயக்கர் ஆட்சியில் எல்லா ஊரின் பெயரும் மாறியது போன்று இந்த ஊரின் பெயரும் மாற்றம் பெற்று மஞ்சநாயக்கன் பட்டி ஆனது. மள்ளர்களும், கவுண்டர்களும் குடியிருந்த மஞ்சப்பட்டியில் கம்பளத்து நாயக்கரும் குடியேறினர். இந்தக் காலகட்டத்தில் மள்ளர்களுக்கும் நாயக்கர்களுக்கும் பல சமூக மோதல்கள் நடந்தன. இந்தச் சமயத்தில் கம்பளத்து நாயக்கர் இனப் பெண் கொடுத்த சாபமே மேற்சொன்ன வழக்காறு. வந்தவுக வலுக்கனும் என்றால் 16-ம் நூற்றாண்டில் குடியேறிய நாயக்கமார் வாழனும் என்றும் இருந்தவுக இல்லாமப் போகனும் என்றால் மள்ளரும் கவுண்டரும் பூர்வீகமாக இந்த [illegible]ருப்பவர்கள் இவர்கள்

இல்லாமல் போகணும் என்றும் பொருளாகும். கம்பளத்து நாயக்கமார் மந்திரம் மாயமென்று செய்து ஆண்களுக்கு மனைவியும் பெண்களுக்குக் கணவனும் இல்லாது செய்து மனித இருப்பையே வேரறுத்தார்கள். இதனால் மஞ்ச நாயக்கன் பட்டியில் வாழ்ந்த மள்ளரும் கவுண்டரும் இடம் பெயர்ந்து சிந்தலாடம் பட்டி வந்து சேர்ந்தனர்" என்று மூச்சு விடாமல் சொன்னார். இவ்வாறு இவர் சொல்லியதை உறுதி செய்யும் வகையில் மஞ்ச நாயக்கன் பட்டியில் இன்று நாயக்கர் இனம் மட்டுமே வாழ்கின்றது. ஆனால் இந்த ஊரிலுள்ள காளியம்மன் கோயில் தேவேந்திரர்களுக்குச் சொந்தமானதாக இருப்பதும் அண்மைக்காலம் வரை இவர்களுக்கே முதல் மரியாதை கொடுக்கப்பட்டு வருவதும் முற்காலத்தில் தேவேந்திரர்கள் இங்கு வாழ்ந்ததை உறுதிசெய்கிறது. இதல்லாமல் மஞ்ச நாயக்கன் பட்டியின் மையப்பகுதி (நடுத்தெரு) பள்ளன் படைக்கால் என்று அழைக்கப்படுகிறது. இங்குள்ள மஞ்சம்மாள் வழியினரின் தோட்டம் இன்றும் "குடும்பன் தோட்டம்" என்றே அழைக்கப்படுகிறது. மேலும் மஞ்ச நாயக்கன் பட்டிக்கு அருகிலுள்ள காளிபட்டி எனும் ஊரிலுள்ள நாயக்கருக்கு உரிமையான நிலம் முழுவதும் "பசிவைக் குடும்பன்" என்பவரின் வாரிசுகளின் நிலமாக இருந்ததைப் பத்திரப் பதிவுகள் சுட்டுகின்றன. இங்குள்ள 180 ஏக்கர் அளவுள்ள செங்குளம் கண்மாயில் பசிவைக் குடும்பன் வகையறாக்களின் முன்னோர் நால்வர் சிலை உள்ளது. இதன் அருகே ஒருசெல்லாண்டியம்மன் கோயில் உள்ளது. இந்த இரண்டு கோயிலையும் பராமரிக்க 20 ஏக்கர் நிலம் பசிவைக்குடும்பன் வகையறா எழுதி வைத்துள்ளனர். ஆனால் இந்த நிலம் இப்போது கோயிலுக்கு உரிமையானதாக இல்லை. பழனிச்சாமி நாயக்கர் என்பவருக்கு அனுபவச் சொத்தாக இருக்கின்றது.[7] இப்படியாகப் பல வரலாறுகள் மக்களின் வரலாறாகக் காணக்கிடக்கின்றன. இந்தத் தகவலை கட்டுரையாளரிடம் சொல்லிக் கொண்டிருந்த தகவலாளி திடீரென வேறு ஒரு தகவலைச் சொன்னார். அது வருமாறு.

"ஒட்டன் சத்திரம் அருகில் இடும்பக் குடும்பன் பட்டி எனும் ஊர் இருக்கின்றது. இங்குள்ள செல்லாண்டியம்மன் கோயிலைக் கந்தக் குடும்பன் என்பவரும் இடும்பக் குடும்பன் என்பவரும் ஏற்படுத்தினர். ஆனால் நாயக்கர் ஆட்சியில்

தொட்டிய நாயக்கர் நாங்கள் தான் முதல் பொங்கல் வைப்போம் என்று பொங்கல் வைக்க முயல அம்மன் அதற்கு அனுமதிக்க வில்லை. மறுபடியும் தேவேந்திரர்களே முதல் பொங்கல் வைத்தனர். ஆனால் தேவேந்திரர்கள் ஏற்படுத்திய இஃகோயிலில் நாயக்கருக்கும் கவுண்டருக்கும் உரிமை ஏதோ ஒரு காலத்தில் மாறிப்போனது" என்று முடித்தார். இதனைத் தகவலாளி சொல்லிக் கொண்டிருக்கும் போதே இன்னொரு தகவலாளி உடுமலை வட்டம் திணைக்குளத்தில் வழிபடப்படும் வீரமாத்தி வெங்கலமடையாள் எனும் தெய்வத்தின் கதையை வருமாறு சொல்லத் தொடங்கினார்.

"அந்த நாயக்க ஜமீன் காலத்தில் செங்குளம் கண்மாயை நீராணிக்கம் செய்தவர் ஆவுடையாக் குடும்பன். இவர் மனைவி பெயர் வெங்கலம்மாள். ஆவுடையாக் குடும்பன் தினந்தோறும் நாயக்க ஜமீனுக்கு மீன் பிடித்துக் கொடுத்து அனுப்ப வேண்டும். ஒரு நாள் மீன் பிடிபடல, ஒரு மீன் தான் கிடைச்சது. அதை ஜமீனிடம் கொண்டு போனா நல்லா இல்ல என்று நினைத்து நிறை மாதக் கருவுற்றிருக்கும் தன் மனைவி வெங்கலம்மாள் ஆசைப்பட்டாள் என்று கொடுத்துவிட, ஜமீன் மீன் கேட்டு வர, மீன் கிடைக்காததை ஆவுடையாக் குடும்பன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, வெங்கலம்மாள் அந்த ஒரு மீனை குழம்பு வைத்து தனது கணவனுக்குச் சாப்பாடு கொண்டுவர, அதை அறிந்த ஜமீன் தன்னை ஏமாற்றியதாகச் சொல்லி ஆவுடையாக் குடும்பனை வாளால் வெட்டிச் சாய்க்கின்றான். கணவன் இறந்த பின் வெகுண்டெழுந்த வெங்கலம்மாள்

*"பெரு மீன் அருக*
*அரண்மனை அழிய"*

என்று சாபமிட்டு விட்டு, கணவன் சிதையுடன் தானும் இறங்கித் தெய்வமாகிவிட்டாள். இவளின் நினைவாக இங்குள்ள தேவேந்திரர்கள் வழிபடும் தெய்வமே வீரமாத்தி வெங்கலமடையாள் என்று முடித்தார். கணவன் இறந்ததும் அவன் சாவுக்குக் காரணமான ஜமீனுக்குச் சாபமிட்டு விட்டு கணவனுடன் எரியுண்ட அவள் வீரம் கருதியே **"வீரமாத்தி வெங்கலமடையாள்"** என்று அழைக்கப்படுவதாக இம்மக்கள் நம்புகின்றனர். மடையாள் என்பதற்குக் கண்மாயின் மதகு காக்கும் காவல் தெய்வமே அத்தெய்வம் என்றும்

சொல்கின்றனர். இப்படிப் பல வரலாறுகள் மக்களின் தொன்மை வழக்காறுகளில் காணப்படுகின்றன.

இதல்லாமல் நாட்டுப்புறப் பாடல்களிலும் நாயக்கர் ஜமீன் ஆட்சிக்காலம் குறித்த செய்திகள் இடம் பெறுவதைப் பார்க்க முடிகின்றது.

"கந்தனே திருச்சடை வேல் முருகா
பால சமுத்திரம் வையா புரிக் குளமும்
வந்தவர் தானம் செய்ய"[8]

என்ற பாடலடிகள் உடுமலை வட்டம் சோமங்கலம் எனும் கிராமத்தைச் சார்ந்த சாந்தாமணி எனும் நாயுடு இனத்தைச் சேர்ந்தவர் பாடிய கும்மிப் பாடலடிகள் ஆகும். இதே போன்று

"காக்காயன் தோப்பு வழி
மேஞ்சு வரும் காட்டு மிருக சாதி
அம்மைய நாயக்கன் போல
பழனி முருகன் வந்தாராம்
...... ...... ........"[9]

என்ற கும்மிப் பாடலடிகள் உடுமலை வட்டம் குமரலிங்கம் எனும் ஊரைச் சேர்ந்த தேவேந்திர குல வேளாளர் வள்ளி நாயகம் பாடியது ஆகும். இந்த இரண்டு கும்மிப் பாடல்களில் இரு சமூகத்தின் குரல்களும் அதோடு அன்றைய வரலாறும் பதிவு செய்யப்பட்டிருப்பதனைக் காணமுடியும். பழனி முருகன் கோயிலுக்கு அடிவாரத்தில் உள்ளது பாலசமுத்திரம் எனும் ஊரும் வையாபுரி குளமும் ஆகும். இந்த இரண்டும் தேவேந்திரர்களுக்குத் தானமாகக் கொடுத்ததை மகிழ்வாகப் பாடுபவர் நாயக்கர் சமூகத்தவர் ஆவார். ஆனால் தானம் கொடுத்த அம்மைய நாயக்கன் காட்டு மிருக சாதி என்று எதிர்க்குரலில் பாடியிருப்பவர் தேவேந்திர குல வேளாளர் ஆவார். இப்படியான வழக்காறுகள் வழக்கிலிருக்கும் சமூகத்தைச் சார்ந்த வழக்காறுகளில் சொல்லப்படும் செய்திகள் வேறுபடுவதனையும் அதில் ஓர் உண்மை ஒளிந்திருப்பதனையும் காணமுடிகிறது. நாயக்கர் ஆட்சியில் பல கிராமங்கள் கோயிலுக்கும் ஜமீனுக்கும் எந்த நிபந்தனையுமின்றித் தானமாக வழங்கப்பட்ட வரலாறு இங்கு நினைக்கப்பட வேண்டும்.

பழனி முருகன் கோயிலில் பல வழிபாட்டு உரிமைகளைப் பெற்றிருப்பவர்கள் மள்ளர் எனும் தேவேந்திர

குல வேளாளர் ஆவர். இதனை 16-ம் நூற்றாண்டுக்கால பழனிச் செப்புப் பட்டயம் காட்டுகின்றது.[10] இந்தச் செப்புப் பட்டயத்தின் அடிப்படையில் 1997 முதல் தைப் பூசத் திருவிழாவில் தேவேந்திரர் மடத்திற்கு முதலில் முருகன் எழுந்தருளும் உரிமை வழங்கப் பட்டிருக்கின்றது என்பது குறிப்பிடத்தக்கது. பழனி கோயில் அடிவாரத்தில் '**பண்டாரப் பள்ளர்**' எனும் ஒரு வகை தேவேந்திர இனப் பிரிவினர் 500 குடும்பத்திற்கும் மேலாக வாழ்ந்து வருகின்றனர். இந்தப் பண்டாரப் பள்ளரிடமிருந்தே இராமபப்பய்யன் அந்தணருக்கு பூசாரி உரிமையை மாற்றிக் கொடுத்தான் என்றும் ஒரு மரபு வழி வழக்காறு இருக்கிறது. பழனி தைப்பூசத் திருவிழாவின் தொடக்கம் பழனி ஆயக்குடியிலுள்ள இடும்பன் கோயிலில் இருந்தே தொடங்குகின்றது. இந்த இடும்பன் கோயில் பண்டைக்காலம் தொட்டு இன்று வரை தேவேந்திரர்களின் உரிமையுடையதாகவே விளங்கி வருகின்றது. பழனி முருகன் கோயிலுக்கு எடுத்து வரும் காவடியில் இன்றும் முதல் மரியாதை வழங்கப்படுகின்றது. மார்கழி மாதம் முழுவதும் பழனி முருகனை நீராட்டப் பயன்படுத்தும் ஒரு குடம் இளநீர் ஒரு குடம் பால் ஆகியவற்றைப் பழனியில் வாழும் தேவேந்திரர்களே காலங்காலமாகக் கொடுத்து வருகின்றனர். பழனி கோயிலைச் சுற்றி வாழும் மள்ளர்களின் வாழ்வியலோடு பழனி முருகன் கோயில் பல வகையில் உறவுடையதாக இருக்கின்றது. பழனி வட்டாரத்தில் பெரும் எண்ணிக்கையில் வாழ்பவரும் இவர்களே ஆவர். பழனி மாரியம்மன் தேரோட்டம் குறித்துப் பாடப்படும் பாடல்,

**"யாரு தொட்டாலும்
தேர் ஓடாது
எவரு தொட்டாலும்
தேர் ஓடாது
தேருக்கு உகந்தவன்
தேவேந்திரன் தொட்டால்
தேர் ஓடும்"**

எனும் கும்மிப்பாடல் இப்பகுதியில் பிரசித்தி பெற்றது ஆகும். பழனி மாரியம்மன் கோயிலில் பல வழிபாட்டு உரிமைகளை இம்மக்கள் பெற்றிருக்கின்றனர். இந்தக் கோயிலில் "**கரியாக்**

குடும்பன்" எனும் தேவேந்திரன் சிலையும் ஒரு தெய்வமாக வணங்கப்படுகின்றது.

பழனி பழைய ஆயக்குடி தேவேந்திரகுலமக்கள் வழிபடும் குல தெய்வ வழிபாட்டில் கம்பளத்துத் தெய்வம் எனும் பெயரில் ஒரு வழிபாடு இடம் பெற்றுள்ளது. தமது தெய்வ வழிபாட்டை மேளமடித்து வழிபடும் இம்மக்கள் கம்பளத் தெய்வத்தை வழிபடும்போது உருமிமேளம் அடித்து வழிபடுகின்றனர்.[11] இந்த மேளம் அடிக்கும்போது ஜக்கம்மாள் தெய்வமேறி ஒரு மள்ளர் குலப்பெண் சாமி வந்து ஆடுகிறார். இந்த ஜக்கம்மாள் வழிபாடு நாயக்கர் காலத்தில் தமிழகம் வந்தது ஆகும். இவ்வழிபாடு தமிழர்களின் வழிபாட்டில் வலுக்கட்டாயமாகத் திணிக்கப் பட்டிருப்பதையும் இச்சான்று எடுத்துக் காட்டுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. அனுமந்தன், கே.ஆர்., தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டுமுறை (ஆங்கில மூலம்) தமிழில், பேராசிரியர் தங்கராஜ், பாட்டாளி முழக்கம், ஜூலை, 1993, ப.10.

2. மேலது, ப. 12.

3. குருசாமி சித்தர் (ப.ஆ.) தமிழக வரலாறும் தேவேந்திரர் வரலாறும் பிரிக்க முடியாதது, (கட்டுரை) தமிழர் பண்பாட்டு வரலாறு, (தொகுதி - I) ப. 86.

4. வேங்கடராமன், சு., பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபு, பக். 94 - 95.

5. குருசாமி சித்தர், பள்ளு இலக்கியங்களில் நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்த செந்நெல் முதுகுடியினர் வாழ்வியல், ப.86.

6. தமிழ்ச் செல்வன், செ., நாயக்கர் ஆட்சியினால் வீழ்த்தப்பட்ட தேவேந்திரர்களின் வீர வரலாற்றுக் கதைப்பாடல், (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ.) மு.கா.ப. பக். 255 - 257 (கதைப் பாடலின் முழுவடிவம் இந்நூலின்

தேவை கருதிப் பின்னிணைப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. முழு விபரம் தெரிய இதைப் படிக்கலாம்.)

7. கிருஷ்ணசாமி, மா., பழனி வட்டாரம் பழையூர் மஞ்சநாயக்கன் பட்டி பூர்வீக வரலாறு, (கட்டுரை) குருசாமி சித்தர், தே. ஞானசேகரன் (ப.ஆ.) தமிழர் பண்பாட்டு வரலாறு தொகுதி - 2, பக். 175-178.

8. சுப்பிரமணியன், சு., "உடுமலை வட்டார நாட்டுப்புறப் பாடல்கள்-ஓர் ஆய்வு" - பாரதியார் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட பி.எச்டி. பட்ட ஆய்வேடு, ப. 200-201.

9. மேலது.

10. பழனி செப்புப் பட்டயம், குருசாமி சித்தர், தமிழர் பண்பாட்டு - வரலாறு (தொகுதி- I) ப. 325 (பட்டய விபரம் முழுவதும் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது).

11. சுப்பிரமணியன், செ., தேவேந்திர குல வழிபாட்டு மரபுகள், (பழனி வட்டாரம்), ப. 20.

# 6. நெல்லின் தோற்றக்கதை

நெல்லின் தோற்றம் குறித்து இம்மக்களிடம் வழக்கிலுள்ள "தொன்மங்களுக்கும்" (Myths) இம்மக்களின் வேளாண் வாழ்க்கைக்கும் உள்ள பண்பாட்டுத் தொடர்பை இப்பகுதியில் நான் விளக்கியிருக்கின்றேன். நெல் இம்மக்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான வாழ்வியல் சடங்குகளில் எவ்வாறு ஒரு பண்பாட்டு அடையாளக் குறியீடாக இடம் பெறுகின்றது என்பதையும் சுருக்கமாகச் சொல்லியுள்ளேன். இதைத் தெரிவதன் மூலம் நெல் வேளாண்மைக்கும் இவர்களுக்கும் இருக்கும் மரபு வழியிலான பண்பாட்டுத் தொடர்பை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

## தேவேந்திரர்களும் நெல் வேளாண்மையும்

கரிவலம் வந்த நல்லூர்க் கல்வெட்டில் இம்மரபினர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதியால் தேவலோகத்திலிருந்து சென்னெல், கன்னெல், கதலி, பனை முதலிய விதைகளுடனும் காளையுடனும் பூமிக்கு அழைத்து வரப்பட்டதாகவும் அவர்கள் ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகளைத் தோண்டி வேளாண்மைகண்டு நாட்டைச் செழிப்பித்ததாகக் கூறப்படுகிறது.[1]

வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன் ஈராயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக நெல் விவசாயத்தை விடாமல் செய்துவரும் ஒரே சமூகம் உண்டென்றால் அது பள்ளர்கள்தான் என்று கூறுவார்.[2]

இந்த வரலாற்றுச் செய்திகளும் இம்மக்களிடம் வழக்கிலிருக்கிற நெல் தோற்றம் பற்றிய கதைகளும் "நெல்"லின் வித்தையும், நெல் வேளாண்மையையும் இம்மக்களே தொன்மைக்காலம் முதல் செய்தனர் என்பதற்கான சான்றாக அமைவதை உள்வாங்கிக் கொண்டே செங்கோட்டுப்பள்ளு நெல்வித்தைச் சிவனின் வேண்டுகோளின்படி சதாசிவக் குடும்பனார் பூந்துறை நாட்டில் உண்டாக்கியதாகக் கூறுகிறது.

"நெஞ்சில் கவடில்லாமல் தஞ்சமெனவும் பண்ணை
நிலை பதியாய் மூவேழு தலை முறையாய்
நஞ்சுண் சுறை மிடற்றர் தன் சேவடிக்கிதமாய்
நடந்திருந்தோ முன்னாள் மண்ணிடந்தனிலே
முஞ்சாலி முத்தென நெல்லுஞ்சால வித்துண்டாக்கி
முளைக்கும் படிச் செய்தெங்கும் தழைக்கச்செய்தார்
வஞ்சிக்கிடங் கொடுத்தார் தன் செயலால்
மேன்மேலும்
வளரும் சதாசிவக் குடும்பனும் நானே"
(செங்கோட்டுப்பள்ளு, பாடல், 205)

பழனிச் செப்புப் பட்டயமும் இதை வழிமொழிவது போன்று "பார்வதிக்கும் பரமசிவனுக்கும் மகனாகப் பிறந்த (வேர்வையிலிருந்து தோன்றிய குழந்தை) வள்ளல் எனும் தேவேந்திரன் இந்திரனுக்கும் இந்திராணிக்கும் மகனாக வளர்ந்து, மேலோகத்தில் சில வயல்களை உண்டாக்கி, அதிலே தென்னை, கமுகு, பலா, எலுமிச்சை, மஞ்சள் எல்லாம் உண்டாக்கி, சிவனிடம் செந்நெல் விளைவிக்க வரம்வேண்ட, சிவனின் அருளுடன் ஒரு அன்னபட்சி தன் மூக்கிலிருந்து ஒரு நெல் மணியை உதிர்க்கிறது. இந்த நெல்மணி வளர்ந்து செந்நெல்லாக வளர்கிறது. இந்நெல்லால் வள்ளல் மகன் சிவனுக்கும் பார்வதிக்கும் அமுதம் படைக்க, அதன் ருசிகண்ட சிவன் பூலோகம் சென்று பயிரிட ஆணையிட, இதை அறிந்த மூவேந்தர்களும் (சேர, சோழ, பாண்டியன்) மேலோகம் சென்று வள்ளல் மகனை அழைக்க, ஈஸ்வரனும் அனுமதிக்கின்றார். வள்ளல் மகனும் தெய்வலோகத்திலிருந்து மாடு எருதுகள் எல்லாம் கொண்டு வந்து நெல்லை பூலோகத்தில் உண்டாக்குகின்றார். இந்த வள்ளல் மகன்தான் தெய்வேந்திரன் என்று பெயர் பெறுகின்றான். இவ்வாறு செந்நெல்லை உண்டாக்கிய தேவேந்திரன் நிறைய நெல்களைப் பூமியில் உண்டாக்கி மானுடர் பயன்பெறச் செய்கின்றார். அவர் உண்டு செய்த நெல் வகைகள் "முழரி, கடும்பொன், விண்ணவராயன், சேர்ந்த முத்தான், ஈசம்பதியான், இளந்தலைகிழவன், இன்பமாதாரி. . . , ஊனுக்கினியான், உமியில்லா வாசகன், சிறுமிளகி, பெருமிளகி . . . என்று நூற்றுக் கணக்கில் விரிந்தன. இந்தத் தேவேந்திரனின் வழிவந்தோர்க்கு மூவேந்தர்களும் காணி, பூமி கொடுத்துச் சிறப்புச் செய்தனர். இவன் வழிவந்தவர்களே இந்தப் பூமியிலுள்ள பல்வேறு பள்ளர்

சாதியினர் என்று பட்டயம் கூறுகிறது"[3] இங்கே நாம் கவனிக்க வேண்டிய ஒரு செய்தி இருக்கின்றது. அது தேவேந்திர மக்களுடைய தலைவன் பூமிக்கு நெல்லைக் கொண்டு வந்தான் என்பது. தமிழகத்தில் எத்தனையோ சாதிகள் இருக்க, இம்மக்கள் மட்டுமே நெல் வேளாண்மைக்குரியவர்களாகப் பல்வேறு தொன்மங்களின் வழி தன்னை அடையாளப் படுத்துவதற்கான காரணங்கள் என்ன? நெல் வேளாண்மைக்கென்று தோன்றிய ஒரு இலக்கிய வகைமையான பள்ளு இலக்கியம் இவர்களைத் தலைமை மாந்தர்களாக ஏன் படைத்துக்காட்டுகின்றது என்று கேள்விகள் கேட்டு அதற்கான பதில் பெற்றால் அது இவர்களுக்குரிய நெல் வேளாண்மையின் மீதிருக்கிற பிரத்யேகமான உரிமையைக் காட்டும். இன்னும் கொஞ்சம் அணுக்கமாகச் சென்றால் இவர்களின் தலைவன் அதுதான் இவர்களின் முன்னோன் தேவேந்திரன் இவர்களின் பண்பாட்டுத் தலைவனாக (Cultural Hero) நம் முன்னே வந்து நிற்பான். இன்னும் கொஞ்சம் நுணுக்கமாகக் பார்த்தால் (Micro) அங்கே தொல்காப்பியர் குறிப்பிடும் மருதநிலத்தின் வேந்தன் வந்து நிற்பான். இப்படித்தான் பண்பாட்டு மானுடவியலில் ஒரு பண்பாட்டுச் செய்திக்குப் பொருள் கொள்ளமுடியும். இங்கே நாட்டுப்புறவியல் அறிஞர் தே.லூர்து "தமிழர்களின் தொன்மத்தை (Myth) நான் தேடி அலைந்தேன். அத்தொன்மம் தேவேந்திரகுல மக்களிடம் காணப்படுவதைக் கண்டு வியந்தேன். இந்த மக்களின் தலைவனாம் வேந்தன் (இந்திரன்) தான் நீரைக் கண்டுபிடித்தான் (ஆறு) நெல்லை பூமிக்கு முதன் முதலில் கொண்டு வந்தான். நாகரிகம் கண்டான். அரசைத் தோற்று வித்தான். இந்த நதிக்கரை நாகரிகத்தில்தான் குடும்பம் எனும் அமைப்புத் தோன்றியது. இதை அடியொட்டிய குடும்பன் எனும் சாதிப்பெயர் இவர்களிடம் தானே இருக்கிறது"[4] என்று வியந்து பேசியதை இங்கே குறிப்பிட விரும்புகின்றேன்.

உலகில் முதலில் தோன்றிய தொழில் வேளாண்மை ஆகும். இதே போன்று உலகில் முதலில் தோன்றிய இலக்கியமும் வேளாண்மை இலக்கியமே. உலகில் தோன்றிய முதல் நாகரிகம் சுமேரிய நாகரிகம் என்று சொல்லப்படுகின்றது. இது வேளாளர் நாகரிகமே. தமிழுக்கும் சுமேரிய நாகரிக மக்களுக்கும் நிறையத் தொடர்புண்டு. கி.மு. 2500க்கு முன்பு தோன்றிய சுமேரிய நாகரிகத்தின் கடவுள் ஏண்டன் (Yandan) என

அழைக்கப்படுகின்றான். இதே காலச்கட்டத்தில் தமிழகத்தின் மருத நிலக் கடவுள் வேந்தன் (Vandan) என்று அழைக்கப்படுகின்றான். Yandan-Vandan இரண்டும் தொடர்புடைய சொற்களே ஆகும்.[5] என்று குறிப்பிடும் அறிஞர் கி.இராசா அவர்களின் கருத்து நினைக்கத்தக்கது.

மருத நிலம் என்றால் என்னவென்று பார்த்தால் ஆறும் ஆறு சார்ந்த நீர் நிறைந்த பகுதிகள் ஆகும். தமிழ் நாட்டினுடைய நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று பாகுபாடு செய்து ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வத்தை நம் முன்னோர்கள் உருவாக்கியிருந்தார்கள். நெய்தல் நிலத்துக்கு வருணனையும் காடுறை உலகமாகிய முல்லைக்கு மாயோனையும், மலை நிலமாகிய குறிஞ்சிக்குச் சேயோனையும் வகுத்தது போல, மருதநிலத்துக்கு இந்திரனைத் தலைவனாகக் கருதி நம்முடைய முன்னோர்கள் வழிபாடு செய்து வந்திருக்கிறார்கள். **''வேந்தன்மேய தீம்புனல் உலகம்''** என்று இதனைத் தொல்காப்பியர் நெறிப்படுத்தித் தருவார். இந்திரன் தலைவனாக அமையும் ஆறுசார்ந்த நிலம் தீம்புனல் என்று ஏன் அழைக்கப்பட்டது என்றால் உப்பு நீராகிய கடல் நீரை நெய்தல் நிலம் என்று கொண்டதால் நல்ல நீரைக் கொண்டிருக்கிற மருத நிலத்துக்குத் தீம்புனல் உலகம் என்று பெயரிட்டார்கள் நமது முன்னோர்கள் என்று அறிகிறோம். இந்தத் தீம்புனல் உலகத்தின் தலைவன்தான் வேந்தன் அதாவது மழைக்கடவுளான இந்திரன்."[6] ஒரு வகையில் இந்த வேந்தன் மருதநில மக்களின் முன்னோன்தான் என்பதை நாம் அறிந்து வைத்திருக்கின்றோம். இப்படி சங்க காலத்தில் மருத நிலத்தில் தோன்றிய வேந்தன் வழிபாடு அப்படியே வளமை வழிபாடாகப் பள்ளு இலக்கியம் வரை தொடர்வதையே

**"காவுக்கு இறைவனாகும் இந்திரனை"**
**(முக்கூடற்பள்ளு)**

**"குரிசி இந்திரனை வாழ்த்தியிருகை**
**குவித்து வணங்கிப் போற்றிப் பணிந்து"**
**(எட்டையபுரப்பள்ளு, பாடல்-150)**

என்று பள்ளு நூல்களின் வழி அறிகிறோம். இந்த இந்திரன் வழிபாடு ஏன் வழக்கிழந்து போனது என்பது இந்திரன் மல்லாண்டையான வரலாறு எனும் பகுதியில் விரிவாகச்

சொல்லப்பட்டுள்ளது. மருத நிலத்தில் நிறைய இருக்கும் மருத மரங்களுக்கு மழையை வருவிக்கும் ஆற்றல் இருப்பதனால் அங்கே வனமாகக் காட்சியளிக்கும் இயற்கையை நமது முன்னோர்கள் மழையின் குறியீடாகக் கண்டு வணங்கியதில் வியப்பில்லை. ஏனென்றால் தமிழரின் தொன்மையான வழிபாடு இயற்கை வழிபாடே ஆகும் என்பதால் இது சாத்தியமும் கூட. பின்னர் முன்னோர் வழிபாடு தோன்றிய போது இயற்கையுடன் மனிதத் தோற்றத்தையும் (முன்னோரையும்) இணைக்கும் மருதக்கிழான் வழிபாடாக நிலைபெற்றது. அதுவே பின்பு மழைக்கடவுளாக அதாவது வேந்தன் ஆக அறியப்பட்டது என்று ஒரு புரிதலுக்காக இங்கே விளங்கிக் கொள்ளலாம். இப்படி அமைந்த மழை கொடுக்கும் வேந்தன் வழிபாடு ஆரியர்களின் வருகைக்கும் பின்பு வேதக்கடவுளான மழைக் கடவுள் இந்திரனுடன் தொடர்புபடுத்தி இந்திரனென்று மாறியது அவ்வளவே. வேதக்கடவுள் இந்திரனுக்கும் மருதநிலக் கடவுள் இந்திரனுக்கும் யாதொரு தொடர்புமில்லை. இப்படியாக ஒரு நிலத்துடன் தொடர்புப் படுத்தப்பட்ட இறைவனுடன் அந்த நிலம் சார்ந்து எல்லாவற்றையும் தொடர்புப் படுத்துவது மனிதனின் இயல்பு. அவனுக்கு எல்லையற்ற ஒரு ஆற்றலுடன் தன்னை இணைத்து அடையாளப்படுத்துவது ஒரு உளவியல் தேவையாய் இருந்திருக்கின்றது. ஆகவேதான் தனது பிறப்பை, தனது தொழிலை, ஏன் தன்னையே கூட இன்னானின் வழித்தோன்றல் என்று சொல்ல வைத்திருக்கின்றது. பள்ளு நூல்களில் பள்ளர்கள் தங்களைத் தேவேந்திரப் பள்ளன், தேவேந்திர குலத்தில் உதித்தவர் என்று கூறிக் கொள்வது இதனையொட்டியதுதான். காட்டாக,

> **"இந்திரன் குலத்தோன்றியே வந்தநாள் முதலாகவே"**
> ***(கட்டிமகிபன் பள்ளு, பா.14)***

> **"தேவேந்திரப் பள்ளனும் நான்"**
> ***(வையாபுரிப்பள்ளு, பா.49)***

என்பது போன்ற அடையாளங்கள் பள்ளு நூலில் காணப்படுகின்றன. இது போன்ற பண்பாட்டு அடையாளங்களை ஒரு சமூகம் ஏன் தொடர்ந்து உருவாக்குகிறது என்றால் அதுதான் இவர்களை இந்த மண்ணுடன் அடையாளப்படுத்துகிறது என்று சொல்லப்படுகின்றது. இங்கே இது போன்ற தொன்மங்கள் ஏன் தோன்றுகின்றன என்பதற்கான விளக்கங்களை அறிதல் அவசியம்.

## தொன்மம் பொருள் விளக்கம்

ஓர் இனம் காலங்காலமாக இந்நிலவுலகில் வாழ்ந்ததினால் உருவாகிய பண்பாட்டின் விளைவால் தொன்மங்கள் தோன்றின. எனவே பழங்கதைகளாம் தொன்மங்கள் கூட்டுக் கற்பனையாலும், கூட்டு அனுபவத்தாலும் கிளர்ந்து எழுந்தவை. இவை ஒரு நாளில் உருவாகியவை அல்ல; காலத்தின் கோலத்தினால் இக்கதைகள் கருவாகி வளருகின்றன.

தொன்மங்கள் பல ஆண்டுகள் பயின்றுவரினும், பலரால் புடம் போட்டுத் தூய்மைப் படுத்தப்படினும் இன்றுவரை பல்லோரின் சக்திவாய்ந்த கூட்டுக்கற்பனையால் வளர்ச்சி அடைந்திருப்பதைக் காண்கின்றோம்.[7] இதிலிருந்து ஒவ்வொரு சமூகமும் தனது பண்பாட்டுத் தலைவனைத் தொன்மங்களாக்கிக் கொள்கின்றது என்பதைத் தெரியலாம். மள்ளர் சமூகமும் தனது மூதாதையனைத் தொன்மமாக்கி அதைத் தமது பண்பாட்டின் விளக்கப் பொருளாக்கி வைத்துள்ளது எனலாம். ஆமாம் மருதநிலப் பண்பாட்டினர் என்ற பண்பாட்டு விளக்கம், வேந்தன் மரபினர் என்ற பண்பாட்டு விளக்கம், நெல்லின் மக்கள் என்ற பண்பாட்டு விளக்கம், ஏருடன் பிறந்தவர்கள் என்ற பண்பாட்டு விளக்கம், செந்நெல் முதுகுடியினர் என்ற பண்பாட்டு விளக்கம், சேற்றுக்கால் செல்வர்கள் என்ற பண்பாட்டு விளக்கம், தேவேந்திர குல வேளாளர், இந்திர சாதியார் என்ற பண்பாட்டு விளக்கமெல்லாம் இந்தத் தொன்ம உறவினால் வரும் பண்பாட்டு விளக்கமென்றே சொல்ல முடியும். இதை இவர்களுக்கு மறுப்பதற்கு யாருக்கும் உரிமை இருக்கப் போவதில்லை. காரணம் வேளாண் பண்பாடு இவர்களின் வாழ்வின் உயிர் மூச்சாக அமைவதால்.

இவ்வாறு தோன்றும் தொன்மவியலை ஏதோ பகற்கனவில் உருவான கற்பனை என எண்ணுதல் தவறு; உண்மையின் அடிப்படையிலேயே தொன்மங்கள் உயிர்த்தெழுகின்றன. மனிதனின் உளப்பாங்கு தரும் உருவகங்களாகத் தொன்மங்களை ஏற்றுக் கொள்ளலாம். மனித இயற்கையைப் படிப்பதும் தொன்மத்தைப் படிப்பதும் ஒன்றுதான். நிறைவேற்றிக் கொள்ள இயலாத ஆசைகளும் தொன்மங்களாக மாறுவதுண்டு. ஆதலின் கனவுகளோடு தொன்மங்களை ஒப்பிடலாம். கனவு தனி மனிதனுடையது; தொன்மம் குறிப்பிடத்தக்க சமுதாயக்

கனவாகும்[8] என்ற கருத்தின்படிப் பார்த்தால் நெல் தோற்றம் பற்றிய கதைகள் தேவேந்திரர்களின் பூர்வீகத்துடன் இன்றைய பண்பாட்டினை இணைக்கும் ஒரு சமூகத்தின் கனவு என்று நாம் விளங்கிக் கொள்ள முடியும்.

## நெல்லின் தோற்றக் கதைகள்

நெல்லின் தோற்றத்துடன், தமது சமூகத் தோற்றத்தையும் இணைத்து "தேவேந்திரன் கதை" "நெல்லின் தோற்றக் கதைகள்" என்ற பெயரில் நூற்றுக்கணக்கான தொன்மங்கள் இம்மக்களிடையே வழக்கிலிருக்கின்றன. அவற்றில் ஒரு சில கதைகளை வருமாறு காணலாம்.

## தேவேந்திரன் தோன்றிய கதை

ஈஸ்வரனின் வியர்வை ஒரு வல்லைக் கொடியில் விழுகிறது. அது ஒரு குழந்தையாக வளர்கின்றது. இக்குழந்தையை வளர்க்க ஈஸ்வரன் ஒரு பசுமாட்டினைத் திட்டிக்கின்றார். பசுமாடு தானே பால் சொறிந்து அக்குழந்தையை வளர்க்கிறது. ஈஸ்வரன் அது தனது குழந்தை என்பதால் அடிக்கடி வந்து பார்த்துச் செல்கின்றார். ஒருமுறை இவன் வீட்டில் கஞ்சி குடிக்கிறார். அக்கஞ்சியில் "நெல்" அரிசிச்சோறு இருக்கிறது. இதை அறிந்த சிவன் இது சுவையாக இருக்கிறது. அதைப் பயிரிடு நான் காப்பாற்றுகின்றேன் என்று சொல்லி, மேலோகத்திலிருந்து நிறைய நெல்வகைகளையும், மாடுகளையும் சிவனின் உதவியால் பெற்று வந்து பூலோகத்தில் பயிரிடுகின்றான். பின்பு தேவலோகக் கன்னிகள் இருவரைப் பூமிக்கு வரவழைத்துத் திருமணம் செய்து கொண்டு பூமியிலேயே தங்கிவிடுகின்றான் என்று சொல்கிறது இக்கதை[9].

## தேவேந்திரன் கழியன் கதை

பார்வதியும் சிவனும் உலகைச் சுற்றிப் பார்க்கையில் பார்வதிக்கு வேர்க்கிறது. வியர்வையைத் துடைத்துப் பார்வதி கீழே எறிகிறாள். அவ்வியர்வை குளத்திலுள்ள வல்லைக் கொடியில் விழ அது குழந்தையாகிறது. அதற்குத் தேவேந்திரன் கழியன் என்று பெயரிட்டுப் பார்வதி வளர்க்கிறாள். இந்தக் குழந்தை மேலோகத்தில் வயல் செய்து நெல்லைப் பயிரிடுகிறது. இந்த நெல்லின் அரிசியால் செய்த சாதத்தைப் பார்வதி சிவனுக்குப் பரிமாறுகிறாள். சிவனும் சாப்பிட்டுவிட்டுப்

பாராட்டுகிறார். கழியனைப் பாராட்டி நீ பூலோகம் சென்று நெல் பயிரிட்டு மக்களைக் காப்பாற்று என்று இரண்டு தேவலோகக் கன்னிகளையும் கூடவே அனுப்பி வைக்கின்றார். இவன் வழிவந்தவர்களே இன்றைய தேவேந்திரர்கள்.[10]

## இந்திரனின் மகன்

இந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிறந்த தேவேந்திரன் இந்திரன் துப்பிய எச்சிலில் வயல் செய்து நெல் நட்டதாகவும் பின்பு அந்த நெல்லைப் பூமிக்குக் கொண்டு வந்து வேளாண்மை செய்து நெல் வேளாண்மையைப் பரப்பியதாகவும் சொல்லப்படுகிறது.[11]

## பார்வதி மகன் வல்லவன் கதை

பார்வதிக்கும் பரமசிவனுக்கும் பிறந்த வல்லவன் என்ற குழந்தையை இந்திரனும் இந்திராணியும் எடுத்து வளர்க்கின்றனர். அவன் வளர்ந்து பெரியவன் ஆகி இந்திரனிடம் வெள்ளை யானையையும், பார்வதியிடம் கங்கை நீரையும், எமனிடம் எருமைகளையும், பலராமனிடம் கலப்பையையும் பெற்றுப் பூலோகம் வந்து நெல் பயிரிடுகின்றான். மூவேந்தர் நாடுகளும் இவனால் பயன்பட்டன. மூன்று ராசாக்களின் மகளையும் திருமணம் செய்து கொண்டான். ஒவ்வொரு மனைவிக்கும் நான்கு குழந்தைகள் பிறந்தன. அவர்களே இன்றைய தேவேந்திரர்கள் ஆவர்.[12]

## பூலோக தேவேந்திரன்கழியன் கதை

பார்வதி, பரமசிவனின் மகன் கழியுன் பூலோகம் வந்து நெல் மற்றும் நஞ்சை வேளாண்மை செய்து வந்தான். ஒரு நாள் உலகம் அழிகிறது. கழியனின் வழிவந்த மகனும் அவன் மனைவியும் சுரைக் குடுக்கைக்குள் நுழைந்து தப்பி, பின்பு உலகம் உய்ய வேளாண் செய்து தருகின்றனர்.[13]

## வடிவேலுக்குடும்பன் கதை

இந்திரனின் வியர்வை ஒரு செடியில் விழுந்துவிட அதில் ஒரு குழந்தை உருவாகிறது. அவனே பள்ளர்களின் மூதாதை ஆவான்.[14]

### நெல் வந்த கதை

உணவுத் தேவைக்காக மக்கள் இந்திரனிடம் முறையிட இந்திரன் பெண்களுக்கு ஒரு போட்டி வைத்தான். நீண்ட முடியில் நெல் மணிகளை வரிசையாகக் கோர்ப்பது அந்தப் போட்டி. இப்போட்டியில் ஒரு பெண் வென்றாள். அவளுக்கு நெல் மணிகளையும் அவளின் கணவனுக்குத் தங்க ஏர்க்கலப்பையும், எருதுகளையும் கொடுத்தனுப்பினான். இவர்களின் வழிவந்தவர்களே இன்றைய தேவேந்திரர்கள்.[15]

### குளத்துப்பள்ளன்

நெல் கோர்ப்பது போன்று நீருக்குள் மூழ்கும் போட்டி ஆண்களுக்கு இந்திரன் தனியே நடத்தினான். இதில் வெற்றிபெற்ற பள்ளனுக்கு ஒரு மோதிரம் பரிசாக அளித்தான் இந்திரன். அத்துடன் மீனையும் பரிசாக அளித்தான். மீனின் ருசியில் இவன் மூழ்கியிருக்க இவனின் கலப்பை பறிபோனது. அதிலிருந்து இவன் பள்ளன் ஆனான்.[16]

### குடும்பன் தோற்றக்கதை

ஈஸ்வரன், ஈஸ்வரியிடம் உலகமக்கள் எல்லாம் பணம், தங்கம் என்று கேட்கையில் இவர்கள் உழுவதற்கு வயலும், நீர் நிறைந்த குளங்களும் ஆறுகளும் வேண்டிப் பெற்றனர்.[17]

### நெல் வந்த கதை

பார்வதி, பரமசிவன் மகனான தேவேந்திரன் தனது தாய் குளித்துவிட்ட நீரில் கழனி செய்து விளையாடும் போது ஒரு அன்னப்பச்சி அதில் ஒரு நெல் மணியைக் கக்கிவிட்டுச் செல்கிறது. அது வளர்கிறது. பார்வதி இதுதான் நெல் என்று அடையாளம் காட்டி, நீ பூலோகம் சென்று நெல் வேளாண்மை செய் என்று அனுப்பியதாக இந்தக் கதை பேசுகிறது.[18]

### பள்ளர் தோற்றம்

ஒரு காலத்தில் கடவுளுக்கு அரசனான தேவேந்திரன் நீரில் வளர்ந்திருந்த செடி ஒன்றில் விழுந்து விட்டதாகவும் உடனே அதிலிருந்து ஒரு குழந்தை தோன்றியதாகவும் அதுவே பள்ளரின் மூதாதையானது என்றும் ஒரு கதை சொல்கிறது.[19]

இங்கே இடம்பெறும் தொன்மங்கள் தரும் செய்தி என்னவென்று பார்த்தால் அது நெல் வேளாண்மையை உண்டாக்கியது, நீர் நிலைகளைச் சரி செய்தது, கழனிகளை உண்டாக்கியது மள்ளர்கள் தான் என்பது ஆகும். "தொன்மம் என்பது குறிப்பிட்ட இனத்தின் மரபு வழியாக உடலியல்-உளவியல் கூறுகளில் படிந்து கிடக்கும் உயிர்ச்சத்தான மூலப்படிவம் (Proto Plastic Pattern) இது என்கின்றார் யுங். அவர் மேலும் இதனையே தனிமனிதன் திரும்பத்திரும்பவும் ஏதாவது ஒரு வடிவத்தில், சூழலில் வெளிப்படுத்துகிறான்; இது கூட்டு நனவிலி மனத்தோடு கூடிய அவனுடைய இயல்பான பங்களிப்பே ஆகும் என்பது யுங் கருத்து".[20] தொன்மம் என்பது வரலாற்றுக்கு முந்திய காலந்தொட்டு மனிதக்குலத்தின் மூளையில் பதிந்த பண்பாட்டுத் தடயங்களின் சாரம், மரபுவழியாகத் தொடர்ந்து வரும் கூட்டு நனவிலி மனத்தின் வடிவம். மனிதகுலம் அதன் வெவ்வேறு காலக்கட்டங்களில் சந்தித்த ஒரே வகை மாதிரியான எண்ணற்ற அனுபவங்களின் உளவியல் நிலையிலான எச்சம், குழூக்களின் பொதுவான குறியீடுகளாகத் தொன்மங்களாக வெளிப்படுத்திக் கொள்கின்றன[21] என்ற விளக்கத்தின்படி நெல்லின் தோற்றக் கதைகள் வரலாற்றுக் காலந்தொட்டு மள்ளர் சமூகத்திடையே நிலைபெற்றுவிட்ட வேளாண் பண்பாட்டுத் தடத்தின் சாரமே என்று நாம் இங்கு விளங்கிக் கொள்ள முடியும். இத்தகைய பதிவுகள் இவர்களின் தொன்மங்களில் மட்டுமல்ல இவர்களின் வாழ்வியற் சடங்குகள், இவர்களின் சாதிப்பெயர்கள், இவர்கள் செய்யும் தொழில்கள், இவர்கள் வழிபடும் தெய்வங்கள் என்று எல்லையற்று விரிந்து கிடக்கின்றன. அவைகளில் சில:

### சடங்கியல் வாழ்வில் நெல் பெறும் இடம்

இம்மக்களின் முதன்மை வேளாண் தானியமான நெல் இவர்களின் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு சடங்குகளில் இடம் பெறுகின்றது. முற்காலத்தில் குழந்தைகளுக்குக் காது குத்துவதே நெல்மணியால்தான் இம்மக்கள் செய்வராம். பெண் பூப்புக்கு வந்தால் அவளிருக்கும் குடிசைக்குள் நிறை நாழி நெல் வைக்கும் வழக்கம் இன்றும் காணப்படுகின்றது. பூப்புக்கு வந்த பெண்ணை நெல் நிரப்பிய கூடையில் அமரச் செய்து அவளைத் தாய்மாமன் கூடையுடன் மூன்றுமுறை தூக்கித் தலையில்

பானையில் நெல் நிரப்பி அதனுள் நீரூற்றி வைப்பதும் உண்டு. இறப்புச் சடங்கில் இறந்தவரின் பிணத்தருகே நிறை மரக்கால் நெல் வைப்பதும், இறந்து பட்டவரின் மைத்துனர் உறவுடையவர்கள் கோடித்துணியும் நிறை மரக்கால் நெல்லும் கொண்டு வருவதும் இன்றும் உள்ளது. இந்த நெல்லையே கருமாதிக்கு ஆக்கிப் போடப் பயன்படுத்துவதும் காணப்படுகின்றது. மேலும், இறந்தவரின் குழிமேட்டில் பாலூற்றும் சடங்கில் நெல்லையே விதைக்கின்றனர். இவ்வாறு இம்மக்களின் வாழ்வியல் சடங்குகள் அனைத்திலும் நெல் வேளாண் பண்பாடு சார்ந்து வருவதைக் காணமுடியும்.

## வழிபாட்டுச் சடங்குகளில் நெல் சார்ந்த கலைப் பொருட்கள்

நெல் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்ட இம்மக்கள் நெல் அறுவடைக்கு முன்பு 'நாட்கதிரறுத்தல்' எனும் பெயரில் நல்ல கதிர்களை அறுத்து இறைவனுக்குப் படைத்து வழிபாடு செய்கின்றனர். இச்சடங்கை பள்ளு நூல்களும் குறிப்பிடுகின்றன. நாட்கதிர் என்றால் நல்ல நாளிலே முதன்முதலில் அறுத்த கதிர் என்பதாகும். இதனை வையாபுரிப்பள்ளு,

**"நெல் விளைந்தவுடன் பள்ளரெல்லாம்**
**முழங்கிக் களிப்பேறி**
**விளைந்து மல்லாண்டப்பனுக்கு**
**இளந்தையாடு வெட்டி**
**பொங்கலிட்டு நாட்கதிருங்கொய்துமே**
**அலகுகதிர்க் கோட்டை வைத்து"**

என்று குறிப்பிடும். இங்குக் குறிக்கப்படும் அலகு கதிர் என்பது நெற்கதிர் என்பதாகும். கோட்டை என்பது நாட்கதிராகக் கொய்யப்பட்ட அலகுக் கதிர்களை இறைவனுக்குக் காணிக்கையாக்குதல் ஆகும். இதனடிப்படையில் மதுரை அழகர் கோயில், பழனி முருகன் கோயில், வீரபாண்டி மாரியம்மன் கோயில் என்றவாறு பல இடங்களில் வேளாண் தானியங்களை இறைவனுக்குக் காணிக்கையாக்குவதைப் பார்க்கமுடியும்.

இவ்வாறு பள்ளு நூல்களில் குறிக்கப்படும் நாட்கதிர் கொய்து இறைவனுக்குப் படைக்கும் வழிபாடு இன்றும்

இம்மக்களிடையே வழக்கிலிருக்கின்றது. இறைவனுக்குப் படைக்கும் நாட்கதிர்களைப் பலவகையான கலைப் பொருட்களாகச் செய்து படைக்கின்ற பழக்கம் இருக்கின்றது. இக்கலைப் பொருட்கள் குறித்து வருமாறு காண்போம்:

### அலகு கதிர்

வயலில் நெல் விளைந்தவுடன் அறுவடைக்கு முன்பு கொத்துக்காரர் ஒரு நல்ல நாளில் வயலில் நாட்கதிர் கொய்து அதனைப் பல கலை வடிவங்களில் செய்து கோயில்களில் காணிக்கையாக்குவதை அலகுகதிர் என்கின்றனர். இதனையே கண்ணாடிக் கதிர், கோமாளிக் கதிரென்ற பெயரிலும் அழைக்கின்றனர். இதனைக் கோயில்களில் கட்டி விடுவதை ஒரு விழாவாகவும் பழனி வட்டாரங்களில் நடத்துகின்றனர். அலகு கதிரைப் பெரும்பாலும் கொத்துக்காரர்களே செய்கின்றார்கள். கொத்துக்காரர் என்றால் நெல் வேளாண்மைக்குரிய ஆட்களைத் திரட்டி வயல்களில் வேலை வாங்குபவர் என்று பெயர். ஒவ்வொரு வயல் அறுவடையின் போதும் இறைவனுக்கென்று ஒரு அலகுகதிர் கட்டப்படும். இதனைக் கட்டுவதற்கான கூலியை வயல் உரிமையாளரிடமிருந்தே கொத்துக்காரர் பெறுகின்றார். குறைந்த அளவு 4 வல்லம் நெல் கூலியாகக் கிடைக்குமென்கின்றனர். பணமும் பெறுவதுண்டு. அலகுகதிர் செய்தல் என்பது நெல் மணிகளுடன் இருக்கும் கதிரின் தாளினைச் சடை பின்னுவது போன்றோ கயிறு திரிப்பது போன்றோ திரித்து மணிமகுடம் போன்றோ, பெண்கள் அணியும் காதணி போன்றோ, தேர்போன்றோ, வேல் போன்றோ கட்டிவிடுவது ஆகும். ஈரோடு மாவட்டம் கொடிமுடி என்ற ஊரில் எழுந்தருளியுள்ள அருள்மிகு மகுடேஸ்வரர் சுவாமி சன்னதிக்கு ஒவ்வொரு ஆண்டும் அவ்வூரினைச் சுற்றியுள்ள கிராமத்திலுள்ள விவசாயிகளால் நெல் மணிமகுடம் கட்டப்பட்டு வருகிறது என்பது இங்கு ஒரு கூடுதல் தகவலாக அமைகிறது.

அலகு கதிர்களைக் கோவில்களில் கட்டிவிடுவது மட்டுமல்லாமல் இம்மக்கள் தங்களின் வீடுகளிலும் தங்களின் பண்பாட்டுக் குறியீடாகக் கருதிக் கட்டித் தொங்கவிட்டுள்ளனர். பேரூர் பட்டீஸ்வரர் கோயிலில் ஈஸ்வரனுக்கு நெற்கதிரால் ஆன கிரீடம் நெல் அறுவடைக் காலங்களில் இம்மக்களால் செய்து காணிக்கையாக்கப்படுகின்றது. இக்கிரீடத்தைக் காண்கையில்

மருதநிலத் தலைவன் தனது நிலத்தில் விளைந்த நெல்லை வேளாண் கள வெற்றியாகக் கருதித் தனது தலையில் சூடிய நெற்கதிரால் ஆன மகுடமே பின்பு நிலங்களைப் போரில் வெற்றி பெறுகையில் சூடும் மணிமகுடமாக மாறியதோ என்று கருதத் தோன்றுகிறது.

இவ்வாறு மகுட வடிவில் செய்யப்படும் அலகு கதிரில் ஒரு மூட்டை நெல் வரும் அளவில்கூட கதிர்களைக் கட்டுகின்றனர். இதல்லாமல் வட்ட வடிவிலும் நீளவடிவிலும் பல அலகு கதிர்கள் செய்யப்படுகின்றன. அறுவடை முடிந்த பின்னர்ப் பல்வேறு வயல்களிலிருந்து செய்யப்பட்ட அலகு கதிர்களை ஒரு மூங்கிலில் தோரணமாகக் கட்டி மேள, தாளத்துடன் எடுத்து வந்து கோயில்களில் வைக்கின்றனர். நாட்கதிரிலிருந்து எடுக்கப்பட்ட அரிசியிலிருந்து பொங்கல் வைத்து ஆடு வெட்டி வழிபாடு செய்கின்றனர். இவ்வழக்கம் பழனி மற்றும் பொள்ளாச்சிப் பகுதிகளில் இன்னும் கடைப்பிடிக்கப்படுகின்றது. இதல்லாமல் பழனி கோயில்களில் நெல்லையே காணிக்கையாக்குவதையும் காணமுடியும்.

மேற்கண்டவாறு விதவிதமான கலை வடிவங்களில் செய்யப்பட்டுள்ள அலகுகதிர்களின் கலை நுட்பங்கள் காண்போரை வியக்கவைக்கும் அழகுடையது. பல அலகுகதிர்கள் பெண்கள் அணியும் நெற்றியணி, காதணி, லோலாக்கு, கழுத்தில் அணியும் முத்து மாலைகள் போன்று காணப்படுகின்றன. சீவக சிந்தாமணி கேமஞ்சரியார் இலம்பகத்தில் மருதநில வருணனையாகத் தாமரை மலர்மீது செந்நெல் கதிர் முற்றிக் கிடந்தது அரங்கிலே ஆடும் ஆடல் மகளிரின் நெற்றியில் சூட்டியுள்ள தலைக்கோலம் எனும் அணிகலன் போன்று இருந்தது என்று குறிக்கப்படுவதை நினைக்க (பாடல் 1442) இன்று பெண்கள் அணிந்துள்ள பல அணிகலன்களின் வடிவம் நெல்கதிர்களை ஒன்று சேர்ப்பதால் உண்டாகும் வடிவழகை ஒத்திருக்கக் காணலாம்.

அலகு கதிரை ஊரின் முற்றத்திலுள்ள மரங்களில் வரிசையாகக் கட்டித் தொங்கவிட்டிருப்பதையும் காணமுடியும். இவ்வாறு செய்வதால் ஊர் மந்தையில் கூடி இருப்போர் கண்டு களிப்பதற்கும் குருவிகள், புறாக்கள் போன்ற பறவைகள் இரை உண்ணவும் அலகு கதிர் பயன்படுவதாகச் சொல்கின்றனர்.

மதுரை மாவட்டத்தில் பச்சைக் குச்சியில் குடை போன்று செய்து அதன் மீது நெற்கதிர்களைச் சுற்றி முத்துக்குடை எனும் பெயரில் கோயில்களுக்குக் காணிக்கையாக்குகின்றனர். விழாக்காலங்களில் இந்நெல்லை பொங்கல் வைப்பதற்கும் மாவிளக்கு எடுப்பதற்கும் பயன்படுத்துகின்றனர். நெல் ராஜ வெள்ளாமை என்பதாலும் தானியங்களுக்கெல்லாம் ராஜா நெல் என்பதாலும் கோயில்களில் நெல்லைக் காணிக்கையாக்குதல் சிறப்பானதாகக் கருதப்படுகின்றது. மேலும் இந்த முத்துக்குடை எனும் கலைப்பொருளை முத்துத் தோரணம் எனும் வகையில் கோயில் விழாவின் போது தெருக்களில் கட்டுவதும் உண்டு. தெருக்களில் நெல் உதிர்ந்து சீரழிந்து கிடப்பது போன்று நெல் வேளாண்மையும் மிகுதியாகும் என்பது நம்பிக்கை. மதுரை மாவட்டங்களில் இவ் அலகு கதிர்களைக் கட்டுபவர் மடையன் ஆவார். இவர் நெல் வேளாண்மைக்குத் தண்ணீர் பாய்ச்சும் பணியினைச் செய்பவர் ஆவார்.

### நெற்கரகம்

பழனிப் பகுதியில் வாழும் இம்மக்கள் பழனி முருகனுக்கு நெற்கரம் எடுத்து வழிபடுகின்றனர். நீர் நிரம்பிய குடத்தின் மேல் நெற்கதிர்களை அழகாகச் சுற்றி வைத்து அதன் மேல் வண்ண நூலால் கட்டுகின்றனர். இதன் பின்னர் நெற்கரகமும் நெல்லும் மேள தாளங்களுடன் ஊர்வலமாக எடுத்து வரப்பட்டு முருகன் கோயிலில் காணிக்கையாக்கப்படுகின்றன.

### முத்து ஆரத்தி

புதிய திருமணத் தம்பதியரை ஆரத்தி எடுத்து வரவேற்பது தமிழர் வழக்கம். அவ்வகையில் இம்மக்களிடம் உள்ள ஓர் ஆரத்திவகை முத்து ஆரத்தி ஆகும். இது பித்தளைக் குடத்தின் மீது மாவிளக்கைத் தடவி அதன் மீது நெல்லையும் குண்டு மணியையும் வரிசையாகப் பதித்து வைப்பது ஆகும். இவ்வாறு தயார் செய்யப்படும் ஆரத்தி முத்து ஆரத்தி எனப்படும். இந்த ஆரத்தி எடுக்கும் பெண்ணுக்கு மணமகன் குறைந்தது ரூ.10 ஆவது கொடுத்தாக வேண்டுமாம். இந்த வகை ஆரத்தி இம்மக்களின் வேளாண் பண்பாட்டைக் குறியீடாக்கிக் காட்டுவதால் இதனை எடுப்பதும் இதனை எதிர் கொள்வதும் சிறந்ததாகக் கருதப்படுகின்றது.

### அலகு கதிர் காணிக்கை நோக்கம்

கோயில்களில் ‘அலகுகதிர்’ செய்து காணிக்கையாக்குவதால் அடுத்த ஆண்டும் இதே போன்று வேளாண் சிறக்குமென்று நம்புகின்றார்கள். மேலும் வேளாண் விளைச்சல் இறைவனின் அருளால் உண்டாவது என்று நம்புவதால் இறைவனுக்கு வேளாண்மையின் முதற் தானியத்தைக் காணிக்கை யாக்குகின்றனர். இறைவனுக்கு அலகுகதிர்காணிக்கை செய்யாவிடில் விளைச்சல் பெருகாது என்றும் நம்புகின்றனர். இந்நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படும் இவ் அலகுகதிர் வழிபாடு நெல் வேளாண் சமூகப் பண்பாட்டுடன் தொடர்புடைய வழிபாட்டுச் சடங்காக அமைவதும் இங்குக் கருதத்தக்கது.

### மங்கலவாழ்த்துப் பாடலில் வேளாண் பண்பாட்டுப் பெருமை

இம்மக்களின் திருமணச் சடங்குப்பாடலில் கூட இவர்கள் நெல் கண்டு பிடித்தது; கலப்பை கண்டு பிடித்தது; எருதுகள் கொண்டு வந்தது என்பது போன்ற வேளாண் பண்பாட்டுப் பெருமைகள் பாடல் வடிவில் பாடப்படுகின்றன. இப்பாடல் வருமாறு.

“தேவாதி தேவர்களான
தேவேந்திரர் சாதியர்
. . . . . . . . . . . . . . . . . .
சேத்துக்கால் செல்வரான
செந்நெல் முடிக்காவலரான
பள்ளனும் பள்ளியும்
காலினால் உழப்பிய செந்நெல்லை
தேவர்கள் பாலால் அமிர்தம் பொழிவராம்
கொட்டுடன் கோல மேழி கலப்பை
நெட்டுடன் பிரம்பு சங்கிலி
நேரான கால் கயிருடன்
மொட்டை வெள்ளை யானை ஏறி
தெய்வ குலத்தில் தேவரிடத்தில் (மேலுல்கம்)
இஞ்சி எலுமிச்சை இனிய பலாவும்
வெள்ளரிக் கொடியும் வேளா மரமும்
சங்கனமும் கமுகும் சாதிலிங்கமும்

பூந்தாமரையும் 4448 நெல்விதையும்
யானைவால் மயிரினால்
மூக்கனாங் கயிறு கொண்டு
கோர்த்து நூலேணி வழியாக
பூலோகம் இறங்கி
ஓடையைக் குறுக்காட்டி
ஏரிகள் போட்டு
வாகான பூமியை வயல்களாகச்
சேர்த்து உழுது விதைத்து
வேளாண்மை செய்து
. . . . . . . . . . . . . . . . . .”[22]

என்று தொடரும் இந்த மணவாழ்த்துப் பாடல் தரும் செய்தியும் முன்பு நெல்லின் தோற்றக்கதை முன்வைக்கும் வேளாண் பண்பாட்டின் அடையாளத்துடனான செய்தியும் ஒன்றாகவே அமைவதைப் பார்க்கின்றோம். இப்படியாக இவர்களின் எல்லா அசைவுகளிலும் நெல் வேளாண்மை குறித்த பண்பாட்டு அடையாளங்கள் நீக்கமற ஏன் வாழ்வின் நிலைத்த அடையாளமாக ஆகிவிட்டிருப்பதால்தானோ என்னவோ? பழனிச் செப்புப் பட்டயம் முத்தாய்ப்பாக

“குக வேலருளால் குடும்பன் தழைக்க
சிவனருளாலே திருநீறணிந்து
யெல்லாவுலகும் பிறவியுள்ளவும்
தெள்ளிமையாத செந்நெல்லை படைத்தோர்
சேத்துக்கால்ச் செல்வரான
செந்நெல் முடிகாவலரான
முத்தளக்கும் கையாதிபரான”[23]

என்று பட்டம் கொடுத்துச் சிறப்பித்திருக்கின்றது எனலாம்.

இவ்வகையில் நெல் வேளாண்மை சார்ந்த பண்பாட்டுத் தடயங்கள் இம்மக்களின் தொன்மக் கதைகள் முதல் வாழ்வியல் சடங்குகள் வரை திரும்பத்திரும்ப ஏன் இடம்பெறுகின்றன என்று பார்த்தால் அது தனக்கான பண்பாட்டு அடையாளத்தைத் தக்கவைத்துக் கொள்வதற்காகவே என்றே கருத முடியும். ஏன் ஒரே விசயம் பல்வேறு வடிவங்களில் பேசப்படுகின்றன என்பதற்கு “ஒரு முரண்பாட்டின் தீர்வினைத்தேடும் இசைத்தல் முயற்சிகளாகத்தான் ஒத்த தன்மையுடைய பல கதைகள்

விளங்குகின்றன என்று லெவிஸ்ட்ராஸ் கூறுவது"[24] இங்கு விளக்கமாக அமையும். தங்களின் சமூகப் பண்பாட்டு அடையாளத்தை மீண்டும் மீண்டும் தொன்மங்களில், வழக்காறுகளில் இசைத்தல் (பேசுதல்) மூலம் மள்ளர் சமூகம் தனக்கான பண்பாட்டு அடையாளத்தைக் காக்கத் தொடர்ந்து போராடி வருகிறது என்ற செய்தியைப் பெறலாம்.

## அடிக்குறிப்புகள்

1. தேவ ஆசிர்வாதம், மூவேந்தர் யார், ப.11.
2. அனுமந்தன், கே.ஆர்., தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்ட நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டு முறை, தமிழில் தங்கராஜ், பாட்டாளி முழக்கம், ஜூலை, 1993.
3. பின்னிணைப்பு, பழனிச் செப்பேடு.
4. லூர்து, தே., மள்ளர் வரலாறு மீட்டுருவாக்கம், மள்ளர் மலர், ஜூலை, 1999, ப.10.
5. இராசா.கி., ஏர்மங்கலம்-உழத்திப்பாட்டு-பள்ளு இலக்கியம் வரை, மள்ளர் மலர், ஜூன், 1999, ப.14.
6. சிற்பி பாலசுப்பிரமணியம், தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம் சார்பில் ஏற்பாடு செய்திருந்த, அறக்கட்டளைச் சொற்பொழிவில் "வேந்தன் மரபு" எனும் தலைப்பில் பேசிய உரை. (நூலாக வெளியிடப்பட உள்ளது)
7. மகாதேவன், கதிர். தொன்மம், ப.7.
8. மேலது, ப.18.
9. பின்னிணைப்பு, நெல்லின் தோற்றக்கதை, கதை எண்.1.
10. மேலது, கதை எண்.2.
11. மேலது, கதை எண்.10.
12. ஞானசேகரன், தே., மள்ளர் சமூக வரலாறு, ப.7.
13. பின்னிணைப்பு, நெல்லின் தோற்றக்கதை, கதை எண்.3.
14. மேலது, கதை எண்.5.

15. மேலது, கதை எண்.4.

16. மேலது, கதை எண்.6.

17. மேலது, கதை எண்.7.

18. மேலது, கதை எண்.9.

19. மேலது, கதை எண்.11.

20. நடராசன், தி.சு., திறனாய்வுக்கலை, ப.181.

21. மேலது, ப.181.

22. பின்னிணைப்பு, தேவேந்திரர் மங்கல வாழ்த்துப் பாடல்.

23. பின்னிணைப்பு, பழனிச்செப்பேடு.

24. முத்துமோகன், இரா., அமைப்பியல்-பின்அமைப்பியல், ப.155.

# 7. சிவன் பள்ளனான வரலாறு

*"மோட்டுப் புத்தியாலே யுங்கள்*
*கைலாச நாதர் – தானே*
*முன்னாளிற் பள்ளனான*
*முறைமை கேளாயோ"*
*(வையாபுரிப் பள்ளு, பா.224)*

*"பேரூர்ப் பள்ளனான பெருமானன்றோ"*
*(திருச்செங்கோட்டுப் பள்ளு, பா.899)*

என்று பள்ளு நூல்களில் குறிக்கப்படும் செய்தி மேலோட்டமாகப் பார்த்தால் சிவன் உழவு வேலை செய்யும் பள்ளனாக மாறி வயலில் வேலை செய்தான் என்ற செய்தியை மட்டும்தான் தரும். ஆனால் கோவை பேரூரில் இன்றும் சிவன் பள்ளனாக மாறி வயல் வேலை செய்ததை "இந்திர விழா எனும் நாற்று நடவு உற்சபம்" எனும் பெயரில் இப்பகுதியில் வாழும் தேவேந்திர குல வேளாளர்கள் நடத்தி வருகின்றனர் என்பதை நாம் பிரதிக்கு வெளியிலிருந்து தேடிக்கண்டு சொல்கையில் இது ஒரு வேளாண் வளமை வழிபாட்டுடன் தொடர்புடைய செய்தி என்பதை நாம் அறிந்துகொள்ள முடியும்.

## இந்திர விழா எனும் நாற்று நடவுத் திருவிழா

தமிழகத்திலுள்ள கோயம்புத்தூரில் பேரூர்ப் பட்டீஸ்வரர் கோவிலிலும் இதனைச் சுற்றியுள்ள புளியகுளம், செல்வபுரம் போன்ற 40க்கும் மேலான கிராமங்களிலும் ஆண்டு தோறும் ஆனி மாதத்தில் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ள மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர்கள் இந்திரவிழா எனும் (நாற்று நடவுத் திருவிழா) ஒரு விழா நடத்துகின்றனர். இவ்விழா மழை தரும் இந்திரனை வழிபடுவதாகவும், சிவன் மள்ளனாக (உழவன்) மாறி வயலில் நாற்று நடவு செய்தார் என்ற கச்சியப்ப முனிவரின் பேரூர் புராணத்தை (Myth) மறுபடியும் நடித்துக்காட்டும் விழாவாகவும்

நடைபெறுகின்றது. நான் இந்த விழாவை 1993களிலிருந்து கள ஆய்வு செய்து வருகிறேன். இவ்விழாக் குறித்து வரலாற்று அடிப்படையிலும், சமூக மானுடவியல் அடிப்படையிலும் பல தகவல்களைச் சேகரித்துள்ளேன். இங்கே ஓர் அறிமுகமாக ஒரு சில தகவல்கள் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளன.

## பள்ளுப் படலம் எனும் திருப்பேரூர்ப் புராணம்

கொங்கு நாட்டிற்குச் சுந்தரர் கி.பி.850 வாக்கில் வருகை தந்த போது இக் கோயிலுக்கும் வருகை புரிந்தார். அச்சமயம் பேரூரில் குடி கொண்டிருக்கும் பட்டீஸ்வரர் அருகிலிருக்கும் வயலில் மள்ளனாக (பள்ளராக) மாறி வேலை செய்கின்றார். பார்வதி தேவியார் பள்ளியாக மாறிக் கழனியிலே நாற்று நடுகின்றார். விநாயகக் கடவுள், முருகன் மள்ளச் சிறார்களாக மாறி வயலில் வேலை செய்கின்றனர். இதனை அறியாது கோவிலுக்குள் சென்ற சுந்தரர் அங்கே இறைவன் இல்லாததைத் தெரிந்து நந்தியிடம் வினவி, வயலில் வந்து இறைவனை வழிபட்டுச் சென்றார் என்பது பேரூர்ப் புராணம் தரும் செய்தி. இதனையே இம்மக்கள் இந்திரவிழா எனும் பெயரில் நடத்துகின்றனர். இங்கு இந்திரவிழா எனும் பெயர் ஏன் இவ்விழாவிற்குச் சூட்டப்பட்டுள்ளது என்ற கருத்து எழலாம்.

## இந்திரவிழா எனும் பெயர்க் காரணம்

இவ்விழா இரண்டு விழாவினைத் தன்னுள் கொண்டிருக்கின்றது. ஒன்று இந்திரவிழா மற்றொன்று மள்ளனாக மாறிய சிவபெருமானின் புராணக்கதையை (Ritual was the enactment of myth) மறுபடியும் நடித்துக் காட்டும் விழா. இந்திரவிழா என்பது இம்மக்கள் பண்டைக்காலம் தொட்டுத் தமது முன்னோரான வேந்தனிடம் அதாவது மருதநிலக் கடவுளிடம் மழை வேண்டியும் பயிர்வளம் வேண்டியும் வழிபடும் வளமை வழிபாடாகும். நொய்யல் ஆற்றங்கரையில் இம்மக்களால் பெரும் விமர்ச்சியாகக் கொண்டாடப்பட்ட நாற்றுநடவு எனும் இந்திரவிழா பின்னாளில் சிவனிடம் தொடர்புப் படுத்தப்பட்டுப் புராணச் சாயல் பெற்றது என்றும் கொள்ளலாம். நாற்றுநடவுத் திருவிழாவைக் காண்பதற்கு முன்பு இந்திரவிழாக் குறித்துச் சுருக்கமாகக் காண்போம்.

## இந்திர விழாவும் தேவேந்திரர்களும்

இந்திரவிழா பழங்காலத்தில் காவிரிப் பூம்பட்டினத்தில் எடுக்கப் பெற்ற தமிழர் தேசியத் திருவிழா ஆகும். அக்காலத்தில்

இந்திரன் ஒரு பொதுத் தெய்வமாகக் கருதப்பட்டு, இந்திரவிழாக் கொண்டாடப்பட்டது.

இன்று இந்திரன் என்று சொன்னவுடன் நமக்கு நினைவுக்கு வருபவன் வேதகால இலக்கியங்களில் தொடர்புடைய இந்திரன்தான். ஆனால் ஆரியர்களின் வருகை தமிழகத்தில் ஏற்படுவதற்கு முன்னமே தமிழகத்தில் மருத நில மக்களான மள்ளர்களின் (உழவர்) தெய்வமாக விளங்கியவன் இந்திரன் என்பதை நாம் நினைவுகூர வேண்டும். மருத நிலத்தின் கடவுள் இந்திரன் என்பதைத் தொல்காப்பியப் பொருளதிகாரம் அகத்திணையியலில் "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்று குறிப்பிடும். இங்குக் குறிக்கப்படும் வேந்தனே தீம்புனல் நிலமான வயலும் வயல்சார்ந்த மருத நிலத்தின் கடவுள் ஆவான். "வேத இலக்கியத்தில் குறிக்கப்படும் இந்திரனும் மழைக் கடவுளே. இதனால் ஆரியர்களின் தமிழக வருகைக்குப் பின்னர் மழைக் கடவுளான மருதநிலக் கடவுள் வேந்தனும் ஆரியர்களின் மழைக் கடவுள் இந்திரனும் ஒன்றெனக் கருதப்பட்டனர்" என்று மறைமலை அடிகள் குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது.

இதனடிப்படையில் இம்மக்களிடம் வழக்கிலிருந்த வேந்தன் வழிபாடே இன்று இந்திரவிழா எனும் நாற்று நடவுத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது என்றால் மிகையாகாது. மேலும் கோவை புளியகுளத்தில் இந்திரனுக்கென்று தனியாகக் கோயில் அமைத்து மாரியம்மன் விழா போன்று கரகம், முளைப்பாலிகை எடுத்து மழை வேண்டி இம்மக்கள் வழிபடுவதும் இங்குக் கருதத்தக்கது.

### நாற்று விடும் விழா

ஆனி மாதம் 18ஆம் நாள் தொடங்கி 27ஆம் நாள் வரை 10 நாட்கள் இவ்விழா நடைபெறும். விழாத் தொடக்க நாளன்று நாற்றுப் பரவும் (விடுதல்) சடங்கு நடைபெறுகின்றது. இதனை நாற்று விடும் விழா என்கின்றனர். பேரூர்க் கோயிலில் உள்ள இம்மக்களுக்கு உரிய தேவேந்திர மடத்தின் அருகிலுள்ள கழனியில் நெல் விதைகளைப் பரவிப் பூசை செய்து வழிபடுகின்றனர். இவ்விழாவில் கோவையில் வாழும் 4 வம்ச பட்டக்காரர்களும் 40 ஊர்களிலிருந்து பொது மக்களும் வந்து கலந்து கொள்கின்றனர். இவ்விழாவின் போது பட்டீஸ்வரர் அலங்கரிக்கப்பட்டு இம்மடத்திற்கு அழைத்துவரப்படுகிறார்.

இவ்விழாவில் ஐராவதம் எனும் யானை இந்திரனின் வாகனமாகக் கருதி அழைத்து வரப்படுகின்றது. மள்ளர்குலப் பட்டக்காரர்களே (ஊர்த் தலைவர்) நெல் விதையைத் தூவுகின்றனர். இதன் பின்னர் 9 நாட்களுக்குக் கோயில் அர்ச்சகர்கள் நாற்றுக்குத் தண்ணீர் விட்டுப் பூசை செய்து வழிபாடாற்றி வளர்க்கின்றனர்.

### நாற்று நடவு விழா

விழா தொடங்கி 10ஆம் நாள் நடைபெறும் விழா 'நாற்றுநடவு விழா' எனப்படுகிறது. கோயில் நிர்வாகத்தவர்கள் மள்ளர்குலப் பட்டக்காரர்களுக்குப் பட்டம் கட்டி (உருமால்) மண்டபத்திற்கு அழைத்து வருகின்றனர். இச்சமயம் பட்டீஸ்வரர் மள்ளராக அலங்கரிக்கப்பட்டு அர்ச்சகர்களால் அழைத்து வரப்படுகின்றார். இதன் பின்னர் நெல் நாற்றுக்குப் பூசை செய்து மகளிர் நாற்றைப் பறித்துக் கட்டுக்களாகக் கட்டுகின்றனர். பட்டக்காரர்கள் ஏர்பூட்டிய மாட்டுடன் கழனியில் இறங்கி உழுகின்றனர். இதன் பின்னர்ச் சிவனாகக் கருதப்படும் பட்டக்காரர்கள் (மள்ளர்கள்) வயலில் நடவு செய்யப் பெண்கள் குலவையிட்டு நாற்று நடுகின்றனர். தேவேந்திரர் மண்டபத்திலிருந்து நாற்று நடவு மண்டபத்திற்கு ஏருடன் வரும் பட்டக்காரரை இம்மக்கள் சிவனாகவே கருதி வழிபடுகின்றனர். இவ் ஊர்வலத்தின் போது தேவேந்திர குல ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் சிவனாகவும், பார்வதியாகவும், முருகன், விநாயகராகவும் வேடமிட்டுக் கலந்து கொள்கின்றனர்.

### நாற்று நடவு விழா தரும் உண்மைச் செய்தி

தமிழகத்தில் தொன்று தொட்டு நெல் வேளாண்மையில் ஈடுபட்டுள்ள இச்சமூகம் தங்களது விளைநிலத்திற்கு நீர்வளம் வேண்டி நடத்திய வேந்தன் வழிபாடு காலப்போக்கில் சிவனுடன் தொடர்புப் படுத்தப்பட்டு வழிபடப்படுகிறது என்றும் சொல்லலாம். தங்களது குலத்தில் தோன்றித் திருவிளையாடல் நடத்திய இறைவனின் திருவிளையாடலை அதாவது புராணக்கதையை மறுபடியும் நிகழ்த்திக் காட்டும் (Ritual was the enactment of myth) சடங்காகவும் இது அமைகின்றது. இம் மக்களிடம் இச்சடங்கு இன்றும் வழக்கிலிருப்பதற்குக் காரணம் நெல் வேளாண்மையும் மருத நில மள்ளர் மரபும் (உழவர்) இவர்களுடையன என்பதாலேயே ஆகும் எனலாம்.

### மழை வளம் வேண்டும் விழா

இவ்விழா மழை வேண்டுதலையும், வேளாண் வளமை வேண்டுதலையும் நோக்கமாகக் கொண்டுள்ளது. இதனை இவ் விழாவில் பாடப்படும் பாடல் காட்டும்.

"மாமலை யெல்லாம் தண்ணிவர
தண்டொதுங்கி தளிர் ஒதுங்கி
வருகுதாம் காவேரி"

என்றும்

"ஊசி போல மின்னல் மின்னி
உத்தரம் போல் கால் இறங்கி
பாசிபோல் மின்னல் மின்னி
பத்துத்துளி துளித்து வருகுதாம் காவேரி"

என்றவாறு பாடப்படும் பாடல் மழை வேண்டுதலையே குறிக்கின்றது. பெய்யும் மழையும் யாருக்காகப் பெய்கிறதாம், தேவேந்திரனுக்காகப் (இந்திரன்) பெய்கிறது என்று ஒரு பாடல் சொல்கின்றது.

"சன்னலுக்கு நீர் போக்கி
என்தேவ தேவேந்திரனுக்கு
வாய்திறப்பேன்"

இதன் பின்னர் வயலில் உழவு செய்து தொளி கலக்குதல் வருணிக்கப்படுகிறது.

"சந்தனக் கலப்பை கொண்டு பள்ளன் உழுவான்
சாதிலிங்க நாத்தெடுத்து பள்ளி நடுவாள்"

என்றவாறு நாற்று நடவுத்திருவிழாவின் போது பாடப்படும் பாடல்களும் இவ்விழாவில் கலந்து கொள்ளும் மக்கள் செய்து காட்டும் நாற்று நடவு, தண்ணீர் பாய்ச்சுதல், அறுவடை முதலிய சடங்கியல் செயல்கள் அனைத்தும் ஒரு வேளாண் திருவிழாவை அதாவது வேளாண்மை வளவழிபாட்டினை நமக்கு நாடகமாக்கிக் காட்டும் தன்மைதாய் அமைகின்றன.

இந்திரவிழா எனும் நாற்று நடவுத் திருவிழா இந்திரவிழாவாகவும், சிவன் மள்ளனாகத் தோன்றியதைக்

கொண்டாடும் உழவர் விழாவாகவும் அதாவது வேளாண்மை வளவழிபாடாகவும் (Fertility worship) அமைந்து சிறப்புப் பெறுகின்றது எனலாம். கோவையில் ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெறும் இவ்விழாவை அண்மைக்காலத்தில் இம் மக்களின் வேளாண் பண்பாட்டு விழா எனும் அடையாளத்துடன் கொண்டாடும் வழக்கத்தை திரு. இராஜதேவேந்திரன் அவர்கள் ஏற்படுத்தியுள்ளார் என்பது கூடுதலான தகவல். பேரூர்க் கோயில் நிர்வாகம் இந்த விழாவைத் தமது விழா நிகழ்ச்சிப் பதிவேட்டில் தவறாது குறித்து வைத்து இம்மக்களை அழைத்துக் கொண்டாடி வருவது மகிழ்விற்குரிய செய்தி. தமிழக வரலாற்றில் மறைந்து போன இந்திரவிழா இன்றும் நம்மிடையே ஒரு விழாவாகக் கொண்டாடப்பட்டு வருவது சிறப்புடையது ஆகும். இவ்விழா குறித்த சில நிழற்படங்கள் ஒரு புரிதலுக்காக பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன.

# 8. இந்திரன் மல்லாண்டையான வரலாறு

"நெல் விளைந்தவுடன் பள்ளரெல்லாம்
முழங்கிக் களிப்பேறி
விளைந்து மல்லாண்டப்பனுக்கு
இளந்தையாடு வெட்டி
பொங்கலிட்டு நாட்கதிருங் கொய்துமே
அலகு கதிர்க் கோட்டை வைத்து"

*(வையாபுரிப் பள்ளு, பா. 189)*

"காட்டு மல்லாண்டை முனியப்பன்
கறுப்பண்ணர் நிலை
கண்டு கொண்டு பூசை செய்து
தெண்டனிடுங்கோ"

*(செங்கோட்டுப் பள்ளு, பா.271)*

நெல் அறுவடைக்கு முன்பு வயல்களில் உள்ள மல்லாண்டை தெய்வத்திற்குப் பொங்கல் வைத்துக் கிடாய் வெட்டி வழிபாடு செய்வது குறித்த செய்தியை மேற்கண்ட பள்ளுப் பிரதிகள் பதிவு செய்கின்றன. இந்த 'மல்லாண்டை' எனும் சொல் புதிய வழக்காக இருந்ததனால் இது குறித்துத் தேடத் தொடங்கினேன். கரூர் மாவட்டத்தில் இவ்வழிபாடு பிரசித்தி பெற்று விளங்குகின்றது என்று தகவல் கிடைத்தது. அதனடிப்படையில் கரூர் மாவட்டத்தில் மூன்று நாட்கள் தகவல் சேகரித்தேன். அத்தகவல் தரும் செய்திகள் இந்த "மல்லாண்டை"யை ஒரு வளவழிபாடாகப் புரிந்து கொள்ள வழிவகை செய்தன.

## மல்லாண்டை – பொருள் விளக்கம்

கொங்குநாடு முழுவதிலும் அதாவது கோவை, ஈரோடு, கரூர், திருச்சி மாவட்டம் முழுவதிலும் தேவேந்திர குல வேளாளர்களிடம் இவ்வழிபாடு காணப்படுகின்றது. இதில் கோவை, ஈரோடு மாவட்டங்களில் வேளாண் களத்து மேட்டில் "ஓர் உருண்டை"க் கல்லை மல்லாண்டை அல்லது மல்லாண்டவர்

என்று வைத்து வழிபட்டு வருகின்றனர். கரூர், திருச்சி மாவட்டங்களில் மல்லாண்டவருக்கென்று தனியே கோயில் இருக்கின்றது. கோயினுள் உருண்டைக்கல், நடுகல், சாமிசிலைகள் எனப் பல கூறுகள் காணப்படுகின்றன. இந்த மல்லாண்டை வழிபாடு குறித்து ஈரோடு அரசு அருங்காட்சியகக் காப்பாளர் முனைவர் சி. மகேசுவரன் கீழ் வருமாறு குறிப்பிடுவார்.

"கொங்கு நாட்டில் தொல்லியல் பொருள்கள் பரவலாகக் கிடைக்கின்றன. இத்தகு தொல்லியல் பொருள்களுள் ஒன்றான "புதிய கற்கால அம்மிக் குழவியே" (Neolithic Pounding Stone) "மல்லாண்டைக் கல்" எனக் கொங்கு நாட்டு மக்களால் சுட்டப்பெறுகிறது. எனினும், இதனோடு தொடர்புடைய 'புதிய கற்கால அம்மிக்கல்' (Neolithic Milling Stone) மள்ளர்கள் தவிர இதர கொங்கு மக்களால் சிறப்பிக்கப் பெறுவதில்லை; சிறப்பாகச் சுட்டப் பெறுவதுமில்லை" என்று சொல்லும் அவரே 'மல்லாண்டை' என்பது சொல்லியல் ஆய்வில் மல்+ஆண்டை எனப் பகுப்பாய்வு செய்யப்படும் என்கிறார். அடுத்து, மல் எனும் சொல்லுக்குப் "பெருகு", "வளர்", "செழி" எனும் பொருண்மைகளும் (Meanings) ஆண்டை எனும் சொல்லுக்குத் "தலைவன்", "இறைவன்" எனும் பொருண்மைகளும் பிரித்து அறியப்பெறும். எனவே "மல்லாண்டை" எனும் சொல்லுக்குச் 'செழிப்புக்குரிய தலைவன்/செழிப்புக்குரிய இறைவன்' எனப் பொருள் கொள்ளுதல் ஏற்புடையதே என்பார்.[1] இதிலிருந்து புதிய கற்காலக் காலத்திலிருந்து தொடர்ந்து வரும் ஒரு புராதன வழிபாட்டு முறை மல்லாண்டை வழிபாடு என்பதை அறியமுடியும்.

### மல்லாண்டார் கோயில் வழிபாட்டு முறைகள் .

கரூர் மாவட்டத்தில் மல்லாண்டவருக்கென்று அனைத்து ஊர்களிலும் கோயில் இருக்கின்றது. மல்லாண்டவர் இம் மாவட்டத்து மள்ளர் இன மக்களின் இனத் தெய்வமாகவும், ஊர்ப் பொதுத் தெய்வமாகவும் அமைந்து காணப்படுகின்றார். மல்லாண்டவரை மல்லம்மன்கோயில், மல்லாங்கோயில், மல்லம்மா கோயில் என்றெல்லாம் பல பெயரில் மக்கள் அழைத்தாலும் பொதுவாக மல்லாங்கோயில் என்றே மல்லாண்டவர் கோயிலைச் சுட்டுகின்றனர். கரூர் மாவட்டங்களில் பள்ளபாளையம், சோழூர், குளித்தலை,

செல்லபாளையம் ஆகிய ஊர்களில் மல்லாண்டவர் கோயில் வழிபாட்டு முறைகள் குறித்துத் திரட்டப்பெற்ற செய்திகள் வருமாறு.

1. தங்களுக்கு நினைவு தெரிந்த காலத்திற்கு முன்பிருந்து (முப்பாட்டன் காலம்) இவ்வழிபாட்டை உடையவர்களாக இம் மக்கள் விளங்குகின்றனர்.

2. மல்லாண்டார் கோயில் வழிபாடு மள்ளர்களின் வாழ்வியலில் அனைத்துக் கூறுகளிலும் இடம்பெறுகின்றது. கோடைகாலம் முடிந்து வேளாண்மைப் பருவகாலம் தொடங்குகையில் "பொன்ஏர்" கட்டுதல் எனும் சடங்குடன் விவசாய வேலைகள் தொடங்குவது வழக்கம். இந்தப் பொன்ஏர் பூட்டுதல் சடங்கு மல்லாண்டவர் கோயிலின் முன்புதான் நடத்தப்படுகின்றது.

3. வேளாண் நிலத்தில் ஏர்கட்டும் போது சாணத்தில் மல்லாண்டை செய்து வைத்து அத்துடன் பிள்ளையாரையும் சாணத்தில் பிடித்து வைத்து, அருகம் புல் செடி வைத்து ஒவ்வொரு ஏருக்கும் ஒரு தேங்காய் உடைத்து மல்லாண்டவருக்கு மூன்று தேங்காய் உடைத்து வழிபடுகின்றனர்.

4. மழை இல்லாத காலங்களில் வாய்க்காலின் குறுக்கே ஒரு பெரிய மரக்கட்டையைப் போட்டு நீரைப் பெருக்கி வாய்க்காலின் எதிர்த்திசையில் நீர் செல்லும்படிச் செய்து மல்லாண்டவருக்கு வழிபாடு செய்தால் மழை வருமென்று நம்புகின்றனர். இது ஒரு வகையான பாவனையான (Imitative) மாய மந்திரச் சடங்காகும் (Magical Rituals). அதாவது, மழை இல்லாத காலங்களில் வாய்க்காலில் நீரைப் பெருக்கி அதனை எதிர்த்திசையில் செல்ல வைப்பது ஒரு பொய்யான ஒரு மாயத் தோற்றச் சடங்கே ஆகும். இவ்வாறு செய்தால் மழை வருமென்று நம்புவது ஒரு வகையில் புராதன நம்பிக்கையாகவும் இது அமைகின்றது.

5. எந்த வழிபாடு நடந்தாலும் இந்தக் கோயிலுக்குத்தான் முதலில் வழிபாடு நடக்கின்றது.

6. ஊர்ப் பஞ்சாயத்து நடந்தாலும் இந்தக் கோயிலின் முன்புதான் நடத்துகின்றனர். எந்தத் தீர்ப்பும் மல்லாண்டவர் ஆணையாகத்தான் கருதி வழங்கப்படுகின்றது.

7. இந்தக் கோயில் ஊரின் காவல் தெய்வக்கோயிலாகவும் கருதப்படுகின்றது.

8. மாரியம்மன் கோயில், திரௌபதியம்மன் கோயில் விழாக்களில் இடம்பெறும் முளைப்பாலிகை எடுத்தல், அக்னிச்சட்டி எடுத்தல், கரகம் எடுத்தல் போன்றன மல்லாண்டவருக்கும் என்றே சேர்த்து எடுத்து வழிபடப்படுகின்றன.

9. சமூக அமைப்பின் தலைவரான ஊர் மூப்பன் அல்லது ஓடும் பிள்ளையே காலங்காலமாகப் பூசாரியாக இருந்து வருகின்றார்.

10. மழை பெய்யாத காலத்தில் மல்லாண்டவர் சிலையை வெயிலில் தூக்கிப் போட்டு விட்டுப் பின்னர் மழை வந்து குளம், குட்டை நிரம்பியதும் வழிபாடு செய்து சிலையைக் கோயிலில் வைத்து வழிபடுவராம்.

இவ்வாறெல்லாம் இவ்வழிபாடு குறித்துப் பல தகவல்கள் கூறப்பட்டாலும் இவ்விழா நடைபெறும் விதம் குறித்து இப்பகுதி மக்கள் யாரைக் கேட்டாலும் சொல்லும் வழிபாட்டு முறைகள் வருமாறு.

"கார்த்திகை மாதம் கொட்டுமேளத்துடன் காவிரி ஆற்றுக்கு ஊர் கூடிச் சென்று ஆள் தவறாமல் குடங்குடமாய் மல்லாண்டாரை நீராட்ட தீர்த்தம் (நீர்) கொண்டுவருவோம். இவ்வாறு நீர் கொண்டு வந்த பின்பு மல்லாண்டவரை நீராற்று வித்தல் சடங்கு நடைபெறும். இதன் பின்பு இரவு 12 மணிக்குமேல் எல்லைத் தெய்வங்களுக்குக் காவு கொடுப்போம். விடிய விடிய நாடகம், சினிமா, ஆட்டம், பாட்டம் என்று ஒரே விழாக் கோலமாக இருக்கும். மல்லாண்டார் கோயில் விழாவன்று வீடு தவறாமல் பொங்கல் வைத்து, புத்தாடை உடுத்துவோம்" என்று குறிப்பிடுகின்றார்கள்.

அந்தக் காலத்தில் இந்த விழா 30 நாட்கள் நடந்ததென்றும், இப்பெல்லாம் ஒரு நாளில் இந்த விழா கொண்டாடப் படுகிறதென்றும் சொல்கின்றார்கள்.

### மல்லாண்டவர் விழா தரும் சில தகவல்கள்

மல்லாண்டவர் கோயிலை வழிபடும் மள்ளர்களின் வாழ்வியலை இங்கே நினைவுகூர வேண்டியுள்ளது. வேளாண்

தொழிலைத் தங்களின் உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் இம் மக்களின் "வேளாண் வளவழிபாடாக" இவ்வழிபாடு அமைந்தாலும் அதற்கும் மேலாக இவ்வழிபாட்டில் காணப்படும் சில தகவல்கள் வருமாறு அமைகின்றன.

1. மழை கொடுக்கும் மழைக் கடவுளாகக் கருதப்பட்ட மல்லாண்டவர் பின்னாளில், மாரியம்மன் திரௌபதியம்மன் வழிபாட்டோடு இணைத்து வழிபடப்படும் முறைகளை இவ்வழிபாட்டில் அறிய முடிகிறது.

2. கார்த்திகை மாதத்தில் வேளாண் விழாவாக அதாவது, பயிர்களைப் பூச்சி, நோயிலிருந்து காக்கும் விழாவாகவும் மல்லாண்டவர் விழா அமைகின்றது. காரணம், மல்லாண்டவர் கோயிலுக்கு முன்புதான் சுடலை கொளுத்துதல் எனும் கார்த்திகைக் கூம்பைக் கொளுத்துவதும் செய்யப்படுகின்றது. இதிலிருந்து கார்த்திகை விழாவும் மல்லாண்டவருடன் இணைத்துச் செய்யப்பட்ட விழாவாகவே இப்பகுதியில் காணமுடிகின்றது.

3. கரூர் மாவட்ட மல்லாங்கோயில் கோபுரங்களில் வெள்ளை யானையின் மேல் இந்திரன் அமர்ந்திருக்கும் சிலைகள் காணப்படுகின்றன. இச்சான்றுகளிலிருந்து மல்லாண்ட வருடன் மருதநில வேந்தன் இந்திரன் இணைத்து வழிபடப்படுகின்றானா? அல்லது இந்திரனே மல்லாண்டவராகக் கருதி வழிபடப்படுகிறாரா? என்ற கேள்வி எழுகின்றது. மேலும், காவிரியாற்றங்கரையில் அதாவது பூம்புகாரில் சிலப்பதிகாரக் காலத்தில் நடைபெற்ற இந்திர விழாவின் எச்சமா? என்ற கேள்வியும் எழுகின்றது.

4. இதல்லாமல் குளித்தலையில் பாரதிநகரிலுள்ள ஒரு மல்லாண்டார் கோயிலை "மல்லாண்டார் விநாயகர்" என்று சொல்லி வழிபட்டு வருகின்றனர். இங்கே மழை கொடுக்கும் கடவுளான விநாயகருடன் மல்லாண்டவர் இணைத்து வழிபடப்படுவதைப் பார்க்க முடிகின்றது. இந்திர வழிபாட்டின் இன்னொரு வடிவமே விநாயகர் வழிபாடு என்ற கருத்திற்கும் இவ்வழிபாட்டில் சான்றுகள் காணக்கிடைக்கின்றன.

5. *மல்லாண்டை வழிபாட்டோடு இந்திர வழிபாட்டை இணைத்துப் பல வழக்காறுகள் இம்மக்களிடம் வழக்கிலிருப்பதைக் கள ஆய்வில் அறிய முடிந்தது. இதன்படி இந்திரனை மல்லனாகக் கருதி இம்மக்கள் வழிபடுகின்றார்கள் என்பதையும் எதிர்கால ஆய்வில் நிறுவிவிடமுடியும்.*

வேளாண்மை செழிக்க மழை கொடுக்கும் வளமைத் தெய்வமாக "மல்லாண்டவர்" கருதப்பட்டாலும் இவ்வழிபாட்டு முறையில் காணப்படும் பல சான்றுகள் இவ்வழிபாட்டை இந்திரவிழாவோடு தொடர்புப்படுத்திக் காட்டுவதாக அமைகின்றன. அவ்வகையில் இவ்வாய்வு மேலும் பெரிய அளவில் நடத்தப்பட்டு இக்கருதுகோள் உறுதிசெய்யப்பட வேண்டும். கரூர் மாவட்டத்திலுள்ள மல்லாண்டைக் கோயில் தொடர்பான சில நிழற்படங்கள் ஒரு புரிதலுக்காக இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.[2]

## அடிக்குறிப்புகள்

1. *சி. மகேசுவரன் (கட்டுரை) கொங்கு நாட்டில் மல்லாண்டை அறிமுகம், தமிழர் பண்பாட்டு வரலாறு, தொகுதி-1, பக்95-100. குருசாமிசித்தர், தே. ஞானசேகரன் (பதிப்பாசிரியர்), தமிழர் பண்பாட்டுச் சமூக ஆய்வு மன்றம், கோவை, 1996.*

2. *காண்க நிழற்படம் (பின்னிணைப்பு).*

# 9. பள்ளு நாடகம் எனும் கதையாடல்

பள்ளுப் பிரதிகள் நாடகம் என்றும் அடையாளப் படுத்தப்படுவதனால், இந்த நாடக ஆக்கம் எவ்வகையான கட்டமைப்பை உருவாக்கித்தர முயல்கின்றது என்பதை நாம் இங்கே பார்க்க இருக்கின்றோம்.

பள்ளுப் பிரதிகள் நாடகமாக நடிக்கப்பட ஏதுவான அமைப்புடையதே. அதிலும் மக்களின் இசை வடிவான சிந்து வடிவில் மிகுதியான பள்ளுப் பாடல்கள் அமைவதால் மேடையில் பாடுவதற்கும், பாடி ஆடுவதற்கும் ஏற்றதாகின்றன. அதல்லாமல் இப்பிரதிகள் படிப்பதற்கேற்ற நாடகப் பிரதியாகவும் அமைகின்றன. பள்ளு நூல்கள் தோன்றிய 17ஆம் நூற்றாண்டு வாக்கில் குறவஞ்சி, துளுவநாடகம், நொண்டி நாடகம் போன்றன கூத்து வடிவில் பெரிதும் வழக்கிலிருந்திருக்கின்றன என்பதால், பள்ளுப் பிரதிகளும் கூத்தாக (நாடகமாக) நடிக்கவுமான பிரதிகளாகவே எழுதப்பட்டுள்ளன என்றும் நாம் கருதலாம். அதே நேரத்தில் எதுவுமே காரணமின்றித் தோன்றாது என்பதற்கேற்பப் பள்ளுப் பிரதிகள் நாடகமாக அதுவும் ஏசல் நாடகமாக ஏன் தமிழகம் முழுவதும் அரங்கேற்றப்பட்டு இருக்கின்றன என்ற கேள்வியும் எழாமல் இல்லை. இந்தக் கேள்வியுடன் நாம் பள்ளு நாடக ஆக்கத்தில் காணப்படும் அதிகாரக் கட்டமைப்பைப் புரிய முயல்வோம்.

## பள்ளு நாடகத்தின் பொதுக்கட்டமைப்பு

பள்ளு நூல்களின் பொது அமைப்பு அப்படியே நாடகமாகக் கூட்டியும் குறைத்தும் சூழலுக்குத் தக்கவாறு நடித்துக் காட்டப்பட்டிருக்கும் என்று நாம் இங்கு ஒரு வரையறை செய்து கொள்ளலாம். காரணம் பள்ளு நூலின் முழு அமைப்பை அப்படியே நாடகமாக நடித்துக் காட்டமுடியாது என்பது இப்பிரதியிலுள்ள ஒரு சிக்கல். ஆனால் பாட்டுடைத் தலைவன் பெருமை, நாட்டுப் பெருமை பேசுதல், சமய சர்ச்சைகளைப் பள்ளியர்கள் ஏசலாக விவாதிக்கும் முறை, பண்ணையார் வருகை, பள்ளனை அவன் குட்டையிலடைத்துக் கொடுமை செய்தல்

முதலானவற்றுடன் மழை வேண்டுதல், விளைச்சல் வேண்டிக் கும்மிப்பாடல் பாடுதல் என்று ஒரு சில காட்சிகள் கட்டாயம் நிகழ்த்திக் காட்டப்பெற்றிருக்கும். பள்ளு நாடகம் எப்படி நடந்தது? நடத்தப்பட்டது? என்பதற்கு எந்தச் சான்றாதாரங்களும் நம்மிடையே இல்லை. இருப்பினும் இந்தப் பிரதியிலுள்ள மொழிவடிவம் எளிய உரையாடலில் மக்களிடம் கொண்டு சேர்க்கப்படுகையில் அது ஒரு வலுவான கருத்து மையத்தை உருவாக்கவே செய்திருக்கும் என்று நாம் உறுதியாக நம்பலாம். இக்கருத்தைத் தமிழ் நாடக வரலாறு எனும் நூலில் சக்திப் பெருமாள் "நாட்டுப்புற உலகின் ஏற்றம் காட்டும் எழுத்தோவியங்களாக விளங்கும் இவை, சமுதாய வரலாற்று விளக்கங்களாகவும் அமைந்துள்ளன. நில உடைமையில்லாத உழவர்கள் நிலை, உழுதொழில் செய்வோரின் கொத்தடிமைப் போக்கு நிலவுடைமையாளர்கள் உழவர்களைத் தொழுவிலடைத்துச் செய்து வந்த அடக்குமுறைக் கொடுமைகள், உடைமையாளர்களுக்கும் உழைப்பாளிகளுக்குமிடையே வெறும் மிரட்டலாலும் புரட்டாலும் பிழைத்து வந்த பண்ணைக்காரர்கள் என்றொரு இனம் தோன்றிய நிலை, உழைப்போருக்கு ஊக்கம் குன்றிய நிலை, சமுதாயத்தில் மிஞ்சி நின்ற சமயப் பிணக்குகள் இவையனைத்தையும் இந்நூலில் நாம் காணலாம்"[1] என்று மதிப்பீடு செய்துவிட்டுப் பள்ளு நூல் வகைகள் முழுவதையும் நாடகவகை என்று அறிமுகம் செய்கின்றார். பள்ளுப் பிரதியில் இடம்பெறும் நிகழ்ச்சிகள் எல்லாமே அப்படியே ஒன்றுவிடாமல் நடந்தவை என்று நாம் நம்பத் தேவையில்லை. ஏனென்றால் இலக்கியம் என்பது ஒரு படைப்பாளனால் திட்டமிட்டுக் கட்டப்பட்ட கதை மாதிரிகள்தான். **"அதிகாரம் தனக்கான உரையாடலை நிகழ்த்தும் போது அது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்றும் அனைவரும் தனக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்றும் விரும்புகிறது"[2]** என்று ஃபூக்கோ சொல்லும் கருத்து வரலாறு ஏன் உருவாக்கப்படுகின்றது என்பதைப் புரிய நமக்கு உதவும். பள்ளுப் பிரதியில் பாட்டுடைத் தலைவர்களின் (ஜமீன்தார்கள்) வரலாறுகள் மிகைப்படுத்தப்பட்டு திரும்பத் திரும்பப் பாடப்படுவது ஏன்? எதற்காக இவை நிகழ்த்தப்படுகின்றன? அதே நேரத்தில் ஒரு சிலரை வரலாற்றுக்கு வெளியே தள்ளும் முயற்சிகள் ஏன் கட்டமைக்கப்படுகின்றன? என்று பார்த்தால் அங்கே ஆதிக்கம் எனும் அதிகாரம் செயல்படுவதே காரணமாக

வந்து நிற்கும். இன்னும் தெளிவாகப் புரிய வேண்டுமானால் **"வரலாறு என்பது அதன் மற்றமைத்தன்மை (otherness)யால் தான் வசீகரமானதாக இருக்கின்றது"**[3] என்பதால் வரலாற்றுக்குள் இருப்பவர்கள் ஒரு சிலரை வரலாற்றுக்கு வெளியே தள்ளிவிடுவதைத் தொடர்ந்து செய்ய வேண்டியிருக்கிறது. இப்படிச் செய்வதால் இவர்களின் அடையாளம் பேரடையாளமாக எப்பொழுதும் நிலைத்து நிற்க வழி ஏற்படுகிறது. வரலாறுகளை உருவாக்குதல் அல்லது கட்டுதல் என்பது கண்ணுக்குத் தெரியாமல் அதிகாரங்களைக் கட்டுதல் என்று தான் அர்த்தப்படுத்தப்படுகிறது. இதைத்தான் பள்ளுப் பிரதிகள் தொடர்ந்து செய்து வந்திருக்கின்றன.

## நாடகமெனும் ஊடகம்

நாடகம் காட்சி வடிவிலானதாக, பேச்சாக (உரையாடல்), இசையாக, ஆட்டமும் பாட்டமுமான ஓர் இலக்கிய வடிவம் என்பதால் கற்றோர், கல்லாதோர் ஆகிய இருவருக்குமான காட்சி வடிவமான இலக்கியமாகிவிடுகிறது. எழுத்து வடிவிலான பள்ளுப் பிரதிகளைக் கற்றோர் மட்டுமே படித்து அறிய முடியுமென்ற நிலையில் கல்லாதோருக்கும் இதைக் கொண்டு சேர்க்கும் முயற்சியில் இந்த நாடக ஆக்கம் செய்யப்பட்டிருக்கலாம். நாம் இங்கே பள்ளு நாடகத்தை நாட்டுப்புற நாடகம் அல்லது கூத்து வடிவம் என்று ஒரு வரையறைக்காகப் புரிந்து கொள்ளலாம். அதே நேரத்தில் இதைப் பள்ளர்கள்தான் நடித்தார்கள் என்று சொல்வதற்கில்லை. காரணம் இந்நாடகக் கதையாடலில் இவர்களுக்கு எதிரான பிரதிகள்தான் நிறைய இருக்கின்றன என்பதை இவர்கள் அறியாமல் இருந்திருக்க மாட்டார்கள். இந்நாடகத்தின் கதைத்தளம் (plot) உழவனைப் போற்றுவதல்ல. பாட்டுடைத் தலைவனின் புகழ்பாடுவதுதான். அதற்கேற்பவே கதையின் போக்கு அமைந்திருக்கும். கவிதை வடிவிலான ஒரு பண்டிதனின் அதிகாரக் (நாடக ஆசிரியன்) குரலை ஒரு கூத்தாடி (கலைஞன்) மறுபடியும் நிகழ்த்திக்காட்டி, சமூகத்தளத்தில் அதற்கொரு அதிகார மதிப்பீட்டை ஏற்படுத்தித் தருகின்றான் என்று இந்நாடக வடிவமைப்பை நாம் விளங்க முடியும்.

## குடும்பன் / பள்ளியர் மேடையில் தோன்றுதல்

"நெற்றியில் இடும் மஞ்சனைப்பொட்டும்
மற்றொரு திருநாமப் பொட்டும்"

நெகிழ்ந்த கருங்கொண்டையும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
சிற்றிடையும் செம்பொன் இடைக்கிடை
பெற்றிடும் பட்டாங்கும் இலங்கத்
திருமுக்கூடல் வாய்த்த பள்ளி
தோன்றி னாளே (முக்கூடற்பள்ளு, பா.7)

"பங்கயஞ்சேர் வீராச்சி மங்கை நகரிற் பண்ணைப்
பள்ளன் தனக்குச் சின்னப் பள்ளினானாண்டே"
(சாமிநாதப்பள்ளு, பா.15)

"வேள்சாமி னாதேந்திரப் புத்திமான்
தென்கரை நாட்டிலரும் புகழ்சேரும்
பண்ணைக் குடும்பன் வந்தான்"
(சாமிநாதப் பள்ளு, பா.11)

என்ற பாடல்களில் மூத்தபள்ளி, இளையபள்ளி, இவர்கள் இருவரின் கணவன் குடும்பன் ஆகியோர் தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து மேடையில் தோன்றுகின்றனர். இவ்வாறு அறிமுகமாவது நாட்டுப்புறக் கூத்துவடிவம். இதில் எப்படித் தங்களை அறிமுகம் செய்து கொள்கின்றனர் என்றால் மூவருமே ஒரு பண்ணையுடன் தங்களை (பண்ணை என்பது நிலம் என்று கொள்ளலாம்) அறிமுகம் செய்து கொள்கின்றனர். இங்கே மனித உடல்கள் தங்களை ஒரு நிலத்துடன் அடையாளப் படுத்திக்கொள்கின்றன என்பதே பிரதி தரும் செய்தி. "சமூக அமைப்பில் ஓர் உடல் தனது இடத்தை நிர்ணயித்துக் கொள்வதன் மூலமே தனக்கான அடிப்படை இடத்தைப் பெறுகிறது. சமூக அமைப்பு என்பது மொழியின் விளைபொருளாதலால், இவ்விட நிர்ணயம் பேச்சின் மூலம் உருவாக்கப்படுகிறது. ஆக, பேச்சு என்பது சமூக அமைப்பில் ஓர் உடல் தனக்கான இடத்தை நிர்ணயித்துக் கொள்வதற்கான போராட்டக்களமாக அமைகிறது. அதாவது, பேசும் உடல்களின் இருத்தல் சமூக மதிப்பு என்கிற அளவையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன."[4] இங்கே நாம் இந்தப் பாத்திரங்கள் தம்மை ஒரு பண்ணை நிலத்துடன் அறிமுகம் செய்து கொள்கின்றன என்று மட்டுமே பார்க்க முடியாது. இதில் வரும் உடல்களை இவர்களின் நிலத்திலிருந்து பிரித்து எடுத்த வக்கிர வரலாறு தொனிக்கவே செய்கின்றது என்றே பார்க்க முடியும்.

"யதார்த்தத்தில் மொழி என்பது வெறுமனே பரிமாற்றக் கருவியாக மட்டுமே இருப்பதில்லை. அது அதையும் தாண்டிய ஒரு முக்கிய வினையாக இருக்கிறது. மொழியின் அடிப்படையான வினைகளில் ஒன்று மனித உடலை நிலத்துடன் பிணைப்பதே"[5] என்ற கருத்துடன் பார்த்தால் இங்கே நிலத்துடன் அடையாளப்படுத்தப்படும் உடல்கள் அவர்களுக்கான நிலத்துடன் அடையாளப் படுத்தப்படவில்லை என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. காரணம் இவர்கள் இந்த மண்ணின் மைந்தர்கள். ஆதிகாலந்தொட்டு இங்கே காடு கொன்று கழனியாக்கியவர் என்பதெல்லாம் மறுக்கப்பட்டு ஒரு பண்ணையின் கூலியாட்களாய்த் தம்மை அவர்களே அறிமுகம் செய்து கொள்கிற காட்சி இங்கே நமக்குத் தரப்படுகிறது. இப்படியான திட்டமிட்ட அதிகாரக் கட்டமைப்புத்தான் பள்ளு நாடகங்களில் நிகழ்த்திக் காட்டப்பட்டிருக்கின்றது. இத்தகைய கட்டமைப்பு ஒரு தந்திரச் செயல். இது அன்றைய சமூக அரசியல் செயல்பாட்டுடன் தொடர்புடையதென்றாலும்கூடத் தொலை நோக்கில் பெரிய சமூக இலாபமுடையது என்பதை அவர்கள் அறிந்தே செய்திருக்கிறார்கள். "அதிகாரமானது திரும்பத்திரும்பத் தனது ஊடகங்கள் மூலம் ஒரே படித்தான பல விஜயங்களைப் பரப்பி வரும் அதன் வலைக்குள் உடல்களை (மனிதனை) வீழ்த்துவதுமான ஓர் இயக்கத்தை இடைவிடாது செய்து கொண்டே இருக்கும்."[6] நாம் இன்றைய தொலைக்காட்சி ஊடகங்கள் நுகர்வுப் பண்பாட்டை வளர்க்க எல்லையில்லாத உரையாடலைத் தொடர்ந்து நிகழ்த்தி வருவதை நினைத்துக் கொள்ள முடியும். இப்படியாக மனித உடலைத் தனக்கானதாகக் கட்ட முயலும் அதிகார மையத்தின் இது போன்ற பெருங்கதையாடல்கள் நேரடியாகவும் மறைமுகமாகவும் எல்லாக் காலங்களிலும் நடைபெற்றுக் கொண்டேதான் இருக்கும். இதன் மூலம் அதிகார மொழிக்குள் மனிதன் சிக்க வைக்கப்படுகிறான். காட்டாக நம்மிடையேயுள்ள சாதிப்பிரிவுகள் (OC, BC, MBC, SC) யாரால் கட்டப்பட்டது என்றால் ஓர் அதிகார மையத்தால் என்று விளங்க முடியும். இப்படியாகச் சிக்கிய மனித உடல்களை அதிகாரம் எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளும். இது ஒருவகை உள ஒடுக்குமுறைதான். மொழி மனிதன் மனதைப் பெரிதும் பாதிக்கும் வல்லமையுடையது என்பது இங்குக் கருதத்தக்கது. இதைத்தான் பள்ளுப் பிரதிகளும் செய்கின்றன. விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அதிகாரமையம் நிகழ்த்திய

இந்தப் பெருங்கதையாடலிருந்து மள்ளர்கள் தப்பமுடியாதபடி இந்தப் பிரதிகளின் செயல்பாடு இருக்கிறது. இவர்களே பாத்திரமாகத் தோன்றித் தங்களையே நான் பள்ளன் வந்தேன், நான் பள்ளி வந்தேன் என்று உரையாடுகையில்நாடகம் பார்ப்போனின் மனதில் பாத்திரத்தின் பொருண்மை தாண்டி பள்ளன்/பள்ளி என்ற சொல் நிலைபேறடைந்து விடுகிறது. இது ஒருவகையான தந்திரமான இலக்கிய உருவாக்கம்;காரணம் இந்த மண்ணில் சாதியம்தான் சமூக அடையாளமாக அறியப்படுகையில், அடையாளமில்லாத ஒரு மொழியில் (பள்ளர்) இவர்களை அடையாளப்படுத்துவதை வேறென்ன என்று சொல்லமுடியும். பள் என்பது தெலுங்கில் கழனி நிலத்தைக் குறிக்கும் சொல். அது இங்குள்ள கழனிநில உழவர்களைக் குறிக்கப் பயன்படுத்தப் படுகிறது. இதுமட்டுமல்ல இவர்களைப் பண்ணையாட்களாக அடையாளப் படுத்துவதற்கு நமது பண்டிதர்கள் நிறைய மூளையைச் செலவு செய்திருக்கிறார்கள்.

> "ஆதிபரஞ்சோதி நாத வேதங்கீரனார்–பண்ணை
> யாண்டவரைக் கண்டு தொழவாரும் பள்ளீரே"
> (பறாள விநாயகர் பள்ளு)

இப்பாடலில் இரண்டு வகையான பொருள் மயங்கிக்கிடப்பதைப் பார்க்க முடியும். ஒன்று ஆதி பரஞ்சோதியாகிய விநாயகரைத் தொழவாருங்கள் பள்ளீரே என்பது; மற்றொன்று பண்ணைக்காரனைத் தொழவாரும் பள்ளீரே என்பது. இப்படியாகக் கட்டப்பட்ட பள்ளுப்பிரதியில் பண்ணைக்காரன் யார்? அவன் எந்தச் சமூகத்தைச் சார்ந்தவன் என்ற கேள்வி இயல்பாகவே எழுகிறது. அவனை வருமாறு அறிவோம்.

**பண்ணைக்காரன் யார்?**

பள்ளுப்பிரதியில் பண்ணைக்காரன் ஒரு எல்லையற்ற அதிகாரமுடைய பிரதியாக வந்து போகின்றான். பண்ணையை மேற்பார்வை செய்வதற்கும் மேலாகப் பள்ளனைப் குட்டையிலடைக்கும் அளவிற்கு அவனுக்கு அதிகாரத்தைப் பள்ளு நூலின் ஆசிரியர்கள் தந்துள்ளனர். இது நாடக உத்திக்காகச் செய்யப்பட்ட ஒரு கதை நிகழ்ச்சிதான் என்றாலும் அதற்காக மட்டுமே இந்தக் கதைமாதிரி உருவாக்கப்படவில்லை. தவறு செய்தால் தண்டனை உறுதி என்பதை நினைவூட்டிக் கொண்டே இருக்கும் ஒரு அதிகாரமொழி இது. இதனுள்

செயல்படுவது ஒரு அதிகாரமையம்தான். தண்டனை பெற்ற குடும்பனின் மனைவி பண்ணையாரிடம் அவனை விடுவிக்க வேண்டிக் கெஞ்சிக் கூத்தாடுவது ஒரு பண்பாட்டு ஒடுக்குமுறையைக் காட்சியாகப் பார்வையாளனுக்கு வழங்கிவிடுகிறது. அருந்திறல் வீரர், பெருந்திறல் உழவர் என்று அறியப்பட்ட நெல்லின் மகனைக் கைகள் கட்டிய நிலையில் காட்சிப்படுத்தும் இந்தப் பிரதியின் அதிகாரமொழி எல்லையில்லாதது. "ஆதிக்கச் சக்திகள் தங்களின் அதிகாரத்தைத் தொடர்ந்து பராமரிக்க மனிதரைப் பால் (Sex), பொருளாதாரம், இனம், பிறப்பு ஆகியவற்றின் அடிப்படையில் தரம் பிரிக்கின்றன. ஓர் ஆதிக்கப் பண்பாடு வித்தியாசங்களை எதிர்ச் சக்திகளுக்கு ஒதுக்கி அதன் மூலம் தன்னைத் தக்கவைக்கிறது"[7] இங்கே பண்ணையார் யாரென்று அடையாளம் காட்டப்படாமல் இருப்பது பிரதிக்கு எதிரான கலகக் குரல்கள் தோன்றிவிடக்கூடாது என்பதாகக்கூட இருக்கலாம். இதல்லாமல் ஆதிக்கம் செய்யும் எந்தச் சாதியும் இங்கே சூழலுக்கேற்ப எப்பொழுது வேண்டுமானாலும் விரும்பினால் வந்து நின்று கொள்ள முடியும். பள்ளு நூலில் நேரடியான பல கேள்விகளுக்குப் பூடகமான பிரதிகள்தான் பதிலாகக் காணக்கிடக்கின்றன. நேரடியாக அவை உரையாட அஞ்சுவதுபோல் படிக்கிற வாசகனுக்குத் தோன்றுவது இயல்பே. இருப்பினும் இப்படியொரு நியாயமான கேள்வி எழுவது இயற்கை. இந்நிகழ்வுகளுக்குத் தமிழகம் முழுவதிலும் இருந்த மள்ளர்கள் ஆட்பட்டார்களா? என்றால் அதற்குப் பிரதி பதில் தராது. அது "தூங்கினவன் தொடையில் திரிக்கிற மட்டும் ஆதாயம்" என்று திரிக்க மட்டுமே செய்யும். அதுவே அதற்கு வசதியும் கூட.

பள்ளுப் பிரதியில் பண்ணையார் பல கேலிக்கும் கிண்டலுக்கும் பள்ளப்பெண்களால் ஆளாக்கப்படுகின்றான். இதனையும் நாம் கவனத்தில் கொள்ளவேண்டியிருக்கின்றது.

**"கொன்னிக் கொன்னி வாய்திறந்து**
**சன்னை சொல்வார் மன**
**குட்டி போட்ட நாய்போலே**
**சள்ளிட்டுக் கொள்வார்"**

**(எட்டையபுரப்பள்ளு, பா.7)**

**மாறுகண்ணும் பருத்திப்பைக்**
**கூறு வயிறும்–கீரை**

*மத்துப்போல தலையும் சுரை*
*வித்துப்போல் பல்லும்"* *(முக்கூடற்பள்ளு, பா.76)*

நடைமுறையில் மள்ளர்களின் வாழ்வு வேறாக இருந்ததை இவர்களின் வாய்மொழி மரபு காட்டும். "பள்ளனையும் இரும்பையும் பதம்பார்த்து அடிக்கணும்" "பள்ளன் பழகியவருக்கு உயிரையும் கொடுப்பான் பழிவந்தால் உயிரையும் எடுப்பான்" என்பது போன்ற பழமொழிகள் இவர்களின் யதார்த்த வாழ்வைக்காட்டும். இப்படியாக அதிகாரவர்க்கம் எதிரிக்குக் கொடுக்கும் தண்டனையைப் பிரபலப்படுத்த விரும்புவது எதற்கு என்றால் அதிகாரத்தின் உரையாடலுக்குச் சவாலாக இருந்தவன் தண்டிக்கப்பட்டதற்கும் மேலாக இன்னமும் பழிவாங்கப் படுகின்றான் என்பதைக் காட்டுவதே ஆகும். இது ஒருவகை ஒடுக்குமுறை. நடைமுறையில் குற்றவாளிகளுக்கு அளிக்கப்படும் தண்டனைகளை டிவி, ரேடியோ, செய்தித்தாள்கள் பிரபலப்படுத்துவது இதனடிப்படையில்தான். இவைகள் ஒரு கேலியான நாடக ஆக்கம்தான். நாடகம் பார்ப்போரைச் சோர்விலாது செய்ய எழுந்த ஒரு நகையான பிரதி இது என்றாலும் பள்ளனைக் குட்டையிலடைக்கும் பாத்திரத்திற்கு எதிரான எதிர்க்குரல் பார்வையாளரிடமிருந்து வந்துவிடக் கூடாது என்பதற்காகவும் அதிகாரம் தன்னைத்தானே கட்டுடைத்துக் கொள்வது போல (Self De-construction) காட்டப்பட்டுள்ளது. ஆனால் இது தற்காலிகமானதே. காரணம் பண்ணைக்காரன் அதிகாரத்தின் குறியீடாகப் பிரதி முழுவதும் வலம் வருகின்றான். இருப்பினும் இந்தக் கேலி உரையாடலை நாம் குறைத்து மதிப்பிட முடியாது. "ஒன்றைக் கேலி செய்வது என்பது மட்டுமே இதன் பொருளல்ல, மாறாகக் குறிப்பிட்ட ஒரு வட்டாரத்தில் ஒலிக்கும் ஒற்றைக்குரலை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் அந்தக் குரலின் மாற்றுத் தொனிகளைப் பல்வேறு முகங்களைச் சுட்டிக்காட்டுவது மக்கள் இலக்கியத்தின் பண்பு என்று கூறும் பக்தீன், பன்முக ஒலிப்பு அல்லது பன்னொலிமப் பண்பு (Poly phony) என்று இதனை அழைப்பார்.[8] இதனை அதிகாரம் ஒற்றைத் தன்மையுடையதல்ல பன்மைத் தன்மையுடையது என்று பின் நவீனத்துவம் கொண்டாடும்.

பண்ணையாரின் சமூக அடையாளம் குறித்த ஒரு சிக்கலை குருசாமி சித்தர் பள்ளுப் பிரதிக்குள்ளிருந்தே, ஒரு சான்றுகாட்டி, "பள்ளுப்பிரதிகளில் வரும் பண்ணையாளர்கள்

வேற்றுச் சமூகத்தவர்கள் மட்டுமே என்று சொல்லிவிட முடியாது. ஏனென்றால் மோரூர் நல்லபுள்ளியம்மன் பள்ளுவில் மள்ளர் குலத்தவர் பண்ணையாராக (பண்ணாடி) சித்திரிக்கப்படுகின்றார்" என்று பண்ணையார் என்ற ஒற்றை அதிகார மையத்தைக் கட்டுடைத்துப் பன்மைத்தன்மையதாய் ஆக்கிவிடுவதைப் பார்க்கின்றோம்".[9] குருசாமி சித்தர் காட்டும் சான்று இதோ:

**"சன்னக் கம்பிச் சோமனை இடையில் அணிந்து–நல்ல**
**சரிகையிட்ட பாகையைத் தலையினில் கட்டி**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**செந்நெல் சூழ் மோரூரின் நல்லபுள்ளி – பண்ணைத்**
**திறமுடைய பண்ணாடி தோன்றினான் ஆண்டே"**
**(மோரூர் நல்ல புள்ளியம்மன் பள்ளு, பா.76)**

கொங்கு நாட்டைச் சேர்ந்த இந்தப் பள்ளுவில் இடம்பெறும் பண்ணையார் "பண்ணாடி" என்று அடையாளம் காட்டப் படுவதாலும், பண்ணாடி என்ற சொல் இங்குள்ள தேவேந்திரர்களுக்குச் சாதிப் பெயராக இருப்பதாலும் பண்ணையார் மள்ளராகவே அடையாளப் படுத்துவதாக இப்பாடலின் பொருள் அமைகிறது. இதனால் பண்ணையார் யார் என்ற ஒற்றை அடையாளம் அழிக்கப்பட்டுவிடுகிறது. இப்படியே நாம் நிறைய இப்பிரதி குறித்து உரையாடல் நிகழ்த்த முடியும்.

### பள்ளியர் ஏசல்

பள்ளு நூலின் மிக ஆற்றல் மிக்க பகுதி இந்த ஏசல் பகுதிதான். இதில் மூத்த பள்ளியும் இளையபள்ளியும் பள்ளனின் (கணவன்) அன்பைப்பெறப் போட்டிபோடுகின்ற முறையில் இந்த ஏசல் உரைடயாடல் தொடங்கி அது சைவம்/வைணவ சமயங்களின் பெருமை பேசுவதாக வளர்ந்து கடைசியில் இரு சமயக்கடவுளும் ஒருவரே என்று சமரசமாகி ஒரு கணவனை இரு மனைவியரும் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்வதாக முடிவது வழக்கம். இந்த உரையாடல்கள்கூடச் சைவம் தழைத்தோங்கிய தமிழ் நிலத்தில் வைணவத்தையும் அதற்கு நிகராகக் கட்டமைக்கும் அதிகாரமையத்தின் செயல்பாடு வெளிப்படக் காண்கின்றோம். காரணம் 17ஆம் நூற்றாண்டில் தமிழகத்தின் பெரும் பகுதியை ஆண்ட நாயக்க மன்னர்கள் வைணவ சமயத்தவராக இருந்ததால் இந்தச் சர்ச்சை மக்கள் முன்பு நிகழ்த்தப்பட்டு இரு கடவுளரும் ஒருவரே என்ற கருத்தாக்கம் நிலைநிறுத்தப்பட்டுள்ளது என்றும்'

கருதலாம். இதற்குப் பெரிய சான்று மதுரை மீனாட்சியம்மன் திருவிழாவையும் (சைவம்) அழகர் (வைணவம்) திருவிழாவையும் இணைத்துச் சித்திரைத் திருவிழாவாக்கியவர் திருமலை நாயக்கர்தான் என்பது வரலாற்றுச் செய்தி. ஏசல் பகுதி பேச்சு மொழியில் அமைந்திருப்பது ஒரு சிறந்த நாடகப் பிரதியாக்கம் ஆகும். காரணம் பேச்சுமொழி மிகமிக அடத்தியான சமூகத்தன்மை கொண்டது. இவ்வுத்தி மக்களிடம் பரவப் பெரிதும் துணைபுரியக் கூடியது. இவ்வகையில் கட்டப்பட்டுள்ள பள்ளுப் பிரதிகளில் பல முடிச்சுகள் அவிழ்க்கப்பட வேண்டியுள்ளன. இப்போதைக்கு இதை நாம் இங்கே ஒத்தி வைக்கின்றோம்.

## அடிக்குறிப்புகள்

1. சக்திப்பெருமாள், தமிழ் நாடக வரலாறு, ப.156.
2. சுரேஷ், எம்.ஜி., பின் நவீனத்துவம் என்றால் என்ன?, ப.99.
3. மேலது, ப.102.
4. ஜமாலன், மொழியும் நிலமும், ப.204.
5. மேலது, ப.205.
6. மேலது, ப.206.
7. இராதாகிருஷ்ணன், வி. (தமிழாக்கம்), உலக வரலாற்றில் பெண்கள், ப.90.
8. முத்துமோகன், ந., அமைப்பியல் பின் அமைப்பியல், ப.92.
9. குருசாமிசித்தர், ப. பள்ளு இலக்கியங்களில் நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்த செந்நெல் முதுகுடியினர் வாழ்வியல், ப.58.

# 10. அதிகாரக் கட்டமைப்பும் கட்டவிழ்ப்பும்

மனிதனின் குறி (Sign) அவனது மொழி. மொழியால் எப்படி அவன் உணர்த்தப்படுகிறானோ அப்படியே அவன் நிர்ணயிக்கப்படுவான் அல்லது விளங்கப்படுவான் அல்லது புரிந்து கொள்ளப்படுவான். அதாவது மனிதன் என்பவன் அவன் பயன்படுத்தும் மொழியே என்று மொழியியல் அமைப்பியல்வாதி டிசசூர் (De Sassure) குறிப்பிடுவார்.[1] ஒரு குறி பிற குறிகளுடன் கொள்ளும் உறவுகளால் (Exchange Relations) அக்குறியின் மதிப்பு நிர்ணயிக்கப்படுகிறது. அதாவது ஒரு சொல் என்பது ஒரு குறி, இத்தகைய பல குறிகளின் இணைப்பிலான அமைப்பே மொழி என்பது அவரின் கருத்து. இதனடிப்படையில் தான் மனிதனிடம் வாழும் மொழி, அம்மொழியால் அவன் அடையாளப் படுத்தப்படும் தன்மையில் மேன்மை அடைகின்றது. அதாவது பொருள் கொள்ளப்படுகிறது. ஆனால் மொழிக்கும் அது பிரதிநிதித்துவப்படுத்துகிற பொருளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை.

மொழி என்பது ஒன்றுக்கொன்று வித்தியாசப் படுத்திக்காட்டும் ஒரு வகை அமைவு மட்டுமே ஆகும். யானை என்ற மொழிக்கும் (சத்தம்) யானை என்று குறிக்கப்படும் விலங்குக்கும் (கருத்து) யாதொரு தொடர்பும் இல்லை. பூனை என்பதிலிருந்து வித்தியாசப்படுத்திக் காட்டும் ஒரு சொல்தான் யானை. "போக்குவரத்து சிக்னல்" விளக்குகளில் சிவப்பு, பச்சை, மஞ்சள் போன்ற வண்ணங்கள் எப்படிப் பயன்படுகின்றனவோ அப்படித்தான் நாம் மொழியைப் பயன்படுத்துகின்றோம். போக்குவரத்து சிக்னலில் எரியும் சிவப்பு வண்ண விளக்குகளுக்கும் 'நில்' என்ற கருத்துக்கும் இயல்பாக எந்தவிதமான தொடர்பும் இல்லை. சிவப்பு மஞ்சள் பச்சை போன்ற மூன்று வண்ணங்களும் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதாலேயே அவை அதற்கான அர்த்தங்களைப் பெறுகின்றன."[2] சசூர் குறி (Sign) என்பதில் அதாவது மொழியில் குறிப்பான் (Signifier) குறிப்பீடு (Signified) என்ற இரு பிரிவுகளையும் சேர்த்துக் குறியியல் (Semiotics) எனும்

கோட்பாட்டை விளக்குகின்றார். இங்கே இதனைப் புரிய வழக்கமாக நாம் அடிக்கடிப் பயன்படுத்தும் எடுத்துக்காட்டையே காணலாம்.

ரோசாப்பூ
(Sign-குறி)



குறிப்பான் (Signifier)
காதலின் அடையாளம்
பொருளாகக் குறிக்கப்படல்

குறிப்பீடு (Signified)
காதலாகவே
அர்த்தப்படுத்தப்படல்

**குறி பற்றிய விளக்கம்**

சொல் என்பது ஒரு குறி. காட்டாக, ரோசா என்பது ஒரு சொல். இந்தக்குறி அல்லது இந்தச் சொல் யாரோ ஒருவருக்கு, ஏதோ ஒன்றாக ஏதோ ஒரு முறையில் விளங்குவதாகும் (Sign is something which stands so somebody for something in some respect or capacity). இங்கு ஒரு பொருள் ஏதோ ஒன்றாக நிற்கிறது. அப்பொருளாக நிற்கவில்லை. ரோசாப் பூக்கள் செடியில் நிற்கும்போது வெறும் ரோசாப்பூக்கள்தாம். ஆனால் அந்தப் பூக்கள் காதலுக்கு அடையாளமாக ஒருவருக்குக் கொடுக்கப் படும்போது அந்தப் பூங்கொத்து குறிப்பான் (Signifier) ஆகிவிடுகின்றது. காதல் என்பது அந்தக் குறிப்பானால் அர்த்தப்படும் குறிப்பீடு (Signified) ஆகிவிடுகிறது. இப்போது வெறும் ரோசாப்பூ காதலைக் குறிக்கும் குறி ஆகிவிடுகின்றது.[3] இதனையே மேற்காட்டிய வரைபடம் நமக்குக் காட்டுகிறது. இங்கு நாம் தெரிய வேண்டியது ரோசாப் பூவிற்கும் காதலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. ஆனால் காதலை ரோசாவின் அடையாளத்தில் குறிப்பீடாக்கிக் காட்டுவதனை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். அதாவது ரோசாப்பூவின் மீது காதல் குறிப்பீடு ஏற்றப்பட்டிருக்கிறது அவ்வளவே. இதிலிருந்து ஒரு சொல் ஒரு பொருளைக் குறிக்கும் குறிப்பானாகவும், குறிப்பீடாகவும் எவ்வகையில் செயலாற்றுகின்றது என்பதை

அறிகிறோம். இங்கே நாம் புரிந்து கொள்ள வேண்டியது மொழியின் மூலம் தான் ஒரு சமூகம் கட்டமைக்கப்பட்டுள்ளது. ஆக இதுவரையிலான எல்லாச் சித்தாந்தங்களும் படைப்புக்களும் திட்டமிட்டு ஏதோ ஒரு வகையில் கட்டப்பட்டுள்ளதே. இதனை சசூர் "மொழி என்பது இலட்சியமாக்கப்பட்ட ஓர் ஒழுங்கமைவு" என்று வரையறை செய்வார். ஆக மனிதனை மொழிதான் அடையாளப்படுத்துகிறது என்ற புரிதலுக்கு இங்கே நாம் வந்துவிடுகின்றோம். மேலும் சித்தாந்தங்களை உருவாக்குகிற நகல் மொழி (இலக்கியம்) என்று இங்கே நாம் தெளிவுபெற முடியும். மனிதர்கள் சொற்களால் வளர்பவர்கள் சொற்களால் வாழ்பவர்கள் சொற்களால் அறியப்படுபவர்கள் என்று சொல்லப்படும் கருத்தும் இங்கே நினையக் கூடியது. ஆக, தேவையின்றி ஒரு சொல் எதன் மீதும் பயன்படுத்தப்பட்டிருக்காது. அவ்வகையில் நாம் பள்ளுப் பிரதியில் பார்த்தோமேயானால் மள்ளர் எனும் மருதநில உழவர்களைக் குறிக்கப் பல சொற்கள் பயன்படுத்தப் பட்டிருக்கினறன. அவை மள்ளர், பள்ளர், பண்ணாடி, குடும்பன், நீராணிக்கர், கடையர், காலாடி, செந்நெல் முதுகுடியினர், சேற்றுக்கால் செல்வர்கள், மருதநில மக்கள் என்று விரிகின்றன. இந்தச் சொற்களில் இவர்களின் அடையாளம் கண்ணுக்குத் தெரியாமல் கட்டமைக்கப்பட்டுள்ளது என்பதே சசூரின் குறியியல் கோட்பாடு தரும் பண்பாட்டு ஆய்வுக்கான செய்தி. அதன்படிப் பார்த்தால் மள்ளர்/பள்ளர் என்ற இரண்டு குறிகளை (Sign) மட்டும் நாம் இங்கே வருமாறு வரைபடமாக ஆக்கி அடையாளப்படுத்திக் கொள்ளலாம்.

**மள்ளர்**
(குறி- Sign)



| குறிப்பான் (Signifier) | குறிப்பீடு (Signified) |
| --- | --- |
| உழவர்கள் | முத்தமிழ் மரபினர் |
| வீரர்கள் | வேந்தன் மரபினர் |
| மருதநிலத்தவர் | மண்ணின் மைந்தர்கள் |
| | வேளாண் மரபினர் |

பள்ளர்
(குறி-Sign)



| குறிப்பான் (Signifier) | குறிப்பீடு (Signified) |
| --- | --- |
| 1. பள்ளத்தில் வாழ்பவர் | தாழ்த்தப்பட்ட சாதியினர் |
| 2. வேளாண் கூலிகள் | ஒடுக்கப்பட்டவர்கள் |
| 3. 16ஆம் நூற்றாண்டிற்குப் பின்னைய தமிழகவரலாற்றில் அறியப்படும் ஒரு சாதி | வரலாறு அற்றவர்கள் |
| | விளிம்புநிலை மக்கள் |

இந்த இரண்டு சொற்களிலும் இருக்கும் அர்த்தம் அந்த அந்தச் சொற்கள் பழக்கத்திற்கு வந்த வரலாற்றுக் காலத்துடன் இணைத்துப் பார்த்தால் இயல்பான கட்டமைப்பு எது? வலிந்து கட்டப்பட்டது எது? என்பதைத் தெரியலாம். சாதி எனும் கருத்தாக்கம் தோன்றாத சங்ககாலச் சொல்லான "மள்ளர்" என்ற குறியினுள் உழவர்கள்/வீரர்கள் என்ற குறிப்பீடு எத்தகைய சூழ்ச்சியும் இன்றி இயல்பாக இருந்து பொருள் தருவதைப் பார்க்கின்றோம். ஆனால் 17ஆம் நூற்றாண்டில் இடம்பெறும் "பள்ளர்" என்ற குறியினுள் மள்ளரை வலுக்கட்டாயமாகப் பள்ளு நூலாசிரியர்கள் கட்டமுயல்கின்றார்கள் என்பது வெளிப்படை. ஏன் இப்படியான கட்டமைப்பு மொழியில் இருக்கிறது என்று பார்த்தோமானால் அது அதிகாரத்தின் வெளிப்பாடாக இருக்கின்றது. "வாழும் மனிதன் ஒவ்வொருவனுக்கும் ஆசைகள் இருக்கின்றன. அந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்கு அதிகாரம் தேவைப்படுகிறது. ஏனெனில் அதிகாரத்தின் மூலம் மட்டுமே ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வது சாத்தியம். ஒருவன் தன் ஆசையை அப்படி அதிகாரத்தின் மூலம் நிறைவேற்றிக் கொள்ளும்போது மற்றவர்களின் ஆசைகள் விலக்கி வைக்கப்படுகின்றன. ஆசை விலக்கப்பட்ட மற்றவர்கள் தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள வேறு வழி ஏதாவது

தெரிகிறதா என்று தேடுகிறார்கள். மனித மனத்தின் எல்லாக் கோட்பாடுகளும் நம்பிக்கைகளும் மதிப்பீடுகளும் நசுக்கப்பட்ட ஆசைக்குரியவர்கள் தங்கள் ஆசைகளை அடைவதற்கான மாற்றுச் சாத்தியங்கள் (Alternative possibilities) இருக்கிறதா என்று தேடுவதன் விளைவாக உருவாவதே என்றார் நீட்ஷே. எனவே 'உண்மை', 'அறிவு' போன்றவற்றின் எல்லா வடிவங்களும் வெற்றியாளர்க்கும் விலக்கப்பட்டவர்களுக்குமான போட்டியின் விளைவாக நிகழும் சிந்தனை யுத்தத்தின் வெளிப்பாடுகளே. எனவே உண்மை என்பது அர்த்தப்படுத்திக் கொள்வதில் தான் இருக்கிறதே தவிர உண்மையான உண்மை என்று எதுவும் இல்லை என்றும் அவர் சொன்னார்."[4] இங்கே மள்ளராக வரலாற்றுக்குள்ளிருந்த மக்கள் வரலாற்றுக்கு வெளியே தள்ளப்படுவதையே முற்காட்டிய இரண்டாவது வரைபடம் நமக்கு ஒரு தகவலாகத் தருகிறது. அதே வேளையில் அன்றைய பாளையப்பட்டுக்கள் அதிகார மையங்களை மொழியின் மூலமாகக் கட்டுவதற்குப் பள்ளுப் பிரதிகளை ஒரு உத்தியாகப் பயன்படுத்தியிருக்கின்றன என்பதை நாம் இங்கு நினைவில் கொண்டுவரவேண்டும். பள்ளு நூல்களின் பாட்டுடைத் தலைவனுக்கு (ஜமீன் முதல் கடவுள் வரை)ப் பள்ளன் அடிபணிந்து அடிமையாண்டே என்று கூறும் பிரதிகளில் உண்மை என்பது இருக்க வாய்ப்பில்லை. ஆனால் அதுபோன்ற மாயையைப் பள்ளுப் பிரதிகள் படிக்கின்ற வாசகனுக்குள் ஏற்படுத்தத்தான் செய்கின்றன. இங்கே எட்டையபுரப் பள்ளு நூலைப் பதித்துள்ள த.பூமிநாகநாதன் கருத்து கவனிக்கத்தக்கது.

> "எட்டையபுரத்துத் தோன்றலான குமாரயெட்டேந்திரன் புகழைப் பாடுவதே இப்பள்ளு இலக்கியத்தின் சிறப்புறு நோக்கமாகும். இந்நோக்கத்தை நிறைவேற்றவே நூலாசிரியர் பள்ளுப் பிரபந்தத்தைக் கருவியாகப் பயன்படுத்தி உள்ளார். குமாரயெட்டேந்திரனே பாட்டுடைத்தலைவர். அவரின் பெருமையையே பள்ளியர் இருவரும் பாடிப் பாராட்டுகின்றனர். கவியும் தன் கூற்றாக அறிவுறுத்தல் செய்கிறார். இவ்வறிவுறுத்தற் போதனைகள் நூல் முழுவதிலும் ஊடுருவி நிற்கின்றன"[5]

என்பதை உறுதி செய்யும். பாட்டுடைத் தலைவனுக்கான ஆதிக்க வரலாறு கட்டுதல் நூல் முழுமையும் இடம் பெறுவதைக் காணமுடியும். காட்டாக இவனின் பெயர்கள் மட்டுமே

*குமார முத்து மகாராசன் (பா.எண்: 26)*
*குமார முத்தையா (பா. எண்: 12)*
*குமார முத்தேந்திரன் (பா. எண்: 156)*
*குமார யெட்ட குபேரன் (பா. எண்: 150)*
*குமார யெட்ட சிங்கம் (பா. எண்: 140)*
*குமாரயெட்ட நரேந்திரன் (பா. எண்: 61)*
*குமாரயெட்டபதி (பா. எண்: 62, 64)*
*குமாரயெட்ட பூபாலன் (பா. எண்: 147)*
*குமாரயெட்ட போசன் (பா. எண்: 26)*
*குமாரயெட்ட மகசுவாமி (பா. எண்: 4, 17, 158, 165)*
*குமாரயெட்ட மதுரைராசன் (பா.எண்: 152)*
*குமாரயெட்ட ராசேந்திரன் (பா. எண்: 29)*
*குமாரயெட்ட மவுத்தமன் (பா. எண்: 164)*
*குமாரயெட்டமால் (ப. எண்: 69)*
*குமாரயெட்ட விற்பன்னன் (பா. எண்: 154)*
*குமாரயெட்டன் (பா. எண்: 14, 43, 149, 153, 155, 159)*
*குமாரவேல்மணி (பா. எண்: 200)*
*குமாரவேள் (பா. எண்: 160)*
*குமாரெட்டேந்திரன் (பா.எண்: 2, 3, 5, 6, 8, 10, 16, 18, 19, 44, 46, 52, 126, 131, 156, 161, 172, 173, 209)*
*குமாரெட்ட ராசதுரைப்பாண்டியன் (பா. எண்: 32)*
*குமாரெட்ட சங்கிராமன் (பா. எண்: 112)*
*குமாரெட்ட விற்பனன் (பா. எண்: 11)*
*குமாரரெட்டேந்திர பாண்டியன் (பா. எண்: 45)*
*குமாரரெட்டேந்திர துரை (பா. எண்: 7, 9, 27, 33, 34, 151, 160)*

என்று தொடரும் வரலாறு கட்டுதலில் ஒவ்வொரு பாடலிலும் மூன்று நான்கு வரிகள் பாட்டுடைத் தலைவனைப் புகழ்வதற்கே பயன்படுத்தப்படுகின்றன.

காட்டாக

> **"வீரசூரன் குமாரயெட்டம தீரன் மனது மகிழவே**
> **வேந்தன் குமாரமுத்தேந்திரன் பண்ணை"**
> **(எட்டையபுரப்பள்ளு, பா.எண்: 157)**

**என்றும்**

> **"வீம னெனுங் குமார எட்ட சாமி**
> **மனதுக் கிசைந்திடு மேலையூ**

*ரிளம் புனத்துப் பண்ணெயி*
*லேவே நின்று நடச்செய்தே"*
*(மு.கா. படி, பா.எண்: 163)*

என்றும் ஒரு பாடலில் இரண்டு, நான்கு அடிகள் இந்தச் சமீன்தாரை இந்திரன், சந்திரன் என்று பாடுவதற்கே ஆசிரியர் செலவிட்டுள்ளார். இப்பாடல்களையெல்லாம் கட்டவிழ்த்து விட்டால் அங்கே எட்டையபுரப்பள்ளு என்ற ஒரு நூல் முழுவதுமே கலகலத்து உதிர்ந்து விடும். இப்படித்தான் எல்லாப் பள்ளு நூல்களுமே பாட்டுடைத்தலைவனைப் பள்ளன்/பள்ளியர் பரவுதல் (வாழ்த்துதல்) போல் பாடுவதை ஒரு உத்தியாகக் கையாள்கின்றன. பெரும்பாலான பள்ளு நூல்கள் இறைவனுக்குப் பள்ளன் அடிமை, இறைவன் உறையும் பண்ணைக்குப் பள்ளன் அடிமை என்பதாகப் பொருள் மயக்கந் தருவது போன்ற நடையில் 'மள்ளர்களை' அடையாளமற்றவர்களாகக் காட்டுவதில் ஆர்வம் காட்டுகின்றன. தென்புதுவைப்பதி தேவாங்கப் பள்ளு இதற்கெல்லாம் ஒருபடி மேலே போய்

*"வேற்றொருவர் தம்மைப் பணியேன் தேவாங்கர்குல*
*மென்றவர்கள் தம்மைப் பணிவேன்"*
*(பாடல் வரி, 12)*

என்பது தேவாங்கர் என்ற ஒரு சாதியாரை மட்டும் பணிவேன் என்று மள்ளர்கள் கூறுவது போன்று வரலாறு கட்டியிருப்பது மிக நுணுக்கமான கட்டுதல் என்றே சொல்ல வேண்டும். முக்கூடற்பள்ளு இன்னும் கூடுதலாக அதாவது பள்ளன் திருமாலுக்கு அடிமையா? இல்லை பண்ணைக்கு அடிமையா? என்று வாசகன் பாடலை நேரடியாகப் புரிய முடியாதபடி அதே நேரத்தில் இவன் பண்ணை வேலையாள் என்பதாக ஒரு பிரதியைச் செய்திருப்பதைப் பார்க்கலாம்.

*"பத்திலே பதினொன்றாக*
*வைத்தானில்லை குடும்பன்*
*பண்டே சரடு கட்டிக்*
*கொண்டான் என்னை*
*முத்தமிழ் நாட்டழகர்*
*கொத்தடிமை யானுக்கு கான*
*முக்கூடல் மூத்த பள்ளி*
*நானே யாண்டே"*
*(முக்கூடற்பள்ளு, பா. எண்: 14)*

இப்பாடலில் முக்கூடலில் வாழும் திருமாலுக்கு நான் அடிமை என்ற பொருளும் பண்ணைக்கு நான் அடிமை என்ற பொருளும் வரும்படியாக ஆசிரியர் பாடியிருப்பதைப் பார்க்கின்றோம். காரணம் நேரடியாக இவர்களைப் பண்ணை வேலையாள் என்று சொல்ல முடியாத ஒரு சமூகச் சூழல் நிலவியிருந்தகாலம். இவர்கள் நிலத்திலேயே இவர்கள் கூலியாட்களாய்ப் போன நாம் முன்புகண்ட வரலாற்றை இங்கே நினைக்க முடியும். சரி இப்படியான ஒற்றை வரலாறு? ஒற்றை அதிகாரமையம்? ஒற்றை அர்த்தம்? இப்பிரதிக்குள்ளும் இல்லை அன்றைய சமூகச் சூழலிலும் இல்லை என்பதே உண்மை. அதற்கு ஒரே விடை அன்று தமிழ்நாட்டில் நடந்த ஆட்சி எது? அங்கே பிற சமூகத்தவர்கள் எப்படி இருந்தார்கள் என்று கேள்வி எழுப்பினால் அதற்கு விடை. மள்ளர்கள் அன்றைய வேற்று மொழி ஆட்சிக்கு எதிரான கலகக் குரல்களை எழுப்புபவர்களாக இருந்திருந்திருக்கின்றார்கள். இதனை இம்மக்களிடம் வழக்கிலிருக்கும் நாட்டுப்புற வழக்காறுகளில் காணக்கிடப்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். இதனை ஃபூக்கோவின் கருத்துடன் ஒப்பிட்டுப் புரிந்து கொள்ளலாம். "நம்முடைய அறிவு என்பது யாரோ ஒரு குழுவினர், ஒன்று இதுதான் உண்மை என்று முடிவெடுப்பது என்கிறார், ஃபூக்கோ. அதிகாரத்தை இந்த அறிவின் வெளிப்பாடாகக் கருதுகிறார். அதாவது உடல் பலத்தால் ஒரு மனிதனை வெற்றி கொண்டு அடக்குமுறைக்கு உள்ளாக்குவது போல் உற்பத்தி செய்யப்பட்ட அறிவின் பலத்தாலும் அதே போன்று அடக்குமுறையை நிகழ்த்த முடியும். சிறுபான்மையான அறிவைக் கட்டமைக்கும் குழு பெரும்பான்மையான மக்கள் மேல் பிரயோகிக்கும். இதுதான் உண்மை என்ற கருத்தியல் ஒரு தற்சார்பான உண்மையைக் கட்டமைக்கிறது"[6] என்று சொல்லி எல்லா உண்மைகளும் இவை போன்று கட்டமைக்கப்பட்ட உண்மைகளே (Constructed Truths) என்பார். "இது போன்று கட்டமைக்கப்பட்ட உண்மைகளை ஒவ்வொரு சமூகத்திலும் ஆளும் வர்க்கமும் தங்களின் மக்களின்மேல் பிரயோகிக்கும் போது அதைப் பெரும்பாலான மக்கள் நம்ப ஆரம்பிக்கிறார்கள். தெரியாத ஏதோ ஒரு உண்மையைவிடத் தெரிந்துள்ள இந்த உண்மை பரவாயில்லை என்ற சமரசத்துடன் அதை ஏற்றுக் கொள்கிறார்கள்."[7] என்ற ஃபூக்கோவின் வாதம் ஆளும் வர்க்கத்தின் அறிவு சார்ந்த அதிகாரம் கலை இலக்கியங்களில் எப்படிக்

கட்டமைக்கப்படுகிறது என்பதைப் புரிய நமக்கு உதவும். பள்ளுப் பிரதிகள் இதற்கு நிதர்சனமான சான்று. இருப்பினும் சசூரின் கோட்பாட்டின்படி குறிப்பான், குறிப்பீடு உண்டாக்கும் அடையாளம் நிரந்தரமானதில்லை. அவை மாறக்கூடியன என்று "பின் அமைப்பியல் குறிப்பாகத் தெரிதா, லக்கான் போன்றோர் விமர்சித்து மொழி உண்டாக்கும் குறிப்பானுக்கும் குறிப்பீட்டிற்குமான உறவு உறுதியானதாக, நிலையானதாக இல்லாமல் மிதக்கும் குறிப்பானாக (Floating Signifier) இருக்கிறது என்ற கருத்தாக்கத்தை முன்வைத்து மொழிக்கு ஒற்றை அர்த்தம், ஒற்றை அடையாளம் (Absolute Identity) உருவாக்கும் சாத்தியமென்பதெல்லாம் இல்லை என்றார்கள். குறிப்பானுக்கும் குறிப்பீட்டிற்குமான உறவே சார்புத் தன்மையுடையது எனும் போது அடையாளமும் சார்புத் தன்மையுடையதே என்று பின் அமைப்பியல் விளக்கியது."[8] இங்கேதான் ஆசிரியரின் மரணத்தை அறிவித்து அமைப்பியலைக் கேள்விக்கு உள்ளாக்கினார் ரொலான்பார்த். அதோடு ஒற்றை அர்த்தம் என்பது ஒரு பிரதிக்கு இல்லை. ஆசிரியன் கருத்தில் தோன்றிய ஒற்றைக் கருத்து வாசகனால் வாசிக்கப்படும் போது மாறிவிடுகிறது. பிரதிக்கு ஒற்றை அர்த்தம் என்பது இல்லாததால் அதை உருவாக்கிய ஆசிரியன் மரணமடைந்துவிட்டான் என்று சொன்னார். இதே காலக்கட்டத்தில் பார்த் குறிகளின் அர்த்தம் பொருள்படுத்திக் கொள்வதில்தான் (Interpretation) இருக்கிறது என்பதுகூடச் சரியில்லை; பொருள்படுத்தும் அர்த்தம் கூட மாறிக் கொண்டே இருப்பது ஆகும் என்று வாதிட்டார். இச்சூழலில்தான் எழுதப்பட்ட எல்லாமே பிரதி (Text) தான் அது கட்டவிழ்ப்புக்கு உரியது என்ற நிர்-நிர்மாணக் (De-constructive) கோட்பாட்டைத் தெரிதா முன்வைத்தார். இதன் பின்னர் இலக்கியச் சாம்பவான்களால் கட்டிவைக்கப்பட்டிருந்த எல்லாக் கோட்பாடுகளும் மடமடவெனச் சரிக்கப்பட்டன. ஒற்றை அர்த்தம், ஒற்றை அதிகாரம் என்பதெல்லாம் இதன்பின் கேள்விக்கு உள்ளாக்கப்பட்டுத் தகர்க்கப்பட்டது. பின் நவீனத்துவச் சிந்தனையின் அடிப்படையே கட்டப்பட்ட அடையாளங்களை அழிப்பது; விளிம்பு நிலையில் இருக்கும் வரலாற்றை மையத்திற்குக் கொண்டு விட்டுவிடுவது; அதிகாரமையத்தைக் கேள்விக்குள்ளாக்குவது; உடைத்த ஒன்றைத் திரும்பத் திரும்ப உடைப்பது; ஒழுங்கானதையெல்லாம் கலைத்துப்போட்டு மறுநிர்மாணம் செய்து பார்ப்பது; பின்பு

மீண்டும் ஒரு குழந்தை போல கலைத்துப்போட்டுக் கட்டுவது என்று வாசகனுக்கு எல்லையில்லாச் சுதந்திரம் கொடுத்தது. இதன்படி மள்ளரிய வாசிப்பில் நாம் இங்கே ஒரு விளையாட்டை நிகழ்த்திப் பார்க்கலாம்.

"வரலாறு எப்பொழுதுமே, அறிவின் ஒரு குறிப்பிட்ட வகையின் ஆதிக்கத்தை நிலை நாட்டும் நோக்குடன் அதாவது அதிகார பீடத்தின் ஆதிக்கத்தை நிலை நிறுத்தும் பொருட்டு மொழியைப் பயன்படுத்தி வந்துள்ளது."[9] "அறிவு மற்றும் ஆதிக்கத்தின் விளையாட்டினால் எந்தெந்த அர்த்தங்கள் அமுங்கிப் போயினவோ அல்லது அமர்த்தி வைக்கப்பட்டனவோ அவற்றைத் திறந்து உலகின் கவனத்துக்குக் கொண்டு வரமுடியும்"[10] என்று தெரிதா சொல்வது இங்கே நமக்கு மிகச் சாதகமாகிறது. பள்ளுப் பிரதிகளில் குறிக்கப்படும் மள்ளர்/பள்ளர் இருவரும் மருதநில உழவர்கள் என்று குறிக்கப்படுகையில் இயல்பாகவே பள்ளர் என்ற சொல்லின் அர்த்தத்தை மள்ளர் என்பதாகக் கொண்டு நாம் பின் நோக்கிச் சங்ககாலம் வரை வந்து மீண்டும் பள்ளுப் பிரதிக்கு மருதநில உழவராக வந்து போய்க் கொண்டே இருக்கலாம். பள்ளர் என்பதற்குப் பள்ளத்தில் வாழ்பவன் என்ற ஒற்றை அர்த்தத்தை மட்டுமே பள்ளுப் பிரதிகள் தரவில்லை. பள்ளர்தான் மள்ளர் என்ற ஒரு sub-Text-ஐ பள்ளுப் பிரதி உருவாக்கித் தந்திருக்கின்றது. வரலாற்று அடிப்படையில் மள்ளர்/பள்ளர் என்று உச்சரிப்பு வேறுபாடும் மொழித்தளத்தில் ஏற்பட்டிருக்கலாம் என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. மேலும் மள்ளர்களின் பல மேலான பண்பாட்டு அடையாளங்கள் பள்ளுப் பிரதிகள் முழுவதும் நிரம்பி வழிகின்றன. இதில் தேவையானதை மட்டும் எடுத்து மள்ளர் மரபை நாம் மீட்டெடுத்துக் கொள்ள முடியும். அப்படி மீட்டுப் பார்க்கும்போது இரண்டு வகையில் பார்க்கலாம். அதாவது ஒன்று பள்ளுப்பிரதிகளை இதுவரை மரபுவாதிகள் எப்படிப் பொருள் கொண்டு மள்ளர்களின் வரலாற்றை மேலெழாமல் பார்த்துக் கொண்டார்கள் என்பது ஒருவகை. இரண்டாவது வகை மறுவாசிப்புக்குப் பின்பு மள்ளர்களின் வரலாறு எப்படி விளிம்பு நிலையிலிருந்து வரலாற்று மையத்தளத்திற்குள் நகர்த்தப் பட்டுள்ளது என்பது.

## மரபுவழி வாசிப்பு




மரபுவழி வாசிப்பில் இவர்களின் வரலாற்றின் மையம் 'பள்ளர்' என்று அடையாளப்படுத்தப்பட்டிருப்பதும், இவர்களின் மேலான பண்பாட்டு அடையாளங்கள் விளிம்பு நிலைக்குத் தள்ளப்பட்டிருப்பதையும் காண்கிறோம்.

## மறுவாசிப்பு




மறுவாசிப்பில் 'மள்ளர்' இவர்களின் மேலான பண்பாட்டு அடையாளங்கள் வரலாற்றின் மையத்தில் இருப்பதையும் இவர்களின் மேல் கட்டப்பட்ட பொய்யான கட்டமைப்புடைய அடையாளங்கள் வரலாற்று விளிம்பிற்குத் தள்ளப் பட்டிருப்பதையும் பெறுகிறோம். இவ்வகையில் ஒரு அதிகாரமையம் உருவாக்கி வைத்திருந்த சித்தாந்தத்தை, பெரிய கருத்து மையத்தை (Logo Centrism)க் கொட்டிக்கவிழ்த்துவிட்டு மறுக்கப்பட்ட வரலாறு ஒரு பெருங்கதையாடலாய் (Meta Narrative) பயணம் செய்வது இந்த மறுவாசிப்பால் சாத்தியமாகின்றது என்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

## அடிக்குறிப்புகள்

1. தமிழவன், ஸ்ட்ரக்சுரலிசம், ப.24.
2. சுரேஷ், எம்.ஜி. பின்-நவீனத்துவம் என்றால் என்ன? ப.57.
3. தமிழவன், தமிழும் குறியியலும், ப.2.
4. சுரேஷ், எம்.ஜி. மு.கா.நூ. ப.93.
5. பூமிநாகநாதன், எட்டையபுரப்பள்ளு, ப.8.
6. சுரேஷ், எம்.ஜி. மு.கா. நூ, ப.93.
7. மேலது, ப.93.
8. நடராசன், தி.சு., இராமசாமி, அ., பின்னை நவீனத்துவம் கோட்பாடுகளும் தமிழ்ச்சூழலும், ப.45.
9. கோபிசந்த் நாரங்க், அமைப்பு மையவாதம் பின் அமைப்பியல் மற்றும் கீழைக்காவிய இயல், ப.222 (மொழிபெயர்ப்பு)
10. மேலது, ப.222.

# 11. மையம் இழந்த பள்ளுப் பிரதிகள்

நான் இந்த மறுவாசிப்பை எப்படித் தொடங்கினேனோ அதே இடத்திற்கு வந்து என் வாசிப்பை முடித்துக் கொள்கின்றேன்.

**"ஒரு புத்தகம் தன்னைத்தானே தகர்த்துக் கொள்கிறது"**

**"உலகில் எந்தக் கருத்தும் இறுதியானதல்ல"**

**"ஒரு பிரதிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தம் இருக்கிறது"**

**"எழுதப்படுவதைவிடப் புரிந்து கொள்வதில்தான் பிரதியின் பொருள் இருக்கிறது".**

என்று பின் நவீனத்துவம் ஒரு பிரதியின் மேல் வைக்கும் விமர்சனத்தின் படிதான் இந்த நூலில் இடம்பெற்றுள்ள வாசிப்பு முறை அமைந்திருந்ததை அறிவீர்கள். இந்த வாசிப்பில் பள்ளுப் பிரதிகளில் கட்டிவைக்கப்பட்டிருந்த ஒற்றை மைய அர்த்தம் எனும் அமைப்பு (Logo Centrism) கட்டுடைக்கப்பட்டுச் சிதறடிக்கப்பட்டுவிட்டது. இப்பொழுது பிரதி அதன் அர்த்தக் கட்டுமானம் இழந்து பன்மைத்தன்மையுடையதாக ஆகியுள்ளது. பார்த்தின் "பிரதி தன்னுடைய தந்தையின் கையொப்பமின்றிப் படிக்கப்படுகிறது" (The text is Read without the Father's Signature) என்ற பொன்மொழி ஆசிரியரைத்தாண்டிப் பிரதியையும் தாண்டி நாம் வாசித்த மறுவாசிப்பிற்கு அழுத்தம் தருவதாக அமைகிறது.

இந்த நூலிலுள்ள பத்து இயல்களிலும் மள்ளர்களின் மருதநில வேளாண் பண்பாட்டு அடையாளங்களைப் பள்ளுப்பிரதி தரும் ஒற்றை அர்த்தத்திற்கு எதிராகக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளேன். இதனால் பள்ளுப்பிரதிகள் முன்னிறுத்திய "பள்ளர்" எனும் அடையாளம் வலுவிழந்து மள்ளர் எனும் வரலாற்று அடையாளத்துக்குள் தேவேந்திர குல வேளாளர்கள் வந்து நிறுத்தப்பட்டிருக்கின்றார்கள். இந்த மறுகட்டமைப்புக்கு (De-constructive) பள்ளு நூல்களில்

இடம்பெற்றுள்ள உட்பிரதிகளும் (Inner Text) துணைபுரிந்தன. இதனால் என்ன ஆனது என்றால் பள்ளு நூல்களில் "பள்ளர்" என்று அதிகாரமையம் கட்டிவைத்திருந்த ஒற்றை அடையாளத்திற்குள்ளானவர்கள் "**மள்ளர்களாகி**", பள்ளுப் பிரதியை விட்டுக் கடந்து மருதநில மக்களாய்த் தமிழிலக்கியப் பரப்பு முழுவதும் பயணிக்கும் வரலாற்று மாந்தர்களாய் ஆக்கப்பட்டுவிட்டனர். இதனால் சமூகத்தளத்தில் பள்ளுப் பிரதிகள் எழுப்பியிருந்த பொய்யான ஆதிக்கக் கட்டுமானம் இடித்துத் தள்ளப்பட்டுவிட்டது. அங்கே இப்பொழுது இருப்பது இந்த மண்ணின் பூர்வீகத் தமிழர்களின் வேளாண் வாழ்வியல் மட்டும்தான். அதளபுதள ஜமீன்தார்கள் எல்லாம் அங்கே காட்சிப் பொருளாக மட்டுமே அர்த்தப்படுத்திக் கொண்டிருக்கின்றார்கள். பள்ளுப் பிரதிக்குள் உயர்வு/தாழ்வற்ற ஓர் உழவர்குடி மட்டுமே உலவுவதால் பழைய பிரதிகள் செத்து அர்த்தமிழந்துகிடக்கின்றன. மறுவாசிப்பில் உயிர்த்தெழச் செய்யப்பட்ட இந்த உழவர்கள் ஏற்றத்தாழ்வற்றவர்கள்; உழைக்கும் மக்கள்; எளிமையான வாழ்வுக்குச் சொந்தக்காரர்கள்; இந்த மண்ணின் அசல் மைந்தர்கள்; இந்த மண்ணுக்குச் சொந்தக்காரர்கள் இதனால் ஆதிக்கவர்க்கம் கட்டிய அதிகாரப் பிரதிகள் மரணித்துக்கிடக்கின்றன. அவை இனி உயிர்பெறவே முடியாது. காரணம் நான் எனக்கானதைத் தேடி எடுத்து வந்து விட்டேன். என்னளவில் பள்ளுப்பிரதிகள் செத்துப் போனவையே. எனக்கு இனிமேல் உழத்திப்பாட்டு தேவைப்படின் இம்மக்களிடம் இருக்கிற வழக்காறுகள் போதுமானது. இங்கே எனக்கான தகவலை எல்லையற்றுத்தேடமுடியும். இங்குள்ள பள்ளுப் பிரதிக்கு (உழத்திப்பாட்டு) ஆசிரியர் இருக்கமாட்டார். அதனால் இங்கே வரலாறு கட்டப்பட்டு இருக்காது; அதற்கு மாறாக வரலாறு இயல்பானதாக இருப்பதைக் காண்கின்றேன். ஒற்றை ஆசிரியன் என்பவன் உழத்திப்பாட்டில் இல்லை. இங்கே ஆசிரியர்கள் கோடிக் கணக்கில் இருக்கிறார்கள். பிரதிகளும் கோடிக்கணக்கில், மில்லியன் கணக்கில் தோன்றி மறைந்து கொண்டே இருப்பதால் இங்கே ஒற்றை அர்த்தம் இருக்காது. இதனால் இந்தப் பிரதி எல்லாருக்குமானதாகிறது. இந்த மக்கள் பிரதிகள் (நாட்டுப்புறப்பாடல்கள்-உழத்திப்பாட்டு) தரும் பிரதி இன்பம் பள்ளுப் பிரதியில் இல்லை. இங்கே நிறையத் திட்டமிட்டுக் கட்டப்பட்டுள்ளன. யாரோ ஒரு பண்டிதன் (அதிகார மையத்தின் பிரதிநிதி-ஆசிரியன்) பள்ளுப் பிரதிக்குள்

இருந்து கொண்டு அவனுக்கானதை எனக்குள் திணிக்கின்றான். அவன் உணர்ந்ததை அவன் ஏற்றதை நீயும் உணர், ஏற்றுக்கொள் என்று வாசகனான எனக்கு வகுப்பு எடுப்பது போல் பள்ளுப் பிரதியின் ஆசிரியன் செயல்படுகின்றான். இந்த ஆதிக்கப் போதனை எனக்குள் ஒரு ஒவ்வாமையை அடிக்கடி உண்டு செய்துவிட்டதை நான் நிறைய உணர்ந்தேன்.

நான் இந்த எழுத்துரையை எழுதத் தொடங்கும்போது 1995 முதல் 2005 வரை தமிழிலக்கியம், வரலாறு, கல்வெட்டு, பண்பாடு என்று நான் தேடித் தொகுத்திருந்த மள்ளர்களின் வாழ்வியல் குறித்த ஏராளமான சான்றுகளை இந்த வாசிப்பிற்காகப் பயன்படுத்தலாம் என்று மேசை மீதும் அறை முழுவதும் பரப்பி வைத்திருந்தேன். ஆனால் நான் திட்டமிட்டு வைத்திருந்த 100 விழுக்காடு தேடுதல் சான்றுகளில் ஒரு விழுக்காட்டைக் கூட இந்த நூலுக்குள் நான் சேர்க்க முடியவில்லை. இதற்குக் காரணம் "மள்ளரிய வாசிப்பில்" ஏற்கெனவே நான் பல முறை இப்பிரதிகளை வாசித்து விட்டதால், இந்தப் பிரதிகள் என்னைப் பிரதிகளுக்கு வெளியே சென்று தேட வைத்து விட்டன. பிரதிதரும் பொருளுக்குள் நான் பிரவேசிக்கவே முடியவில்லை. ஒருவேளை இந்த வாசிப்பு தற்சார்புத் தன்மையுடன் கூடியதாக (Subjectivity) இருப்பதால் தானோ என்னவோ எனக்குள் இந்த அனுபவம். பள்ளியர் ஏசல் என்றால் சைவம்/ வைணவம் சமயப் பூசல் நடந்த காலத்தை ஆய்வு செய்யத்தான் எனது தீவிரமான வாசிப்பு இழுத்துச் சென்றதே தவிர, பிரதி தரும் நேர்பொருளை ஏற்க என்னால் முடியவில்லை. வையாபுரிப்பள்ளு பள்ளியர் ஏசலில் சிவனைப் பள்ளனாக மாறினவன் என்று வரும்போது அதுகுறித்து நான் கோவை, பேரூர்ப் பட்டீஸ்வரர் கோயிலில் அந்த விழாநடக்கும் காலங்களில் ஏன் இப்புராணம் சொல்லப்படுகின்றது என்று ஒரு சமூக வரலாற்று ஆய்வைத்தான் என்னால் நிகழ்த்த முடிந்தது. மல்லாண்டை என்றால் என்ன என்று எனது தேடுதலை இன்றுவரை பிரதிக்கு வெளியே வைத்துத்தேடி வருகின்றேன். பாட்டுடைத் தலைவர்களின் பெருமைகள் பள்ளியர்களால் பேசப்படுவது போல ஆசிரியன் வரலாறு கட்டுகையில் அதில் எந்தளவிற்கு உண்மை இருக்கிறது என்றே நான் வரலாற்றில் தேட முயன்றேன். பலவற்றுக்கு ஆதாரமே இல்லை என்பதே நான் கண்ட வாசிப்பு அனுபவம். அங்கே வரும் வரலாறுகள், ஆதிக்கக்

கட்டுமானம் என்னைப் பாதிக்கவே இல்லை. ஆனால் உண்மையிருப்பின் ஏற்பதற்கு மறுப்பொன்றுமில்லை. காரணம் அது அதன் காலத்தது என்பதால் மாறுபட்ட கருத்துக்கு அங்கே வேலையில்லைதானே.

ஒரு வேளை நான் பிரதிக்குள் என்னை மட்டுமே தேடியதால் பிறரைக் காணமுடியாது போய்விட்டதோ என்று கூட எனது வாசிப்பின் முடிவில் நினைக்கின்றேன். பல நேரங்களில் பிரதியும் எல்லையற்ற தேடுதலை எதிர்கொள்ளும் பரந்த அறிவு எனக்கில்லையோ என்றும் யோசித்திருக்கின்றேன். இருந்தாலும் பள்ளுப்பிரதிகள் எதைக் கட்டியன, எதைத் தனது மையக்கருத்தாக உலவவிட்டன என்பதில் நான் கவனமாக இருந்ததால் அங்கிருந்த பெருங் கதையாடலுக்குள் நான் இழுத்துச் செல்லப்படவே இல்லை. அதே நேரத்தில் மையத்திலிருந்து விளிம்பு நிலைக்குத் தள்ளப்பட்டவர்களின் அடையாளங்களைப் பள்ளுப் பிரதிகள் முற்றிலும் மறைக்கமுடியவில்லை. அவை குறுங்கதையாடல்களாக (Micro Narrative)ப் பிரதி முழுவதும் தெளிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கதையாடலைத்தான் நான் என் வாசிப்பிற்கான தளமாக எடுத்துக் கொண்டேன். அப்படி என்றால் படைப்பாளனின் பெருங்கதையாடல் அர்த்தம் என்னவாகும் என்ற கேள்வி எழும். "அர்த்தத்தின் எந்த ஒழுங்கமைவுடனும் பிரதியை இணைக்கவும் படைப்பாளியின் கருத்தைத் தள்ளவும் வாசகனுக்கு முழு உரிமை உண்டு என்று கூறும் பார்த்தின்"[1] கருத்து இதற்குப் பதிலாக அமையலாம். காரணம் வட்டாரம் சார்ந்து பள்ளுப் பிரதிகள் செய்யப்பட்டதால் (Literary Works) அந்தந்த வட்டார மனிதர்களின் அடையாளத்தை முழுவதுமாகப் படைப்பாளனால் அழிக்க முடியாமல் ஆகியிருக்கிறது.

பழனி வையாபுரிப்பள்ளுவில் நீர் நிர்வாகம் செய்யும் தேவேந்திரர்களை நீராணிக்கர் என்று சமூகத்தளம் அடையாளப்படுத்தி இருக்கையில் பள்ளுப்பிரதி நீர்க்குடும்பன், நீர்க்கட்டி என்று தான் அறிமுகம் செய்ய வேண்டியிருக்கின்றது. அங்கே வேளாண் தொழில்நுட்பம் சார்ந்த கலைச்சொல் இயல்பாகவே படைப்பாளனுக்கு வந்து சேர்கின்றது. அவனால் இந்த வேளாண் அடையாளத்தைப் புறக்கணிக்க முடியவில்லை. இப்படி உருவாக்கப்பட்டதால்தான் முக்கூடற்பள்ளு நூலுக்கு அடுத்த நிலையில் வையாபுரிப்பள்ளு அதன் எல்லை தாண்டி

வெற்றி பெற்றுப் பலரால் பேசப்படுகிறது எனலாம். இதேபோன்று கோவை வட்டாரப் பள்ளு நூல்களில் இம்மக்கள் தேவேந்திர குலம், பண்ணாடி என்று அடையாளப் படுத்தப்பட்டிருப்பது மேற்சொன்ன காரணத்தால் தான் ஆகும். பல பள்ளு நூல்களின் பதிப்பாசிரியர்கள் "குடும்பன்" என்பதை அங்கு வரும் பாத்திரத்தின் இயற்பெயர் என்று கண்டிருக்கின்றனர். குடும்பன் என்பது இவர்களுக்கான "குலப்" பெயர்களில் ஒன்று என்பதை இவர்கள் அறிந்திருக்கவில்லை என்று என் வாசிப்பில் அறிந்தேன்.

எது எப்படி இருப்பினும் உரையாசிரியர்கள் மள்ளர்களை மருத நிலத்தவர், உழவர்கள் என்று கண்டிருப்பது மகிழ்ச்சி தரும் ஒன்று. பலர் மள்ளர்-மருதநில உழவர், பள்ளர்-மருதநில உழவர் என்று மயக்கமின்றி எழுதியுள்ளமை பள்ளுப் பிரதிகளை இன்னமும் வாழச் செய்கின்றது எனலாம். இருப்பினும் பின் நவீனத்துவம் சொல்வது போன்று கட்டமைக்கப்பட்டுள்ள எல்லாமே ஏதோ ஒரு வகையில் சார்புத்தன்மையுடையதே என்பதை நான் முழுவதும் என்னுள் ஏற்றே என் வாசிப்பைச் செய்துள்ளேன். இன்னும் சொல்லப் போனால் நான் பள்ளுப் பிரதிக்குள் எதையும் உடைக்கவில்லை! காரணம் அதுவாகவே அங்கு உடைந்துதான் கிடக்கின்றது.

"தகர்ப்பமைப்புவாத வாசிப்பு அர்த்த வித்தியாசங்கள் மற்றும் ஒத்திவைத்தலின் மீது பார்வையைச் செலுத்துவதால் தகர்ப்பமைப்பு ஆராய்ச்சி மரபு சார்ந்த அர்த்தத்தைச் செம்மையாகத் தாக்குகிறது. விமர்சகன் சென்று கண்டு பிடிப்பதற்கு வசதியாக, பிரதிக்கு மேலேயோ, அண்மையிலோ, தொலைவிலோ அதீதமான பிரசன்னத்துடன் இருக்கும் ஒன்றல்ல அர்த்தம். அர்த்தம் பிரதியினுள் உள்ளே பொதிந்திருக்கிறது; பிரதி இயற்றப்படும் போதே அது தன்னைத் தகர்ப்பதற்கான விதையை விதைத்துக் கொள்கிறது. ஏனெனில் மொழியின் அலங்கார ஒழுங்கமைவு தகர்ப்பமைவுக்கான வாசலைத் திறந்து விடுவதுதான் இதற்குக் காரணம். பிரதியில் அடங்கியுள்ள, அர்த்த உற்பத்திக்காக ஒன்றோடொன்று மற்போர் புரியும் சக்திகளைத் தேடிக் கண்டு பிடித்து அவற்றின் முரண்களையும், பரஸ்பர இணைப்பின் ரகசியங்களையும் வெளிப்படுத்தும் முயற்சியே தகர்ப்பமைப்பு ஆராய்ச்சி"[2] என்று தெரிதா சொல்வது போல பள்ளுப் பிரதிகளில் கட்டிவைக்கப்பட்டிருந்த சிக்கல் மிக்க

முடிச்சுகளை, முரண்களை நான் தேடிக் கண்டுபிடித்து அதன் உண்மையான பொருள் இதுதான் என்று உலகத்தாரின் கவனத்துக்குக் கொண்டு வந்திருக்கின்றேன். காரணம் ஒரு பிரதிக்கு எல்லாக் காலத்திலும் ஒரே பொருள்/ அர்த்தம் இருக்க நியாயமில்லை அல்லவா? இதனடிப்படையில் பள்ளுப் பிரதிகள் கட்டிவைத்திருந்த அர்த்தமானத்தில் தலையிட்டு அவற்றை எனக்கானதாக்கி வாசிக்க முயன்றிருக்கின்றேன் என்றே சொல்ல வேண்டும். இந்த வாசிப்பு எல்லையற்றது; முடிவில்லாதது. அதனால் எனது வாசிப்பை இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். நான் வாசித்தளித்த இந்த வாசிப்பும் இன்னொருவரால் வாசிக்கப்படுகையில் மறுவாசிப்புக்கு ஆட்படும் என்பதையும் தெரிந்தே இருக்கின்றேன். வாசிப்போம்! ஒற்றை அர்த்தம் தொலைந்து போகட்டும். வாசிப்புக்கு நன்றிகள்.

## அடிக்குறிப்புகள்

1. கோபிசந்த் நாரங், அமைப்புமையவாதம் பின் அமைப்பியல் மற்றும் கீழைக்காவிய இயல், ப.163.
2. மேலது, ப.220.

# பள்ளு நூல்கள்


1. அருணாசலம், மு. ப.(ப.ஆ.) (1944) திருமலை முருகன் பள்ளு, சக்தி காரியாலயம், சென்னை.

2. ஆவுடை அம்மாள் (1896) வேதாந்தப் பள்ளு, சாரதா விலாச அச்சுக்கூடம். (பிற விவரம் இல்லை)

3. இராமநாதன், எஸ்.பி. (ப.ஆ.) அகத்தியர் பள்ளு. இருநூறு, தாமரை நூலகம், சென்னை.

4. என்னயினாப் புலவர் முக்கூடற்பள்ளு நாடகம்.

5. கந்தசாமி, ந. (ப.ஆ.) (1967) செங்கோட்டுப் பள்ளு, பழகு தமிழ்ப் பதிப்பகம், மல்ல சமுத்திரம்.

6. காலிங்கராயர், எம்.ஜெ. (ப.ஆ.) (1942) செண்பகராமன் பள்ளு, கோட்டாறு.

7. கிருஷ்ணன், வி.ஸ்ரீ. (ப.ஆ) (1960) கட்டிமகிபன் பள்ளு. (Bulletin of The Oriental Manuscripts Library, Madras)

8. குமாரசாமி, வ. (ப.ஆ.) (1932) தண்டிகைக் கனகராயன். பள்ளு, யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷா அடிவிருத்திச் சங்கம், யாழ்ப்பாணம்.

9. குமாரசாமி, வ. (ப.ஆ.) (1935) கதிரைமலைப் பள்ளு, சென்னை.

10. சேதுரகுநாதன், ந. (ப.ஆ.) (1970) முக்கூடற் பள்ளு, கழகம், சென்னை.

11. சேவகப்பெருமாள், மு. (ப.ஆ.) (1960) சிங்காபுரிப் பள்ளு, சிங்கம்புணரி.

12. சோமசுந்தர தேசிகர் (ப.ஆ.) — **திருவாரூர்ப் பள்ளு.** (பதிப்பாண்டு, பதிப்பக விவரம் நூலில் சுட்டப் படவில்லை).

13. நாகராசன், ப.வெ. (1992) — **திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு,** சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

14. பூமிநாகநாதன், த. (ப.ஆ) (2000) — **எட்டையபுரப் பள்ளு,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

15. பூமிநாகநாதன், த. (2000) — **சாமிநாதப் பள்ளு,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

16. முகமதலி, சேமு. (ப.ஆ.) (1999) — **திருமக்காப் பள்ளு,** கே.எம். அஹமது முஹியதீன், கூத்தா நல்லூர்.

17. முத்துப் புலவர் — **மோரூர் நல்ல புள்ளியம்மன் பள்ளு.** (கையெழுத்துப் பிரதியிலிருந்து குருசாமி சித்தர் மள்ளர் மலரில் வெளியிட்டுள்ளார்)

18. வேலுசாமி கவிராயர், சொ.(ப.ஆ) (1930) — **கோட்டூர் நயினார்** குளுவ நாடகமும் பள்ளும், தேவக்கோட்டை.

19. ஸ்ரீநிவாஸய்யங்கார், பெரியன், வெ.நா. (ப.ஆ.) (1932) — **குருகூர்ப் பள்ளு,** திருஞான முத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி.

20. ஜம்புலிங்கம் பிள்ளை, சே.வே. (ப.ஆ.) (1956) — **பறாளை விநாயகர் பள்ளு,** மூன்றாம் பதிப்பு, சென்னை.

| | |
|---|---|
| *21. பிற விவரம் தரப்படவில்லை* | **மாந்தைப் பள்ளு,** துன்மதி ஆண்டு. |
| *22. . . . . . . . . . . . . . . . . . . (1891)* | **பொய்கைப் பள்ளு,** பாளையங் கோட்டை. |
| *23. . . . . . . . . . . . . . . . . . . (1938)* | **கண்ணுடையம்மன் பள்ளு,** நாட்டரசன் கோட்டை. |
| *24. . . . . . . . . . . . . . . . . . . (1971)* | **வையாபுரிப் பள்ளு,** பழனி ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தானம். |
| *25. . . . . . . . . . . . . . . . . . . (1979)* | **மாவைப் பள்ளு,** பதிப்பு முன்னுரையுடன், ர. தெய்வானை, அச்சிடப் பெறாத எம்ஃபில் பட்ட ஆய்வேடு (காகிதப் பிரதியிலிருந்து படியெடுக்கப் பட்டது), மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை. |
| *26. . . . . . . . . . . . . . . . . . . (1984)* | **நரசிங்கப் பள்ளு,** பதிப்பும் பின்புலமும், ந.ம.வீ.ரவி, அச்சிடப் பெறாத எம்ஃபில் பட்ட ஆய்வேடு, (ஏட்டுச் சுவடியிலிருந்து படியெடுக்கப் பட்ட பிரதி), மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை. |
| *27. . . . . . . . . . . . . . . . . . .* | **கஞ்சமி செட்டியார் பள்ளு,** காகிதப் பிரதியிலிருந்து பிரதி செய்யப்பட்டது, அரசினர் கீழ்த்திசை ஓலைச் சுவடிகள் நூலகம், சுவடி எண் R-2417, சென்னை. |

## மள்ளரிய ஆய்வு நூல்கள்


1. அறிவுநம்பி, அ. (1999) கம்பர் காட்டும் மள்ளர் மாண்பு, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு- மன்றம், கோவை-46.

2. கமலி கஜேந்திரன், தி. (2000) சங்க இலக்கியத்தில் மள்ளர் தம் மாண்புகள், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை.

3. கமலி, தி. (2000) மள்ளர் மள்ளனின் மாண்பும் வரலாற்றாளர் திரியும், தமிழர் பண்பாடு வரலாறு-03, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை-46.

4. குருசாமி சித்தர் & ஞானசேகரன், தே. (ப.ஆ.) (1996) தமிழர் பண்பாட்டு வரலாறு, தொகுதி-1, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை-46.

5. குருசாமி சித்தர் & ஞானசேகரன், தே. (ப.ஆ.) (1999) தமிழர் பண்பாட்டு வரலாறு, தொகுதி-2, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை-46.

6. குருசாமி சித்தர் & ஞானசேகரன், தே. (ப.ஆ.) (2000) தமிழர் பண்பாட்டு வரலாறு, தொகுதி-3, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை-46.

7. குருசாமி சித்தர் (1993) தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் அடிப்படைச் சான்றுகள், தேவேந்திர மன்றம், கோவை-46.

8. குருசாமி சித்தர் (2001) — பள்ளு இலக்கியங்களில் நெல் நாகரிகத்தைத் தோற்றுவித்த செந்நெல் முது குடியினர் வாழ்வியல், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.

9. குப்புராசு, கி.ஆ. (2001) — மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.

10. குருசாமி சித்தர், (2004) — சேர, சோழ, பாண்டிய மூவேந்தர் மரபினரின் அடையாளங்கள், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.

11. சண்முகபாரதி, செ. (1993) — இம்மானுவேல் தேவேந்திரர் (கதைப்பாடல் ஆய்வு), முத்தழகு பதிப்பகம், மதுரை.

12. ஞானசேகரன், தே. (2000) — இந்திய விடுதலைப்போரும் தேவேந்திரர்களும்- தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், சென்னை.

13. ஞானசேகரன், தே. (2000) — இந்திர விழா என்னும் நாற்று நடவுத் திருவிழா, மாமன்னர் பதிப்பகம், கோயம்புத்தூர்-46.

14. ஞானசேகரன், தே. (2000) — இந்திர விழா, மாமன்னர் பதிப்பகம், கோயம்புத்தூர்.

15. ஞானசேகரன், தே. (1998) தலித் சிந்தனை விவாதம், மாமன்னர் பதிப்பகம், கோயம்புத்தூர்.

16. ஞானசேகரன், தே. (2000) மள்ளரியமும் இலக்கியமும், தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், சென்னை.

17. ஞானசேகரன், தே. (2001) மள்ளர் சமூக வரலாறு, தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம், மதுரை.

18. தங்கராசு, பெ. (1975) பள்ளர் யார்? புரட்சிக் கனல் வெளியீடு, சென்னை.

19. தேவ ஆசீர்வாதம், இரா. (1977) மூவேந்தர் யார்? இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர்.

20. தேவ ஆசீர்வாதம், இரா. (1981) வேளாளர் யார்?, இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர்.

21. தேவ ஆசீர்வாதம், இரா. (1994) பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர், இராமதேவன் பதிப்பகம், 180, யாகப்பா நகர், தஞ்சாவூர்.

22. தேவ ஆசீர்வாதம், இரா. (1998) தமிழ் மூவேந்தர் மரபினரான தேவேந்திரர் வீழ்ச்சி, இராமதேவன் பதிப்பகம், தஞ்சாவூர்.

23. பரமேஸ்வரி, சி. (2000) தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும், அறிவகம், கோயம்புத்தூர்.

| | |
|---|---|
| *24. பரமேஸ்வரி, சி. (2000)* | மள்ளர் வாழ்வும் வழிபாடும், அறிவகம், பாரதியார் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர். |
| *25. மள்ளர், ஏ.வி.கே. (1998)* | மள்ளரும் சமூக விடுதலையும், சாதி ஆதிக்க எதிர்ப்பு முன்னணி, குனியமுத்தூர், கோயம்புத்தூர். |
| *26. மாரியப்பன், கு. (2005)* | மருத நிலத்து மள்ளர் இசை, மாமன்னார் அச்சகம், கோயம்புத்தூர். |
| *27. வேங்கடராமன், சு. (1998)* | பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபு, தேவேந்திர மன்றம், குருசாமி நகர், கோயம்புத்தூர். |

## அமைப்பியல், பின் அமைப்பியல், பின் நவீனத்துவ நூல்கள்


1. கோபிசந்த் நாரங்க் (2005) அமைப்பு மையவாதம் பின் அமைப்பியல் மற்றும் கீழைக் காவிய இயல், சாகித்ய அகாதெமி, புதுதில்லி.

2. சுரேஷ், எம்.ஜி., (2004) பின்நவீனத்துவம் என்றால் என்ன?. ஜே.எம். பிராஸஸ், சென்னை.

3. தமிழவன் (1992) தமிழும் குறியியலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

4. நடராசன், தி.சு. (1998) ராமசாமி, அ., பின்னை நவீனத்துவம் கோட்பாடுகளும் தமிழ்ச் சூழலும். விடியல் பதிப்பகம், கோயம்புத்தூர்.

5. பஞ்சாங்கம், க., (2003) நவீனக்கவிதையியல் எடுத்துரைப்பியல், காவ்யா பதிப்பகம், சென்னை.

6. பூரணச் சந்திரன், க., (1991) அமைப்பு மையவாதமும் பின்-அமைப்பு வாதமும், நிகழ் வெளியீடு, கோயம்புத்தூர்.

7. மார்க்ஸ், அ. (1996) பின் நவீனத்துவம் இலக்கியம் அரசியல், விடியல் பதிப்பகம், கோயம்புத்தூர்.

8. மார்க்ஸ், அ. (1997) உடைபடும் புனிதங்கள், விடியல் பதிப்பகம், கோயம்புத்தூர்.

9. முத்து மோகன், ந. (1998) அமைப்பியல் பின் அமைப்பியல், காவ்யா பதிப்பகம், பெங்களூர்.

10. ஜமாலன் (2003) மொழியும் நிலமும், புதுமலர் பதிப்பகம், ஈரோடு.

11. Fish, Stanley. Is there a text in this class? 1980.

12. Bleich, David. Readings and Feelings, 1975.

13. Iser, Waltgang. The Act of Reading, 1978.

14. Robert Diyanni. Reading Fiction, Poetry and Drama, Compact edition, Mcgraw Hill Higher education, United States of America, www.mhhe.com. pase out (இணையத் தளத்திலிருந்து எடுக்கப்பட்டு பயன்படுத்தப் பட்டது)

## பொதுவான நூல்கள்

ஆனந்த குமார், பா., (1997) இந்திய ஒப்பிலக்கியம், கியூரி பப்ளிகேஷன்ஸ், மதுரை.

இராசசேகரன், (1995) திருக்கோயில்களில் தொழில் சமுதாய உறவுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

இராசா, கி., (1998) இலக்கிய வகைத்திறனாய்வு, பார்த்திபன் பதிப்பகம், திருச்சிராப்பள்ளி.

இராமநதன், ஆறு. (1988) நாட்டுப்புறவியல் ஆய்வுகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

இராமலிங்கம், அரங்க. (1987) தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி 2-3, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

கச்சியப்ப முனிவர் (1994) திருப்பேரூர் புராணம், அருள்மிகு பட்டீசுவரசுவாமி தேவஸ்தான வெளியீடு, கோயம்புத்தூர்.

*கதிர்மகாதேவன் (1989)* தொன்மம், கதிரகம், இலட்சுமி வெளியீடு, மதுரை.

*கேசவன், கோ. (1981)* பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை, அன்னம் வெளியீடு, சிவகங்கை.

*சக்திப் பெருமாள் (1990)* தமிழ் நாடக வரலாறு ஜி. பதிப்பகம், மதுரை.

*சசிவல்லி (1985)* தமிழர் திருமணங்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

*சாமி சிதம்பரனார் (1974)* பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும், இலக்கிய நிலையம், சென்னை.

*சுப்பிரமணியன், கா. (1982)* சங்ககாலச் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

*சுப்பிரமணியன், ச.வே. (2000)* தொன்னூல் விளக்கம், தமிழ்ப் பதிப்பகம், சென்னை.

*செயராமன், ந.வீ. (1948)* சிற்றிலக்கியச் செல்வம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

*செயராமன், ந.வீ. (1980)* பள்ளு இலக்கியம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

*தமிழண்ணல் (1990)* புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தக நிலையம் மதுரை.

*நடராசன், தி.சு. (1996)* திறனாய்வுக் கலை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

*பக்தவச்சல பாரதி, சீ. (1990)* பண்பாட்டு மானிடவியல், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

*மறைமலை அடிகள் (1957)* வேளாளர் நாகரிகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி.

*மாதையன், பெ. (2004)* சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம் நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை.

**ஆங்கில நூல்கள்**

Gustav Oppert — The Dravidians - Or The Original In-habitans of India Asian Educational Services, New Delhi.

Hanumanthan, K.R. (1978) — Untouchability A Historical Study, Madurai.

Hutton, J.H. (1969) — Caste in India Its Nature Function and Origin, Oxford University Press, Bombay.

**கட்டுரைகள்**

*அருணா இராசகோபால் (2000)* தஞ்சை நில உற்பத்தி உறவுகள் தமிழர் பண்பாட்டு வரலாறு-3, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.

*அனுமந்தன், கே.ஆர். (1993)* தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப் பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டுமுறை. பாட்டாளி முழக்கம்.

*கலாரத்னவேல் (1999)* நாயன்மார்களும் தேவேந்திர வேளாளர்களும் இராசராச சோழன் பேரவை மதுரை.

*கிருஷ்ணசாமி, மா. (2000)* பழநி வட்டாரம் பழையூர் மஞ்ச நாயக்கன் பட்டி பூர்வீக வரலாறு, தமிழர் பண்பாட்டு வரலாறு -3 தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.

*சிவசண்முகம், சி. (1996)* — *ஒலியியல் அடிப்படையில் மள்ளர் பள்ளர் பெயர் மாற்றம் தமிழர் பண்பாடு வரலாறு-1, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.*

*ஞானசேகரன், தே. (1995)* — *சாதியின் தோற்றமும் வளர்ச்சியும், (தொடர் கட்டுரை) ஜூன், 1995-மார்ச், 1996) மள்ளர் மலர்.*

*தமிழ்ச் செல்வன், செ., (1996)* — *நாயக்கர் ஆட்சியினால் வீழ்த்தப்பட்ட தேவேந்திரர்கள் வீர வரலாற்றுக் கதைப் பாடல், தமிழர் பண்பாட்டு வரலாறு-1, தமிழர் பண்பாட்டு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.*

*மகேஸ்வரன், சி. (1996)* — *கொங்கு நாட்டில் மல்லாண்டை ஓர் அறிமுகம் தமிழர் பண்பாட்டு வரலாறு-1, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.*

*முத்துமணி, இரா. (1996)* — *தமிழகக் கிராமங்களில் தேவேந்திர குல வேளாளர்களுக்குக் கிடைத்து வரும் கோயில் மரியாதைகள், தமிழர் பண்பாட்டு வரலாறு-1, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.*

*மேஜர் கதிர் மகாதேவன் (1996)* — Who are the sons of the soil. *(ஆங்கிலக் கட்டுரை) தமிழர் பண்பாட்டு வரலாறு-1, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோயம்புத்தூர்.*

*வானமாமலை, நா. (1956)* — *பள்ளுப் பாட்டு வளர்ச்சி, சரஸ்வதி.*

வானமாமலை, நா. (1957) பள்ளுப் பாட்டு வளர்ச்சி, பக்.37-40, சரஸ்வதி.

## இதழ்கள்

குருசாமி சித்தர் மள்ளர் மலர்,
10/2 நால்வர் நகர்
பாரதியார் பல்கலைக் கழகம்
கோயம்புத்தூர்

தங்கராசு, பெ. பாட்டாளி முழக்கம்,
5/15, முகப்பேர் கிழக்கு
சென்னை.

# 1. பழனிச் செப்பேடு

*(இப்பட்டயம் மதுரை அருங்காட்சியகக் காப்பாட்சியர் என். சுலைமான், தமிழ்நாடு தொல்பொருள் துறை, உதவி இயக்குநர், தி.எஸ். அரிகரன் ஆகியோரால் வாசிக்கப்பட்டு 16.6.1995இல் இந்தியன் எக்ஸ்பிரஸ் இதழில் வெள்வந்தபின், மள்ளர் மலர் ஆசிரியர் டாக்டர் குருசாமி சித்தர் வசம் வந்த பின்னர் 1995 செப்டம்பர் மள்ளர் மலரில் வெளியிடப் பட்டதன் முழுத்தகவல் இங்கே வருமாறு அமைகின்றது. படிப்பதற்குச் சுலபமாக எழுத்துக்கள் இன்றைய வழக்கிற்கு ஏற்ப மாற்றப்பட்டுள்ளன. துணைத் தலைப்புகள் பதிப்பாசிரியரால் வழங்கப் பட்டவையாகும்).*

*வரி 1–3 கடவுள் வாழ்த்து*

உ ஆறுமுகன் துணை.

கூறுடை யாளும் வேத குணப்பெறும் குன்றும் ஞான
பேறுடை பழனி யன்னல் பெயறது மறுவி யெங்கள்
ஆறுமா முகவன் வயிகுள நகரமு மன்று தொட்டு
வீரதலப் பழனியென்றே விளங்கிய துலகம் மூன்றும்.

*வரி 3–8 முருகன் வாழ்த்து*

உ வைக நீடுக மாமழு மன்னுக
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக.
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே,
கருணைபொழி திருமுகங்க ளாறும் வாழி
கரகமலப் பன்னிரெண்டு கையும் வாழி
இருசரண மென்றலைமேல் நாளு மோங்க
இந்திர பதவிக் கப்பா லென்றும் வாழி
மறுபனியும் பைங்கடப்பன் தாருமாறும் வாழி
மயில்பரி சேவல்க்கொடியும் வாழி

மடந்தைதன் மயிந்தா வாழி
மாதவன் மருக வாழி வாழி
அடைந்தவர் துணைவா வாழி
அடியவர்க் கெளியாய் வாழி
திடம்புயன் வேலா வாழி
தேவரா ருயிரே வாழி
படந்தபேர் அசுரர் கூற்றன்
பரமனே வாழி வாழி

வரி 8–11 முருகன் மெய்க்கீர்த்தி

உ ஸ்ரீபுற தகன பரமேஷ்வரன் குமாரன், அருள் பரவி அமரர் சிறை மீட்ட தேவர்கள் தேவன், தெய்வலோக நாயகன் அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகன், கோகநகனை சரசமாடி குட்டி குடுமி நெஷ்ட்டை போக்கி கோல பரமபதம் கொடுத்த குமார கெம்பீரன்.

வரி 11–13 முருகன் வீரம்

கொக்கறு வரையாழி கொட்ட ராவுத்தன்
வக்கிரமிக அசுரேசர் வடநீரொப்பன்
உக்கிர மயிலேறிவரும் உத்தண்ட தீரன்,
பக்கரைப் பகட்டரக்கர் பட்டிட படைக் களத்தில்
கொக்கறித்துடல் கிழித்த குக்குடக் கொடிக் குமாரன்.

வரி 13–18 முருகன் மெய்க்கீர்த்திகள்

கூளி கொட்ட குகைப்பிசாசுகள்
தொக்கநிற்ற தாளமொற சூரன் மாழுவதற்கு
பாரிய நீலிய கச்சை கட்டி
பாரவே லெடுடத்த பராக்கிரம சேவுக தீரன்,
அசுரர் குலைகாரன், அமராபதி காவலன்,
தோடு சிரி காதினன், தோகைமயில் வாகனன்,
சீதரன் திருமருகன், சிவ சுப்பிரமண்யன்,
சண்டப்பிரசண்டன், அன்பர் கொரு மிண்டன்,
உத்தண்ட தேவாதிகள் கண்டன்,
ஆறாறு நூறாரு அஷ்ட்ட மங்கலம்
ஆவினங்குடி பழனிக்கதிபன்,
பகுத்தப் பிரியன், பகுத்தச் சீலன்,

பார்வதி புத்திரன், விக்கின விநாயகன்
தெய்வ சகோதரன், எல்லாத் தேவர்க்கும்
வல்லபனாகிய ஸ்ரீவீரப் பழனிமலை சுவாமியார்
திருவுளப்படிக்கு வீரவாகு தேவர் அருளிப்படல்

வரி 19–26 தமிழகத்தில் வடுகர் ஆதிக்கம்

ஸ்ரீமகாமண்டல ஈஷ்பரனாகிய அரியதழ விபாடன் பாசைக்குத் தப்புவராய கண்டன், மூவராய கண்டன் கண்ட நாடு கொண்ட நாடு குடாத மண்டலீகர் கண்டன், துலுக்கர் தளவியபாடன், துலுக்கர் மோகந் தவிர்ந்தான், ஒட்டியர் தளவியபாடன், ஒட்டிய மோகந் தவிர்த்தான்,சேரமண்டல பிறதாபனாசாரியன், சோழமண்டல பிறதாபனாசாரியன், பாண்டிய மண்டல பிறதாபனாசாரின், தொண்டமண்டல பிறதாபனாசாரியன் ஈழ யாழ்பாணம் எம்மண்டலமும் திறை கொண்டருளி துலயாத கம்பம் போட்டு அசையாமணி கட்டி ஆளும் பிரதாப ருத்திரனான வங்களர் சிங்கிளர் சீனகர் சோனகர் ஆரிய ரொட்டியர் பற்பலர் மதங்கர் மச்சலர் குச்சலர் மாளுவர் மலையாளர் கொங்கர் கலிங்கர் கருனாடர் துலுக்கர் மறவர் மராட்டிகரென்னபட்ட பதினென்பூமியும் ஏழு தீவும் சூழ்ந்த நாகலோக பெருந் தீவில் நரபதியாகிய பூரோக புரந்தர பூருவா பச்சிமா தெச்சனா ருத்திரா சத்த சமுத்திராபதி

வரி 26–31 வடுக அரசர் மேலாண்மை

ஸ்ரீவிசையநகரத்தில் வீர சிம்மாசனத்தில் பிரதாப ருத்திரரான புறவுடதேவ மகாராயர், புக்கராயர், அரிசிங்கு சமளுவ ராயர், கயிலேஷ்பர ராயர் டில்லி ஈஷ்வர ராயர், ராமபாண ராயர், நரசிங்க ராயர், வீரவசந்த ராயர் புருசோத்தம ராயர், மல்லிகாருச்சுண ராயர் மகாதேவ ராயர், சீரங்க ராயர், ஆனைகொந்தி வேங்கிட ராயர், ஸ்ரீராம ராயர், பெறதிம்ம ராயர், சிக்கு ராயர், இவர்கள் பிருத்வி ராச்சியபாரம் பண்ணி அருளாநின்று ஓதி உணர்ந்து உலக முழுதும் ஒரு குடைக்குள்ளண்டு இப்படி துஷ்ட்ட நிற்கிற சிஷ்ட்டை பரிபாலனம் செய்து

வரி 31–38 மதுரை நாயக்கர்கள் ஆட்சி – பட்டயத்தின் காலம்

இருநூற்றி இருவத்திநாலு கணவாய்க்கும், முப்பத்திரெண்டு மணியகாரருக்கும் எழுவத்திரெண்டு பாளையக்காரருக்கும்

அதிபதியாகிய ராய ராணுவங்களுக்கு கர்த்தரான நாகப்ப நாயக்கர் குமர கிஷ்ணப்ப நாயக்கர் கஸ்த்தூரிரங்கப்ப நாயக்கர் ரங்ககிஷ்ணப்ப நாயக்கர் திருமலை நாயக்கர் இவர்கள் நான் மாடக் கூடலில் மதுரை மாநகரில் வீற்றிருந்தருளி திக்கு விசையம் செய்து செகத்தம்பம் நாட்டி அசையா மணி கட்டி ஆறலொன்று கடமை கொண்டு அருள் பெறுக அன்பு கூர்ந்து யாகம சாலையும் அந்தணர் வேள்வியும் தண்ணீர் பந்தலும் தர்ப்ப சாயூச்சமும் இப்படி தருமத்துக்குள்ளாய் நடந்து வருகிற சாலியவாகன சகார்த்தம் 1450 கலியுக சகார்த்தம் 4629 செல்லா நின்ற துன்முகி வருஷம் தையி மாசம் 19 தேதி சுக்குர வாரமும், சதுர்த்தியும் உத்திர நட்செத்திரமும் பெற்ற சுபதினத்தில் கொங்கு வய்காபுரி நாட்டில் சண்முகநதி தீர்த்த வாசமாய் பழனிமலை மேல்

### வரி 38-44 தெய்வேந்திர வம்சத்தார் பட்டயம் சாட்சிகள்

ஆறு காலமும் அனந்த வடிவுமாய் மகாபூசை கொண்டருளிய சர்வ பரிபூரணச் சச்சிதானந்த பரபிரம மூர்த்தியாகிய பாலசுப்பிரமணிய சுவாமியார் சன்னதி முன்பதாய் இஷ்தானியம் சின்னோப நாயக்கர் சரவணைவேல் தபராசபண்டிதர் பழனியப்ப நம்பியார் அறவளர்த்த நம்பியார் பாணிபாத்திர உடையார் பானிக்கவுண்டன் தலத்து கணக்கு விருமையண பிள்ளை குமாரவேலாசாரியார் மற்றுமுண்டாகிய தானம் பரிகலத்தார் முன்பதாயி தெய்வேந்திர வம்மிஷத்தார்கள் அனைவோர்களும் கூடி தெய்வேந்திர மடம் ஆலயம் பழனிமலை உடையாருக்கு சத்திய சாட்சியாய் எழுதி கொடுத்த தரும சாதினமாகிய தாம்பூர சாதீன பட்டையம்.

## தெய்வேந்திரர் வரலாறு

### வரி 44-50 தேவேந்திரர் பிறப்பு - வரலாறு

தெய்வேந்திரப் பள்ளன் பிறப்பு. அந்திர் பத்திய பாதாள திருலோகத்தில் பிறவாகிய அண்டம் அடுக்கு தட்டு தாபறம் சங்கம துருவம் சந்திராள் சூரியாள் அஷ்டகுல பருவதம் சத்தசாகரம் மகாமேரு பருவதம் சத்த கண்ணியர் தேவர்கள் முனிவர்கள் முதலாகிய எறும்பு கடை யானை முதல் எண்பத்து நாங்கு நூறாயிரம் சீவ செந்துக்கும் பரமசிவனும் பார்வதாதேவியும் படியளந்து வருகிறபோது பூலோகத்திலுள்ள சீவ செந்துகளுக்கும் பரமேஷ்வரி செந்நெல் போசனம் குடுக்க

திருவுளத்தில் நினைந்து பரமேஷ்வரிடத்தில் சொல்ல பரமேஷ்வர் தேவர்களை அழைத்து ஆலோசிச்சு விசுவகருமாவானவர் சொல்லுவார்: சுவாமி தேவரீர் அனுகிரகத்தினாலே ஒரு குழந்தை உற்பத்தி செய்தால் அவனாலே பூலோகத்தில் சகலமான செந்நெல்லும் உற்பத்தியாகும் என்று சொன்னார்.

### வரி 50–55 வள்ளிக்கொடியில் குழந்தை வள்ளல் மகன்

ஈஷ்வரன் மனிக்கான தியானத்தினாலே முகாரவித்தத்தில் வேர்வை தோன்றி அந்த வேர்வையை வழித்து வயில் எரிய செலத்துடன் கலந்து மாடக்குளத்தில் வள்ளிக் கொடியில் தங்கி கெர்ப்ப உற்பத்தியாகி குழந்தையாக அழுதது. அழுகிற சத்தமுமிவள் கேட்டு சுவாமி இந்த அத்துவான ஆருன்னிய குளக்கரை பள்ளசாருவில் குழந்தைக் குரலேதென்று கேட்க சுவாமி சொல்லுவார் வாரும் பெண்ணே பூலோகத்தில் சகலமான செந்நெல்லும் கந்தமூல பாலாதிகளும் உண்டாக்கும்படியாக நீ சொன்னபடிக்கு ஒரு குழந்தை உற்பத்தி செய்தோமென்று சொல்ல

### வரி 55–59 ஈஸ்வரி குழந்தை வள்ளல் மகனுக்கு முப்பால் கொடுத்தது

ஈஷ்வரி மனமகிழ்ச்சி கூர்ந்து குழந்தையை எடுத்து முப்பால் கொடுத்து தகையாற்றி தெய்வேந்திரனை அழைத்து தெய்வேந்திரன் கையில் ஒரு காராம் பசுவும் கொடுத்து வள்ளல் மகனைப் பார்த்து வாராய் மகனே உன்னை எங்கள் பணிவிடைக்குப் பிள்ளையாக உண்டு செய்தோம். நீ தெய்வலோகத்துக்கு போய் இந்த காராம் பசுவின் பாலைச் சாப்பிட்டுக் கொண்டு சகலமான செந்நெல்லு உண்டு செய்வாயென்று கட்டளை இட்டார்.

### வரி 59–61 வள்ளல் மகன் தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிள்ளையாய் வளர்ந்து வருதல்

கட்டளைப்படியே தெய்வலோகத்துக்குப் போய் காராவின் மூன்று முலைப்பால் கறந்து ஈஷ்வரனுக்கும் ஈஷ்வரிக்கும் தெய்வேந்திரனுக்கும் கொடுத்து தானுமொரு முலைப்பால் சாப்பிட்டுக் கொண்டு தெய்வேந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிள்ளையாக வளர்ந்து வருகிற நாளையில்

**வரி 61–65 வள்ளல் மகன் பயிர் செய்தல்**

தெய்வேந்திரனுடைய சலக்க பிறவிடையில் நீரோடையும் பள்ள சாற்வும் கண்டு அதில் சிறிது வயல் வரம்புகள் உண்டு செய்து குச்சி கோலுகளை ஊன்றியும் சில சேறுண்டு செய்தும் தண்ணீர் விட்டுக் காப்பாற்றி வருகிற நாளையில் குச்சி கோல்கலெல்லாம் தழைத்து மாவிடை மரவிடை தென்னை கமுகு பலா எலுமிச்சை மஞ்சளிஞ்சி இப்படி அனந்த மற்ச வர்க்கமாச்சுது.

**வரி 65–70 வள்ளல் மகனின் முதல் செந்நெல்**

இந்த சேத்தில்லென்ன விரையை போடுவோமென்று ஈஷ்வரனை நோக்கி முறையிட்டான். ஈஷ்வரன் கருணை அன்பினால் அன்னங்கள் புறாக்கள் முதலான பச்சிகளெல்லாம் இரையெடுத்து வள்ளல் மகன் தோப்பிலிறங்கி விளையாடுகிறபோது அன்னப் பச்சியின் மூக்கில் நஞ்சு விரையானது ஒட்டியிருந்து வதியில் வீழ்ந்து வெள்ளி குருத்து போல முளைத்தது. முளைத்த நஞ்சு விரையின் பயிர்களைக் கண்டு தண்ணீர் விட்டு காப்பாத்தி வருகிற நாளையில் அமுர்தங்கொண்டு வேரிலே நஞ்சை போட்டு முடியிலே செந்நெல்லாக விளைந்தது.

**வரி 70–74 வள்ளல் மகன் முதல் செந்நெல் அரிசியை ஈஸ்வரனுக்குப் படைத்தல்**

விளைந்த செந்நெல்லை அறுத்து சிறிது அரிசி உண்டு செய்து ஈஷ்வரனுக்கு கொண்டு போற பால் கலசத்தில் சிறிது செந்நெல்லரிசியும் போட்டு கந்தமூல பாலாதிகளுடன் பால்க் கலசத்தை வையித்து நமஷ்க்கரித்தான். ஈஷ்வரன் கண்டு வாரும் வள்ளல் மகனே என்றைக்கும் சுத்த சூச்சமாய் வருகிறவன் இன்றைக்கி சேறும் சகதியுமாள் வந்தாயென்று கேட்க்க மவுனமாய் தலை கவிழ்ந்து நின்றான். ஈஷ்வரன் பால் கலசத்தை பார்க்கும் போது அன்ன மலராய் நிறைந்து இருந்தது.

**வரி 74–77 முப்பது முக்கோடி தேவர்களுக்கும் செந்நெல் சோறு படைத்தது**

நிறைந்த அன்ன மலரை முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் கந்தமூல பாலாதிகளுடனே செந்நெல் போசனம்

செய்வித்து வள்ளல் மகனை அழைப்பித்து வாராய் வள்ளல் மகனே மேடு பள்ள மண்ணறாய் நிரவி செந்நெல்லுண்டு செய்வாய் என்று ஈஷ்வரன் சொல்ல வள்ளல் மகன் சொல்வது சுவாமி மேடு பள்ளம் மொன்றாய் நிரவினால் லோகம் கட்டு கொள்ளாதென்றான்.

**வரி 77–81 சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்களை அழைத்துச் செந்நெல் சோறு படைத்தது**

அதனாலவனை பூலோகத்துக்கு அனுப்ப வேணுமென்று பூலோகத்து ராசாக்களாகிய சேரன் சோழன் பாண்டிய மூவராசாக்களையும் வரவழைத்து அவர்களுக்கு கந்தமூல பாலாதிகளுடன் செந்நெல் போசனம் செய்வித்து பாக்கிலை கொடுத்து ஈஷ்வரன் முன்பதாக அழைத்து வந்தார்கள். மூவராசாக்களும் தெய்வலோகத்தில் கந்தமூல பாலாதிகளுடனே செந்நெல் போசனம் மருந்தினபடியினாலே அனந்தம் தோத்திரங்கள் செய்து சொல்வார்கள்.

**வரி 81–86 வள்ளல் மகனை மூவேந்தர்கள் பூலோகத்துக்கு அழைத்து வருதல்**

சுவாமி எங்கள் தேச பூலோகத்திலுள்ள சீவ செந்துகளுக்கும் தேவர்களுக்கும் கமபு சோளம் கேவற முன்னை முஷ்ட்டை தவிர வேறே ரசவர்க்கம் இல்லாதபடியினாலே கந்தமூல பாலாதிகளுடன் செந்நெல்லுண்டு செயும்படியாக வள்ளல் மகனை பூலோகத்துக்கு அனுப்பித்தருள வேணுமென்று அனந்தம் தோத்திரங்கள் செய்தார்கள். அப்போது ஈஷ்வரன் கருணை மகிழ்ந்து விருமா விஷ்ட்டுனு தெய்வேந்திரன் விசுவகர்மா முதலான தேவர்களை ஆலோசித்து வள்ளல் மகனை பூலோகத்துக்கு அனுப்ப வேணுமென்று சகலமான விருதுகளுடனே சென்னல் விரையும் கந்தமூல பாலாதிகளும் மலைதகத்தான் என்கிற மண்வெட்டியும் குடுத்து பூலோகத்துக்கு அனுப்புகிற போது

**வரி 86–89 வள்ளல் மகன் தெய்வலோகத்திலிருந்து செந்நெல் கொண்டுவருவது**

செந்நெல் எல்லாம் பூலோகத்துக்கு போறதில்லை என்று சிறகு முளைத்துப் பறவையாச்சுது. பறந்த செந்நெல்லைப் பிடித்து

பொன் ஊசி கொண்டு மூக்குப்பூரி பொதி பிடித்து தெய்வேந்திரனுடைய வெள்ளை யானையின் பேறில் போட்டு மூவராசாக்களுடன் கூட்டி பூலோகத்துக்கு அனுப்பினார்.

**வரி 89-94 தெய்வக் கண்ணாளர் ஏர் செய்து கொடுத்தல்**

பூலோகத்தில் நாலு திக்கும் நீரோடையும் பள்ளச்சாற்வும் கண்டு அதில் சிறிது வயல் வரம்புகளுண்டு செய்து இதை சேறு செய்ய உழவு முஷ்த்தேதி வேணுமென்று தெய்வ கன்னாளனாகிய மனு ஆசாரி மகாசாரி இருபேர்களிடத்திலும் சொல்ல அவர்கள் இருபேரும் அனந்தம் ஏர்ச் சோடினை செய்து குடுத்தார்கள். வள்ளல் மகன் அதிக உபசாரத்துடனே வாங்கி தோளில் வைத்து கானகத்தில் நுழைந்து கரடி புலி யாழி சிம்ம இவையெல்லாம் ஓட்டி வந்து ஏரில் கட்டி உழுகிற போது மிருகங்களெல்லாம் அவஷ்த்தைப் பட்டு ஈஷ்வரனை நோக்கி முறையிட்டதுகள்.

**வரி 94-100 வள்ளல் மகன் உழுவதற்குத் தெய்வ லோகத்திலிருந்து மாடு, எருதுகள் கொண்டு வருவது**

பரமேஷ்வரன் நந்தி தேவரை அழைத்து வள்ளல் மகன் பூலோகத்தில் செந்நெல்லுண்டு செய்யும்படியான சில நந்தி வாகனம் உண்டு செய்து குடுக்க வேணுமென்று சொல்ல நந்தியேஷ்வரன் மகனக்கான தியானத்தினாலே வெள்ளைப்பசு வில்லைப்பசு காராம்பசு கவுலைப்பசு பில்லைப் பசு சிவலைப் பசு இப்படி அனந்தம் பசுக்களை உண்டு செய்தார். அப்போது தேவர்கள் மகிழ்ந்து அந்த பசுக்களிடமோ பிறந்த மயிலனன் சன்னவான் முகிலனன் இந்த இரண்டெருதுக்கு மின்சல்லி பின்சல்லி வீரவெண்டயம் களப கஷ்த்தூரிகளணிந்து வாரீர் நந்தி தேவர்களே நீங்கள் பூலோகத்துக்குப் போய் வள்ளல் மகனிடமாயிருந்து செந்நெல்லுண்டு செய்து சங்கிராந்தி முதலான நோன்புகளும் கொண்டாடி வருவீர்களென்று பூலோகத்துக்கு அனுப்ப

**வரி 100-102 வள்ளல் மகனின் மாட்டுப் பொங்கல்**

பசுக்களெல்லாம் பூலோகத்துக்கு வந்ததை வள்ளல் மகன் கண்டு சந்தோஷத்துடன் ஓட்டிவந்து மட்டானதம் பிறான மல்லாண்டய்யனார் வைத்து பச்சை பாளை போட்டு தூபம் குடுத்து இரண்டு எருதையும் ஏரில் கட்டி உழுது சேறு செய்து

நாத்துப் பாவி உழவுதொண்டி கணகழவு செய்து வருகிற நாளையில் நாத்துகள் முளைத்து நடவு பக்குவமாச்சிது.

**வரி 102–107 உபய ரம்பகைள் நடவு செய்ய வருதல்**

இந்த நாத்துகளை பிடிங்கி நடவு போட பெண்கள் வேணுமென்று மூவராசாக்களிடத்தில் சொன்னான். மூவராசக்களும் தெய்வலோகத்து செந்நெல்லானபடியினாலே இவ்விடத்தில் பருவம் தெரியாதென்று ஈஷ்வரனிடத்தில் சொன்னார். ஈஸ்வரன் உபைய ரம்பைகளை அனுப்பினார். ரம்பைகள் மூவராசாக்களிடமே வந்து எங்களை அழைத்ததென்னவென்று கேட்க வாரும் தெய்வ ரம்பைகளே வள்ளல் மகன் தெய்வலோகத்திலிருந்து செந்நெல் விரை கொண்டுவந்து நாத்துப்பாவி இருக்கிறபடியால் அதை பிடிங்கி நடவு போட்டால் உங்களுக்கு முத்து போடுகிறோமென்றார்.

**வரி 107–111 ரம்பைகளுக்கு நடவுக் கூலியாக முத்துக்கள் கொடுத்தல்**

நல்லதென்று வயலில்ச் சென்று நாத்து பிடிங்கி முடி முடிந்து குப்பம் சேர்த்து வயல்ல் நாத்து பங்கும் போது வள்ளல் மகன் பேருக்கு இரண்டு முடி போட்டான். சுந்தர ரம்பை தெய்வ ரம்பைக்கு பின்னையும் ஒவ்வொரு முடி நாத்து அதிகமாய் போட்டான். பெண்களெல்லாம் நடவு முடிந்து கால் கை சரீரம் சுத்தி செய்து கொண்டு மூவராசாக்களிடமே வந்து முத்துகள் வாங்கி கொண்டு தெய்வலோகம் போய் விட்டார்கள்.

**வரி 111–113 சுந்தரரம்பை, தெய்வரம்பை பூலோகத்தில் தங்குதல்**

சுந்தர ரம்பை தெய்வ ரம்பைக்கு பின்னையும் ஒவ்வொரு முடி நாத்து அதிகமானபடியினாலே பின்தங்கி வந்தார்கள். மூவராசாக்களும் கண்டு ஏதோ வள்ளல் மகன் பேறில் இச்சை கொண்டு நின்றார்களென்று ஆலாசித்து ஈஷ்வரனிடத்தில் அறுக்கை இட்டார்கள்.

**வரி 113–117 ஈஸ்வரன் கலியாண உத்தரவு–தெய்வேந்திரனின் வெள்ளை யானையின் மேல் பட்டணப் பிரவேசம் வருதல்**

ஈஷ்வரன் இந்த ரெண்டு பெண்களையும் வள்ளல் மகனுக்கு கலியாணம் செய்யும்படியா உத்தரவும் கொடுத்தார். உத்தரவுபடியே பந்தல் போட்டு மேல்கட்டு கட்டி தென்னை கமுகு

கதழி நிருத்தி புஷ்ப்பம் கொண்டலங்கரித்து மணவறை சோடித்து ஆனை அரசாணி வைத்துவள்ளல் மகனுக்கு வஷ்த்திர பூஷண களப கஷ்த்தூரிகளணிந்து தெய்வேந்திரன் வெள்ளை யானையின் பேறில் பட்டணம் மெறவனை செய்து உபைய ரம்பைகளிருவருக்கும் மணவறைக் கோலம் செய்ய சொன்னார்கள். அப்போது வள்ளல் மகன் சொன்னது.

**வரி 117–122 வள்ளல் மகன் உபய ரம்பைகளை மணம் செய்ய நிபந்தனை போடுதல்**

வாருமய்யா மூவராசாக்கேளே இந்த பெண்கள் தெய்வலோகத்து உபைய ரம்பைகளனபடியினாலே சந்தேகம் தெளியும்படிக்கு ஓமக் குண்ட அக்கினியை அள்ளி மணவறையை மூன்று தரம் வலமாக வந்து பொங்கலடுப்பில் போட்டு செந்நெல் விரையை கையினால் தேய்த்து பச்ச கலசத்தில் பொங்கல் வைத்து மணவறை அரசாணிக்கு நெவேத்தியம் செய்தால் கோரையுடுத்தி மணவறையில் வைத்து மங்கிலியம் தரிப்பேன். இல்லாதிருந்தால் மணவறையடியில் கம்பி புடைவையுடுத்தி கைபிடிப்பதேயல்லாமல் மணவறை ஏத்தக் கூடாது என்றான். மூவராசாக்களும் மெத்தக் கிலேசம் கொண்டு இருந்தார்கள்.

**வரி 123–126 ரம்பைகள் நிபந்தனையை ஏற்று திருமணம் செய்தல்**

அப்போது ரம்பைகள் பார்த்து வாருமய்யா மூவராசாக்களே நீங்கள்ளொன்றுக்கும் யோசனை செய்ய வேண்டாம் அந்தபடியே செய்த கொடுக்கிறோமென்று ஓம குண்ட அக்கினியை அள்ளி மணவறையை மூன்று தரம் வலமாக வந்து கொங்கலடுப்பில் போட்டு செந்நெல் விரையை கையினாலே தேய்த்து பச்ச கலசத்தில் பொங்கல் வைத்து மணவறை அரசாணிக்கு நெவேத்தியம் செய்தார்கள்.

**வரி 126–128 சோழ, பாண்டிய ராசாக்கள் ரம்பைகளைத் தத்தெடுத்தல்**

மூவராசாக்களும் அதிக சந்தோசம் கொண்டு மூத்த பெண்ணாகிய சுந்திர ரம்பையை சோழ ராசா என் சோழிய பிள்ளை என் றெடுத்துக் கொண்டார். இளைய பெண்ணாகிய

தெய்வ ரம்பையை பாண்டிய ராசா என் பாண்டியப் பிள்ளை எள்றெடுத்துக் கொண்டார்.

**வரி 128-129 வள்ளல் மகனுக்குத் தெய்வேந்திரன் என்று பெயர் கொடுத்தல்**

வள்ளல் மகனுக்கு தெய்வேந்திரனென்று பேரும் குடுத்து

**வரி 129-133 தெய்வேந்திரன் திருமணம்-பொன்முடி பூமுடி பதினெட்டாயுதம் தரித்த குதிரையிலேறிப் பட்டணம் வலம் வருதல்**

பொன்முடி பூமுடி தரித்து ரம்பைகளிரு பேருக்கு மணவறைக் கோலம் செய்த கங்கணம் தரித்து பதினாறு சீரும் பாங்குடன் வைத்து தெய்வச் சபையை தரிசனம் செய்து திருமங்கிலியம் தரித்து பதினெட்டாயுதம் பாங்குடனெடுத்து புரவியிலேறி பூலோகம் தன்னில் மூவராசாக்களுடன் பட்டணம் வலமாக வந்து வந்த பேர்கெல்லாம் பாக்கிலை கொடுத்துக் கொண்டு இருக்கிற நாளையில்

**வரி 133-138 செந்நெல் வகை**

வள்ளல் மகனிட்ட வேளாண்மையெல்லாம் அமுர்தம் கொண்டு சிறுமணி பெறுமணியாய் விளைந்தது. செந்நெல் விபரம். முத்த நாராயணன், முழரி, கரும்பொன், விண்ணவராயன், சேர்ந்தமுத்தான், ஈசம்பதியான், இளந்தலை கிழவன், இன்பமாதாரி, விந்துமாதாரி, ஆள்கொண்டராயன், அருந்துவ குபேரன், அறவாபரனன், வாறிகல்லுண்டை, பாகம்பிரியான், தாகம்தீத்தான், இருப்புலக்கை தவிர்த்தான், ஈசர்கினியான், மச்சுமுறிச்சான், மகிழம்பூ வாசகன், குழியிடித்தான், கோதும்பை, புன்னை, குறக்கொடி வாலன், பாக்கு நிறத்தான், பசுங்குலை வாழை.

**வரி 138-141 உமியில்லா வாசகன்**

ஊனுக்கினியான், உமியில்லா வாசகன், வில்லக்காய் மேனியன், மழிமுடக்கி, வள்ளவாய் காத்தான், மூங்கில் நிறத்தான், மயல்க் கன்னி, கயல்க் கன்னி, மொட்டு சென்னி, புளியிட்ட சாதணன், புன்னை நிறத்தான், வட்ட கன்னி, மாதுள கன்னி, குங்கும கன்னி, கோமள கன்னி, மல்லிகை, சுந்தரி,

**வரி 141–148 சம்பா வகை வெள்ளானை வேந்தன்**

பரிமள சம்பா, செண்பகமாலை, உள்பக சம்பா, நாட்டுக்கினிய சூரிய சம்பா, வெள்ளானை வேந்தன், வழதடி சம்பா, எலிவால் சம்பா, இலுப்பை பூ வாசகன், மாபூ வாசகன், ராச வெள்ளை, காக்கை சம்பா, கதுவாறி வண்ணன், சீரக சம்ப, இக்கி சம்பா, புனுகு சம்பா, பேரில்லா வெள்ளை, மணவாரி புண்ணை, கதம்பை நிறத்தான், ஆள்ளொட்டி மசபுளுதி நீற்ச்சாரை, நெடுஞ்சாரை, காடை கழுத்தன், கற்ப்பூற வாசகன், செம்மஞ்சள்வாறி, பறக்கும் சிறுக்குருவி, செம்மோடன், கருமோடன், ராவாணன், சேர வளநாடன், வைகை வளநாடன், சோதி குறும்பை, துய்ய மல்லிகை, கிழிமூக்கு வளைத்தான், திரிகத்தை, மணிக்கத்தை, செல்வெளநீர் வாசகன், வாழைப்பூ வாசகன், தாளை விழுந்தான், கொடைக்கினியாசி,

**வரி 148–151 மிளகு சம்பா வகை அமராபதியான் பன்னீராயிரம் சாதி நெல்**

சிறுமிளகி, பெருமிளகி, கருமிளகி, செம்மிளகி, வெள்ளைமிளகி, பில்லைமிளகி, சந்தணமிளகி, சடைமிளகி, மட்டிமி குறுவை, மணிகுறுவை, செங்குறுவை, கருங்குறுவை, பண்முகரி, கயிலைப் பதியான், வைகுண்டபதியான், அமராபதியான், அற்புதபறணன், அழகியவாளனுடனே பன்னீராயிரம் சாதி நெல் விளைந்தது.

**வரி 151–155 நெல்லறுத்தல்**

செந்நெல மூவராசாக்களும் கண்டு அதிக மகிழ்ச்சி கொண்டு வள்ளல் மகனை அழைத்து செந்நெல்லை என் விபரமாய் அறுத்தடிக்கும்படியா உத்திரவு கொடுத்தார். அந்தபடியே பட்டணத்து சனங்களை அழைத்து வந்து செந்நெல்லை என் விபரமாய் அறுத்தடித்து அளவு கண்டு பொதி பிடித்து வெள்ளை யானையின் பேறில் போட்டு மூவராசாக்கடிமே வந்து இருந்து தேவதாயம் முதலான பல உபசாரங்களும் செய்து கொண்டு வருகிற நாளையில்

**வரி 155–159 ரம்பைகளின் சூழ்ச்சி**

உபைய ரம்பைகளிருவரும் சில குழந்தைகளை பெத்து அதிக சந்தோசம் கொண்டு வள்ளல் மகனை தெய்வலோகத்துக்கு

அழைத்து போக வேணுமென்று சூதுகளை நினைந்து மது மாங்கிஷங்களை தரிவித்து வீட்டில் தாபிதம் செய்து மூவராசக்களிடமே வந்து வாருமய்யா மூவராசாக்களே வள்ளல் மகன் மது மாங்கிஷங்களை பொசிக்க நினைந்து வீட்டில் கொண்டு வந்து தாபிதம் செய்திருக்கிற படியால் இனி நாங்கள் இங்கே இருக்கக்கூடாது. தெய்வலோகம் போக வேணுமென்று சொன்னார்கள்.

### வரி 159-164 தெய்வேந்திரன் கோபம்

மூவராசாக்களும் வள்ளல் மகனை அழைத்து கொண்டு வீட்டிலே வந்து சோதினை பார்க்கும் போது வெள்ளரளி, குங்கும அரளி, செவ்வரளி, செவந்தி, செண்பம், மல்லிகை, முல்லை இப்படி பலவிதமான புஷ்பங்களாச்சுது. வள்ளல் மகனுக்கு அதிக கோபம் வந்து தெய்வலோகம் போக நினைந்து மலைதகத்தான் என்கிற மண்வெட்டியை எடுத்து தோளில் வைத்து கொண்டு தெய்வலோகத்தை நாடி போறபோது உபைய ரம்பைகள் இருபேர்களும் குழந்தைகளை கூட்டிக் கொண்டு கூட தொடர்ந்தார்கள். அவர்களை பார்த்து

### வரி 164-169 தெய்வேந்திரன் ஆதிசிவனிடம் சென்று சேர்ந்தது

வாரும் உபைய ரம்பைகளே உங்களை நான் நூறு பொன் ஐம்பது பொன் போட்டுக் கொள்ளவில்லை. நீங்கள் இடையிலே வந்தவர்கள். இடையிலே போங்களென்று முந்தானியை கிழித்து யெடைக்கி குடுத்து துரும்பை கிள்ளி கையிலே குடுத்து நீங்கள் கொண்டு வந்த விருதுகளெல்லாம் பிள்ளைகள் வசத்தில் ஒப்பிவைத்து தான் தெய்வலோகத்தை நாடி வாரபோது மலைகளான பறந்து எதிறிட்டு எதிறிட்ட மலைகளை மண்வெட்டியினாலே இரு பிளவு செய்து கொண்டு ஆதிசிவனிடமே சேர்ந்தான்.

### வரி 169-174 மூவராசாக்கள் தெய்வேந்திரன் பிள்ளைகளுக்கு காணி பூமி கோயில் குளம் கல்வெட்டி காணி செய்து கொடுத்தல்

வள்ளல் மகன் பரமசிவனிடம் போய் சேர்ந்தானென்று மூவராசாக்களும் மெத்தவும் கிலேசமுற்று உபைய

ரம்பைகளையும் குழந்தைகளையும் கூட்டி வரச் சொல்லி வாரும் உபைய ரம்பைகளே நீங்கள்ளொன்றுக்கும் கிலேசபட வேண்டியதில்லை. ஆதியில் உங்களை எங்கள் பிள்ளையாக எடுத்துக் கொண்டபடிக்கு உங்கள் வயிற்றில் பிறந்த பிள்ளைகளுக் கெல்லாம் எங்களுடைய தேசத்தில் காணி பூமி கோவில் குளம் கல்வெட்டி காணி கொடுக்கிறோம் என்று கல்வெட்டி காணி செய்து குடுத்தார்கள்.

*வரி 174–180* **தெய்வேந்திர வம்சத்து காணியாளர் விபரம்**

பள்ளு விபரம் முதல் தெய்வேந்திர பள்ளன் சோழியபள்ளன், பாண்டிய பள்ளன், கொங்கு பள்ளன், குமுண பள்ளன், மறங்கொத்தி பள்ளன், மங்கநாட்டுப் பள்ளற், மானாட்டு பள்ளற், வேட்டை பள்ளற், ஈசர் பள்ளற், அன்னிய பள்ளற், குமண பள்ளற், மோகினி பள்ளற், மேனாட்டு பள்ளற், வேங்கல நாட்டு பள்ளற், கடைய பள்ளற், கவுண பள்ளற், பட்டணக்கரை பள்ளற், வேப்பம்குளத்து பள்ளற், பூலாங்குளத்து பள்ளற், சின்னிய பள்ளற், தொட்டிய பள்ளற், ஆத்தாய பள்ளற், ஆய பள்ளற், ஆமண பள்ளற், சாமண பள்ளற், சானாட்டு பள்ளற், குங்கும பள்ளற், வங்கள பள்ளற்.

*வரி 180–187* **அரச பள்ளற், வடம பள்ளற்**

இருள பள்ளற், இளம்பிறை பள்ளற், முக்குவிசைய பள்ளற், கப்பரை பள்ளற், துலுக்க பள்ளற், மேல் மடை கட்டி பள்ளற், வஞ்சுனி பள்ளற், வடம பள்ளற், பூரண பள்ளற், பூசற பள்ளற், அக்கரை கண்ட பள்ளற், அரச பள்ளற், ஆனைகட்டி பள்ளற், யாப்பு பள்ளற், பாப்பு பள்ளற், முகுத பள்ளற், பாங்கி பள்ளற், கூனங்குடி பள்ளற், வானங்கட்டி பள்ளற், கிழிஞ்சி பள்ளற், தவளை பள்ளற், தாதுவ பள்ளற், வெண்டி பள்ளற், வீரிய பள்ளற், பச்சை பள்ளற், பாணங்குடி பள்ளற், திருநாம பள்ளற், ஆயப் பள்ளற், சாய பள்ளற், கவிதமான பள்ளற், விதலைசயா பள்ளற், பாவை கட்டி பள்ளற், வாணங்கட்டி பள்ளற், அளவுகையிட்ட பள்ளற், வடுக பள்ளற், வடுபடுத்தி கொள்ளும் பள்ளற்.

*வரி 187–191* **காட்டானை வென்ற பள்ளற்**

துட்டுஷ பள்ளற், துரையேறி பள்ளற், தொண்டமண்டல பள்ளற், அளவு கையிட்ட பள்ளற், இப்புரை பள்ளற், பழிவிக்கும்

பள்ளற், பழிதழுவிக் கொள்ளும் பள்ளற், நாகனாட்டு பள்ளற், நாகமழித்த பள்ளற், காட்டானை வென்ற பள்ளற், சுழிகழியா பள்ளற், ஆனையூர்ப் பள்ளற், அடுத்த நாட்டு பள்ளற், கோனுதையும் பள்ளற், கொலை களவு வென்ற பள்ளற், தொல்லை மாலை விலை கூறும் பள்ளற், ஆதியூர் பள்ளற், அரச பள்ளற், விசைய பள்ளற், வீரண பள்ளற்.

**வரி 191–195 தெய்வேந்திரர் தேசப் பரப்பளவு பழனி மடம், சிவாலயம், தெய்வேந்திரப்பள்ளர் விருது**

இப்படி பள்ளென்னப்பட்ட சாதி காசிக்கும் தெற்கு கன்னியகுமரிக்கும் வடக்கு மாந்தைக்கும் கிழக்கு மானொளிக்கு மேற்கு இந்த நான்கு தேஷசத்திலுண்டாகிய பள்ளென்னப்பட்ட சாதி அனைனவோர்களுக்கும் தரும்ம விளக்கம் செய்கின்ற பழனி மட சிவாலையம் தெய்வேந்திர பள்ளன் விருது

கந்தன் மயேஷபரன் கணபதி வாழ்க
செந் திருமகளுடன் செனகமால் வாழ்க
அயனுடன் சரஷ்பதி அமரரும் வாழ்க
நாத்திசை புவனம் நரர்களும் வாழ்க.

**வரி 195–201 மீண்டும் தெய்வேந்திரர் வரலாறு**

சிவனுயுமையும் மதிறுக் காஞ்சி தன்னில்
ஏகாம்பரரா இருந்தருள் புரிந்து
மதுரையை நோக்கி வரும் வழியதனில்
உலகலாமீன்ற உமையவள் மனதில்
திருவருள் தோன்றி சிவனிடத்துரைக்க
அரன்மன மகிழ்ந்து முகமது வேர்க்க
கரமதில் வாங்கி வரமதுக்கியந்து
வைகையில் விடுக்க
வருணன் பொழிந்துருழிக் காத்தடித்து
குளக் கரையதனில் கொடி வள்ளல் தாங்க
ஓமம் வளர்ந்து உற்ப்பணமாக
ஈஷ்வரி தேடி யிருளில் நடக்க
கூவிய சத்தம் குமரனை நோக்கி
வாரியெடுத்து வள்ளலை வலபுறம் வைத்து
வலமார் பிய்ந்து அமுர்தம்
பொழிந்து அஷ்த்தம் கொடுக்க

பாலன் நரிவு பணிவிடைக்காக
புரந்தரன் மகிழ்ந்து பூரித்தெடுக்க

வரி 201–204 தெய்வேந்திரன் அன்னம் படைத்தல்

கன்னல் சென்னல் கதழி பிலாவுடன்
தென்னை கமுகு செறந்த வெள்ளிலை
அன்ன மிளகு மாந்துளிற் மஞ்சள்
மல்லிகை முல்லை மகழி நுவர்ச்சி
பரிமள சுகந்தம் பாங்குடன் கொண்டு
தெய்வ சபையை தெரிசிக்க வென்று
காராவின் பாலை கரகத்திலேந்தி
சீறாக அன்னம் சிறப்பித்த போது

வரி 204–211 தெய்வேந்திரன் விருதுகள்

ஈஷ்வரன் மகிழ்ந்து இணைமுடி தரிக்க
அமரர்கள் மகிழ்ந்து இணைமுடி தரிக்க
அமரர்கள் மகிழ்ந்து அதிசயத் திவர்கும்
விமரிசையாக விருது கொடுக்க
மாலயன் ருத்திரன் மகேஷ்பரன் மகிழ்ந்து
பொன்முடி யதனில் பூசன மணிய
வாடாத மாலை மார்பினி லிலங்க
வெட்டுப் பாவாடைகள் வீணைகள் முழங்க
செந்நெல்சேறாடி சிறப்புடன் சூழ
வெள்ளைக் குடையும் வெங்களிறுடனே
டாலுடம்மான சத்தம் அதறிட
மத்தளம் கைத்தாமம் மகேஷ்பரத் துடனே
எல்லா விருதும் இயல்புடன் கொண்டு
தெய்வ சபையை தெரிசனம் செய்து
பதினெட் டாயும் பாங்குட னெடுத்து
புரவியிலேறி பூலேக மதனில்
சென்னலா யெங்கும் சிறப்பிக்கும் போது
விசுவ கண்ணாளர் மேழியும் கொடுக்க
மூவராசக்கள் முடிமணம் சூட்ட

வரி 211–216 செந்நெல்லைப் படைத்தோர்

குகவேலளால் குடும்பன் தழைக்க
சிவனருளாலே திருநீறணிந்து

யெல்லா வுலகும் யிறவியுள் ளளவும்
தெள்ளிமை யாத செந்நெலை படைத்தோர்
சேத்துக்கால்ச் செல்வரான
செந்நெல் முடி காவலரான
முத்தளக்கும் கையாதிபரான
பாண்டியன் பண்டான பாறதகதபரான
அளவு கையிட்டவரான
மூன்று கைக்குடையாதிபரான
பஞ்ச கலசம் பாங்குடன் வயித்து
அஞ்சலித் தேவர்கும் அன்னம் படைத்தவரான
மண்ணை வெட்டிக் கொண்டு மலை தகத்தவரான
கடல் கலங்கினும் காவேரி வற்றிலும் மலை
கலங்கினும் மனங் கலங்காத வல்லபரான
மடக்குளத்தில் வந்துதித்தவறான பரமசிவனுக்கு
பாத பணிவிடை செய்கின்றவரான

**வரி 216–220 தெய்வேந்திரன் பிள்ளைகளாகிய காணியாளர்கள்**

தெய்வலோகத்தில் தெய்வேந்திரன் பிள்ளைகளாகிய பழனித் தலத்தில் காணியாளனாகிய கொங்கப் பள்ளறில் பழனி பழனிப் பன்னாடி, கந்தப் பன்னாடி, கடைய பள்ளறில் தென்பழனி இருள குடும்பன், மங்கனாட்டுப் பள்ளறில் பெரியழக குடும்பன், பால சமுத்திரம் அறிய நாச்சி குடும்பன், குமாரக் குடும்பன், கலையன்புத்தூர் பெரிய அழக குடும்பன், அக்கிரஹாரம் அழக குடும்பன், ரெட்டையன்பாடி பாப்ப குடும்பன், பந்த குடும்பன், கல்லாபுரம் குமார குடும்பன், கொழுமம் குமரலிங்கம் சின்னாதா குடும்பன், நயினா குடும்பன்.

**வரி 221–226 கன்னாடிப்புத்தூர் பண்ணாடிமார்கள்**

கன்னாடிபுத்தூர் வெள்ளானை பன்னாடி, கறிச்சி பன்னாடிஇ சோழமாதேவி ராக்க பன்னாடி, சோழ பன்னாடி, கனியூர் மூப்பன், காறத்தொழுவு வேல்பன்னாடி, கடத்தூர் குருப்பன்னாடி, அலங்கயம் ராக்க பன்னாடி, தனஞ்சியம் அழக பன்னாடி, தாராபுரம் உடையா பன்னாடி, வீராச்சிமங்கலம் கன்னாடிபுறுத்யூர் .......ல பன்னாடி, கோழிகடவு கூழைமலை பன்னாடி, ஆயக்குடி சப்பளி குடும்பன், கரும குடும்பன், விருப்பாச்சியில் செவந்தா குடும்பன், நீலகண்ட குடும்பன்,

எடையகோட்டை எழுவ குடும்பன், பாரைபட்டி பனிக்க குடும்பன், திண்டுக்கல் சனுவ குடும்பன், வலையா குடும்பன், வல்லகொண்டம் நாயக்கனூரில் வேலக் குடும்பன், தாடிக்கொம்பு குமார குடும்பன்.

### வரி 226–231 வத்தலகுண்டு குடும்பனார்கள், பலகனார்கள்

கொத்தபள்ளி கன்ன பலகான், கன்னிவாடி உக்கினிக் குடும்பன், ஆத்தூரில் திம்மக் குடும்பன், கூழப்ப நாயக்கனூரில் சின்னாண்டி காலாடி, அம்ம நாயக்கனூரில் அம்மையாக் குடும்பன், மாவுத்தன் காலாடி, வத்தலகுண்டு கெங்குவார்பட்டி குடக்குடும்பன், காரைக் குடும்பன், மூங்கிலணை வள்ளி குடும்பன், பெரியகுளம் தாமரைக்குளம் ராமக் குடும்பன், போடினாயக்கனூரில் பொன்னழக குடும்பன், திணைகுளம் சங்க குடும்பன், மஞ்சக் குடும்பன், பூதணத்தம் நாச்சி குடும்பன், விரும குடும்பன், ஆனைமலை குலகார பன்னாடி,

### வரி 231–234 கோயமுத்தூர் பண்ணாடிமார்கள்

மாரிச்சனாயக்கம்பானையம் குப்பையாண்டி பன்னாடி, ஊத்துக்குழி ஆண்டிக் குடும்பன், கோதைவாடி வேலுப் பன்னாடி, கோயமுத்தூர் வெள்ளானை பன்னாடி, வீர பன்னாடி, அவனாசி அவனாசிப் பன்னாடி, சூலூரு தம்பியா பன்னாடி, உக்கிரங்கொடி வேலிமங்காப் பன்னாடி, குறுப்பனாடு வில்லாப் பன்னாடி, ஆவிழி சொக்கப் பன்னாடி, அமுக்கயம் கத்தாங்கண்ணி ராக்கப் பன்னாடி.

### வரி 234–236 ஈரோடு கொங்குமடையாய் பண்ணாடி சேலம் பலகனார்

ஈரோடு கொங்குமுடையா பன்னாடி, சேலம் முத்த பலகான், ராசிபுரம் கன்ன பலகான், நயினா பலகான், பரமத்தி கன்ன பலகான், வெங்கரை பாண்டமங்கலம் முத்த பலகான், சின்ன தாராபுரம் முத்துகருப்ப குடும்பன், பள்ளப்பட்டி வேல் குடும்பன், அறவகுறிச்சி ஆண்டி குடும்பன்.

### வரி 236–239 கரூர் திருச்சிராப்பள்ளி நாட்டு மூப்பனார்

கருவூர் புலியூர் பெரிய மூப்பன், பசவ மூப்பன், வாங்கல் சின்னாறி யாமூப்பன், புகழியூர் சி[illegible]காளி மூப்பன், கட்டளை

நடுவறுத்தா மூப்பன், குளித்தளை பழனி மூப்பன், தொட்டியம் உத்த மூப்பன், வெள்ளூர் பரம மூப்பன், சோமயநல்லூரு நயினகாளி மூப்பன், திருச்சினாப்பள்ளி நாட்டு மூப்பன், சொக்க மூப்பன், துறையூர்ச் சீமை எளுவ மூப்பன், ஆண்டி மூப்பன், பெரியா மூப்பன், பழனி மூப்பன்.

### வரி 239-242 தஞ்சாவூர் பணிக்கனார், தொண்டைமானார் சீமை குடும்பனார்

தஞ்சாவூர் சீர்மை துளசி பணிக்கன், ஆண்டி பணிக்கன், சனுவ குடும்பன், மெய்ய குடும்பன், தொண்டமனார் சீர்மை பழனிக் குடும்பன், மெய்ய குடும்பன், சரச குடும்பன், குப்பா குடும்பன், காரை குடும்பன், சோடன் பிச்சை குடும்பன், சின்னாண்டி காலாடி, பழனி காலாடி, லிங்கமநாயக்கர் சீர்மை, ராமக் குடும்பன், இலிங்கா குடும்பன்.

### வரி 242-246 மதுரை சொக்க குடும்பன் இராமராதபுரம் ரகுநாத குடும்பன்

மதுரையில் சொக்க குடும்பன், வீர குடும்பன், மாடக்குளம் வேதி காபல் குடும்பன், தண்டு காபல்க் குடும்பன், கவுண்டன்கோட்டை புலையா குடும்பன், உடையாத் தேவர் சீர்மை சேதுபதி குடும்பன், ராம குடும்பன், அழக குடும்பன், கீலை பருத்தியூர் மேலை பருத்தியூர் உடையா குடும்பன், வீர குடும்பன், ராமனாதபுரம் ரெகுனாத குடும்பன், ராம குடும்பன் திருநெல்வேலியில் செம்புராய குடும்பன், அழக குடும்பன், கலங்காதகண்டம நாயக்கனூரில்திருவிருந்தா குடும்பன், அழகன் காலாடி, சின்னாண்டி காலாடி, வண்டியினார் சீர்மை சிவசூரிய குடும்பன், அழக குடம்பன், தும்சபிச்சவங்கனூரில் சோனைக் குடும்பன்.

### வரி 246-251 தெய்வேந்திர காணியாளர் பன்னீராயிரம் கோத்திரம், பழனி மடம் ஆலயம்

காணி காலாடி மற்றுமுண்டாகிய குடும்ப(னார்)கள், பன்னாடிகள், காலாடிகள், மூப்பன், பலகானென்கிற அய்ந்து வகுப்பும் பன்னீராயிரம் கோத்திரமுடைத்தாகிய தெய்வேந்திர வமிஷத்தாரனவோர்களும் கொங்கு வய்காபுரி நாட்டில் பழனி மலை மேல் மகாபூசை கொண்டருளிய பால சுப்பிரமணிய சுவாமியார் திருவலப் புறமாக எழுந்தருளி வருகிற தெற்கு வீதியில்

தென்மேல் மூலையில் தெய்வேந்திர சாதி அற மடம் ஆலயமும் தெய்வேந்திர வினாயகனும் உண்டு செய்து பேறழம் தேபனாசித்தய்யற் சீசன் பழனிமலை உடையாருக்கு தருமசாதினமாகிய தாம்பூர சாதின பட்டயம் கட்டளை இட்டோம்.

### வரி 251-253 தெய்வேந்திரர் பழனிகோயில் கட்டளைகள், அன்னதானம்

அந்த மடத்தில் அறதேசி பரதேசிக்கு உப்பு, ஊறுகாய், நீராகாரம், திருவிளக்கு, திருக்கன் சாத்தும் மலையின் பேறில் திருமஞ்சனம் மலை ஏறும் மேல் பாறிசம் தண்ணீர் பந்தல் நந்தவனம் இதுமுதலான தருமங்களும் உண்டு செய்து குடுத்தோம்.

### வரி 253-269 கோயிலுக்குத் தெய்வேந்திரர் நிதி

பட்டய சுபார்த்தியம் குடிக்கு நிமாட்டாயனுக் காறுபடி பென்சிரை பதினாலு படி குடும்பன் பன்னாடி பதினாலு வள்ளமுனோர் தேசத்தில் தலைகட்டுக்கு ஒரு பணமும் தண்டுவனுக்கு அரைப் பணமும் கலியாணத்துக்கு மாப்பிள்ளை வீட்டுக்கு மூணு பணமும் பெண் வீட்டுக்கு ரெண்டு பணமும் அனாதி முதலு சாதியில் குத்தம் தீந்த பணமும் கட்டளை இட்டோம். திருவிழாவுக்கு பெரிய ஊருக்கு அஞ்சு பணமும் சித்தூருக்கு மூணு பணமும் வினாயக சதுர்த்தி, சரஷ்பதி பூசை, கந்தசஷ்டி, சங்கிறாந்தி, சிவன் ராத்திரி இந்த விசேசங்களுக்கு ஊருக்கொரு பணம் குடுத்து வருவோர்களாகவும், இந்த தருமத்தை பரிபாலனம் செய்யப்பட மடத்தய்யர் பட்டயங் கொண்டு கிராமங்களில் நாடுகளில் வந்தால் அவருக்கு படி முதலானதும் குடுத்து பட்டயத்துக்கு அபிசேகம் செய்து கோடி வஷ்த்திரம் சாத்தி தூப நெவேத்தியம் குடுத்து பட்டய வாசகம் கேட்டு

### வரி 269-274 கோயில் உரிமை - காலம் - பரிபாலனம்

பட்டயத்திலுள்ளபடி கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் உள்ளவரைக்கு வரித்தனை குடுத்து நடத்தி வருவோர்களாகவும். வரித்தனை குடாத பேர்களை அஞ்சு சாதியின் பேறில் ஆணியிட்டு தெய்வேந்திரன் ஆணைக்கு உள்படுத்தி தீயுத்துறை, தண்ணித் துறை, வண்ணா நாசுவன் தடங்கல்ச் செய்து மங்கலமொதுக்கி வெங்கலமெடுத்துக் கொள்வோராகவும். அந்த

அக்கை ஊரு மந்தையில் மிடகுக் கொள்ளவிட்டால் தரும மடமாலையத்தில் சேர்த்தி கொள்வாராகவும். இந்த படிக்கி பழனியாண்டவருக்கு பொதுவாய் இந்த தருமத்தை பரிபாலனம் செய்து வருவோர்களாகவும்.

*வரி 274–276 வாழி*

**மூலயனுக்கான சிவன் விந்தும் வாழி**
**மும்மல அருள்ப் பார்வை விசுவகர்மா வாழி**
**மாலனருள் தெச்சணமா டக்குளமும் வாழி**
**வளர்பால கணையீன்ற வள்ளல்க் கொடியும் வாழி**
**பாலகனாய் வந்தவள்ளல் மகனும் வாழி**
**பன்னீரா யிரம்கோத்திரம் பவிசும் வாழி**
**தானே ஆறுமுகம் துணை**

*வரி 276–278 பட்டய நகல்*

உ இந்த பட்டயம் இதற்கு முன் இருந்த பட்டயம் கை விடுதலாயிப் போனதற்கு பதிலா இப்போது ஆங்கிலா வருசம் புரட்டாசி மாதம் உண்டாக்கிய பட்டயம்.

# 2. தேவேந்திரகுலவேளாளர் குலப்பிரிவுகள்

(மள்ளர் எனும் தேவேந்திரகுல வேளாளர் குலப் பிரிவுகளும் கூட்ட முறைகளும்- எனும் நூலில் அறிஞர் புலவர் கி.ஆ. குப்புராசு அவர்கள் குறிப்பிட்டுள்ள தேவேந்திர குல வேளாளர்களின் குலப்பிரிவுகளும் கூட்ட முறைகளும் வருமாறு அமைகின்றன)

குலப்பிரிவுகள்

1. அஞ்சுவண்ணன்
2. அணியர்
3. அளவன்
4. அதிகாரி
5. ஆற்றுக்காலாட்டியர் - காலாடி
6. இந்திர சாதி
7. உழவர் - உழத்தியர்
8. ஊரன்
9. ஒண்டிப்புலி
10. ஒளியர் -ஒளியமள்ளர்
11. கடம்பர்
12. கணக்கன்
13. கடையர் - கடைஞர்
14. களமர்
15. கடைசியர்
16. கருங்களமர் - வெண்களமர்
17. காலாடி
18. குடும்பர் - குடும்பன் - குடும்பனார்
19. கூத்தாடி - கூத்தன்
20. கூத்தர் - கூத்தனார்
21. தொண்டைமான்
22. தேவேந்திரர்

23. தேவேந்திரகுலத்தார்
24. தேவேந்திர குல வேளாளர்
25. நாட்டார்
26. நீராணியம் - மடையர்- நீர்மூப்பர்
27. நீர்கட்டி-நீர்பாய்ச்சி
28. படையாட்சி
29. பண்ணாடி
30. பணிக்கன்
31. பலகான்-பலகன்-பலகனார்
32. பழையர்
33. பள்ளர்/பள்ளனார்
34. பள்ளி/பள்ளியர்
35. பளியர்
36. பாண்டியர்
37. பாவாணர்
38. பூசி
39. மகிழ்நன்
40. மண்ணாடி
41. மல்லர்-மல்லனார்
42. மழவர்
43. மள்ளர்-மள்ளனார்
44. மன்றாடி
45. முதலி
46. மூப்பன்-மூப்பனார்-மூப்பர்-தேவேந்திர மூப்பனார்
47. செட்டி மூப்பன்
48. நாட்டு மூப்பன்
49. புள்ளி மூப்பன்
50. வலவன், வளவன்
51. வாதிரியார்
52. வாய்க்காரர்-வயற்காரர்
53. வாரியன்
54. வெண்களமர்

55. வெள்ளாளர்
56. வேந்தர்
57. வேள்

## பலநாட்டுக் குடும்பர்கள்

58. அகத்தியக் குடும்பர்
59. குளமங்கல நாட்டுக் குடும்பர்
60. தலைக்கா நாட்டுக் குடும்பர்
61. துவராபுரிக் குடும்பர்
62. பளுவஞ்சி நாட்டுக் குடும்பர்
63. பாலக்கரை நாட்டுக் குடும்பர்
64. பெருமாநாட்டுக் குடும்பர்
65. பொய்கை நாட்டுக் குடும்பர்
66. வீரவளநாட்டுக் குடும்பர்

## கூட்ட முறைகள்

67. அகுத்திய மள்ளர்
68. அக்கா மள்ளர்
69. அக்கரை கண்ட மள்ளர்
70. அகத்தா நாட்டு மள்ளர்
71. அணைக்கரை மள்ளர்
72. அம்பு நாட்டு மள்ளர்
73. அம்மா மள்ளர்
74. அரச மள்ளர்
75. அரப்பு மள்ளர்
76. அரிமா மள்ளர்
77. அழகுடை மள்ளர்
78. அளவுகை விட்ட மள்ளர்
79. அன்னிய மள்ளர்
80. அணிய மள்ளர்
81. ஆஞ்ஞா மள்ளர்
82. ஆண்டி மள்ளர்
83. ஆத்தா மள்ளர்

84. ஆத்தாய மள்ளர்
85. ஆத்தூர் மள்ளர்
86. ஆதியூர் மள்ளர்
87. ஆமண மள்ளர்
88. ஆயா மள்ளர்
89. ஆரூர் மள்ளர்
90. ஆனைகட்டி மள்ளர்
91. ஆனையூர் மள்ளர்
92. இசை மள்ளர்
93. இப்புரை மள்ளர்
94. இருள மள்ளர்
95. இளம் பிள்ளை மள்ளர்
96. இளம்பிறை மள்ளர்
97. ஈச்சங்கொட்டை மள்ளர்
98. ஈச்சநாட்டு மள்ளர்
99. ஈஸ்வர மள்ளர்
100. ஒளிய மள்ளர்
101. கட்டை மள்ளர்
102. கடைத்தலை மள்ளர்
103. கடைய மள்ளர்
104. கப்பரை மள்ளர்
105. கல்லுக்கட்டி மள்ளர்
106. கல்நாட்டு மள்ளர்
107. கலிநாட்டு மள்ளர்
108. கவன/கவண மள்ளர்
109. கவிதமான மள்ளர்
110. கவிநாட்டு மள்ளர்
111. கவுண்ட மள்ளர்
112. களத்து மள்ளர்
113. கனியா மள்ளர்
114. காட்டானை மள்ளர்
115. காட்டானை வென்ற மள்ளர்

116. காதுவ மள்ளர்
117. காதுவி மள்ளர்
118. கிளிஞ்சி மள்ளர்
119. குங்கும மள்ளர்
120. குதிரை மள்ளர்
121. குதிரைக்கு மாரடிக்கும் மள்ளர்
122. குதிரை முடி மள்ளர்
123. குமுண மள்ளர்
124. குமிர்த மள்ளர்
125. குமித மள்ளர்
126. குமுண முறங்கொத்தி மள்ளர்
127. குலமாங்கல்ய நாட்டு மள்ளர்
128. குளத்து மள்ளர்
129. குழவு நாட்டு மள்ளர்
130. குறும்ப மள்ளர்
131. கூத்த மள்ளர்
132. கூத்தாடி மள்ளர்
133. கூனங்குடி மள்ளர்
134. கொங்க மள்ளர்
135. கொனுதை மள்ளர்
136. கொலைகளவு வென்ற மள்ளர்
137. கோதிரையா மள்ளர்
138. கோதிக மள்ளர்
139. கோலிய மள்ளர்
140. கோனகப் பூச்சி தின்னும் மள்ளர்
141. கோனாட்டு மள்ளர்
142. சங்கர மள்ளர்
143. சாணாட்டு மள்ளர்
144. சாமண மள்ளர்
145. சாயா மள்ளர்
146. சிங்கி மள்ளர்
147. சிறுதாலி கட்டி மள்ளர்

148. சின்னிய மள்ளர்
149. சீவந்தி நாட்டு மள்ளர்
150. சுந்தர மள்ளர்
151. சுவந்தர மள்ளர்
152. சுழிகணியா மள்ளர்
153. செங்கா மள்ளர்
154. செம்பாட்டு மள்ளர்
155. செலுவா மள்ளர்
156. சொட்டை மள்ளர்
157. சேரநாட்டு மள்ளர்
158. சோதிட மள்ளர்
159. சோழிய மள்ளர்
160. சோளிய மள்ளர்
161. சோனக மள்ளர்
162. சோனாட்டு மள்ளர்
163. சைவ-சைவ சித்தாந்த மள்ளர்
164. தத்துவ மள்ளர்
165. தவமுடி மள்ளர்
166. தவளை தின்னி மள்ளர்
167. திருமுடி மள்ளர்
168. திருநாம மள்ளர்
169. திருநீற்று மள்ளர்
170. துட்டச மள்ளர்
171. துலுக்க மள்ளர்
172. துறையெறி மள்ளர்
173. துஷ்ட மள்ளர்
174. தெய்வேந்திர மள்ளர்
175. தென்சிறுவாசல் நாட்டு மள்ளர்
176. தெற்கத்தி மள்ளர்
177. தேவ மள்ளர்
178. தேவேந்திர மள்ளர்
179. தொட்டிய மள்ளர்

180. தொட்டம்பட்டி மள்ளர்
181. தொண்டை நாட்டு மள்ளர்
182. தொல்லை மாலை விலை கூறும் மள்ளர்
183. நண்டு தின்னி மள்ளர்
184. நத்தை தின்னி மள்ளர்
185. நட்டுவ மள்ளர்
186. நரம்பு கட்டி மள்ளர்
187. நாகநாட்டு மள்ளர்
188. நாகமழித்த மள்ளர்
189. நாட்டிய மள்ளர்
190. நாட்டாண்மை மள்ளர்
191. நாட்டாண்மை அழித்த மள்ளர்
192. நாட்டாண்மை வென்ற மள்ளர்
193. நார்முடி மள்ளர்
194. பச்சை மள்ளர்
195. பட்டணக் கரை மள்ளர்
196. பண்டார மள்ளர்
197. பந்தமுட்டி மள்ளர்
198. பந்தலடி மள்ளர்
199. பரங்கி நாட்டு மள்ளர்
200. பருத்திக் கொட்டை நாட்டு மள்ளர்
201. பழன மள்ளர்
202. பழிதவிர்க்கும் மள்ளர்
203. பழிதழுவிக் கொள்ளும் மள்ளர்
204. பழி தவிக்கும் மள்ளர்
205. பனுவல் கூறும் மள்ளர்
206. பன்னாக மள்ளர்
207. பனங்குடி மள்ளர்
208. பாகப்படி மள்ளர்
209. பாசிதட்டி மள்ளர்
210. பாண்டிய மள்ளர்
211. பாணங்குடி மள்ளர்

212. பாப்பு மள்ளர்
213. பாம்பாட்டி மள்ளர்
214. பாவை மள்ளர்
215. பாவைக் கட்டி மள்ளர்
216. புலிகுத்தி மள்ளர்
217. பூச்சி தின்னி மள்ளர்
218. பூசற மள்ளர்
219. பூரண மள்ளர்
220. பூலாங்கிணற்று மள்ளர்
221. பெருந்தாலி கட்டி மள்ளர்
222. பொதினி மள்ளர்
223. பொன்னி மள்ளர்
224. மங்கல நாட்டு மள்ளர்
225. மங்கா மள்ளர்
226. மடை மள்ளர்
227. மண் மள்ளர்
228. மந்தை மள்ளர்
229. மரமேறி மள்ளர்
230. மருதநில மள்ளர்
231. மருதக்குடி மள்ளர்
232. மல்லுக்கட்டி மள்ளர்
233. மல்லக்குடி மள்ளர்
234. மறக்கணா மள்ளர்
235. மாநாட்டு மள்ளர்
236. மீசற மள்ளர்
237. மேல்மடை மள்ளர்
238. மேனாட்டு மள்ளர்
239. மொட்டை மள்ளர்
240. மொறம் பொற்றி மள்ளர்
241. மும்முடி மள்ளர்
242. யாப்பு மள்ளர்
243. வங்க மள்ளர்

244. வஞ்ச மள்ளர்
245. வடசிறுவாசல் நாட்டு மள்ளர்
246. வடம மள்ளர்
247. வடமலை மள்ளர்
248. வடுக மள்ளர்
249. வடுப்பட்டா மள்ளர்
250. வடுப் படுத்திக் கொள்ளும் மள்ளர்
251. வணங்கா முடி மள்ளர்
252. வன்னி மள்ளர்
253. வானங்கட்டி மள்ளர்
254. வாளுக்கஞ்சா மள்ளர்
255. விசிறி மள்ளர்
256. விதலை மள்ளர்
257. விதான மள்ளர்
258. வீரநாட்டு மள்ளர்
259. வீரிய மள்ளர்
260. வேட்ட மள்ளர்
261. வேட்டை மள்ளர்
262. வேட்டுவ மள்ளர்
263. வேண்டி மள்ளர்
264. வேதக்கார மள்ளர்
265. வேதாந்த மள்ளர்
266. வேம்ப குளத்து மள்ளர்
267. வேலூர் மள்ளர்
268. வைணவ மள்ளர்

# 3. தேவேந்திரர்கள்-மழை, ஏரி, நெல்வகையுடன் தொடர்பு கூறும் வழக்காறுகள்

## வீரமாத்தி வெங்கல மடையாள்

தளி என்னும் ஊர் முன்பு பாளையக்காரர்களின் ஆட்சிக்கு உட்பட்டதாய் இருந்துள்ளது. அப்போது ஆவுடையா குடும்பனும் அவரது மனைவி வெங்கலமடையாள் இருவரும் பஞ்சம் பிழைக்க இப்பகுதிக்கு மதுரை மாடக்குளத்திலிருந்து வந்து தினைகுளம் என்ற ஊரில் தங்கி அரண்மனையின் கட்டளைப்படி மதகினைக் காவல் புரிவது, மதகில் சென்று நீர் எடுத்து விடுவது, மதகில் உள்ள மீன்களைப் பிடித்து அரண்மனைக்குக் கொடுத்து வருவது போன்ற பணிகளைச் செய்து வந்தனர். அவ்வாறு ஒரு நாள் மீன் பிடிக்கும் போது வலையில் ஒரு மீன் மட்டுமே கிடைக்க இதனை எவ்வாறு அரண்மனைக்கு எடுத்துச் செல்வது? இதனைக் கொண்டு சென்றால் அவர்கள் என்ன நினைப்பார்கள்? அவர்கள் இந்தச் சிறிய மீனை மட்டுமா சாப்பிடப் போகிறார்கள் என்று நினைத்தும் தனது மனைவி முன்பொரு நாள் ஆசையாகக் கேட்டது ஞாபகத்திற்கு வர அவள் கர்ப்பமாக இருப்பதை நினைத்தும் அதனை வீட்டிற்கு எடுத்து வந்து கொடுத்து விட்டு மீண்டும் மதகினைக் காவல் புரியச் சென்று விடுகிறான். வெங்கலமடையாள் அதனைச் சமைத்துச் சாப்பாடு எடுத்துக் கூடையில் வைத்துக் கொண்டு தன் கணவனுக்கு மதியச் சாப்பாடு எடுத்துச் செல்கிறாள். அந்த நேரம் பார்த்து அரண்மனையார் தினமும் ஆவுடையா குடும்பன் மீன் கொண்டு வருவானே இன்று இவ்வளவு நேரம் ஆகியும் வரவில்லையே என்ன காரணம் என்று அறிந்து வர, குதிரையிலேறி மதகிற்குச் சென்று ஆவுடையா குடும்பனிடம் கேட்க ஆவுடையா குடும்பனும் மீன் ஒன்னும் விழுகலேங்கசாமி என்று கூறிவிட, சரி மீன் ஒன்னும் விழலையா என்றவாறு குதிரையைத் திருப்பிக் கொண்டு வடக்கு நோக்கி அரண்மனைக்கு வருகிறார். அப்போது வெங்கலமடையாள் கணவனுக்கு சாப்பாடு எடுத்துக் கொண்டு தெற்கு நோக்கி வர இருவரும் ஓரிடத்தில் சந்திக்கின்றனர். அப்போது அரண்மனையார் என்ன வெங்கலமடையா சாப்பாடு எடுத்துட்டுப்போறியா என்று கேட்க ஆமாங்கசாமி சாப்பாடு

எடுத்துட்டுப்போறேங்க என்று கூற என்ன குழம்பு என்று அவர் கேட்க இவளும் கூடையினை இறக்கி மீன் குழம்புங்க என்று காட்டுகிறாள். இதனைக் கண்ட அரண்மனையார் பாத்தியா நம்மளையே மோசம் பண்ணிப் போட்டியா என்று நினைத்து வெங்கலமடையாளை சரி நீ போ என்று அனுப்பிவிட்டு குறுக்குத் தடத்துலே நேரா அறங்காட்டு மேலே மதகிற்குச் சென்று அங்கிருந்து ஆவுடையா குடும்பனைத் தன் வாளால் வெட்டிப் போட்டு விட்டு அரண்மனைக்குத் திரும்பிவிடுகிறார். பிறகு அவ்விடம் சென்ற வெங்கலமடையாள் தன் கணவன் வெட்டுப்பட்டதை அறிந்து அழுது புரண்டு அங்கிருந்த தன் சுற்றத்தார்களிடம் சந்தனப்பட்டை, குங்குமப்பட்டை ஆகியவற்றைக் கொண்டு வந்து அரண்மனைக்கு எதிரில் ஒரு எரிகுழி ஒன்றினைத் தயார் செய்யுமாறு கூற அவர்களும் அங்கொரு எரிகுழி ஒன்றினை அமைத்துக் கொடுக்கின்றனர். பிறகு அவர்கள் கொண்டு வந்த விறகுகளைப் போட்டுத் தீ மூட்டும்படி கூறுகிறாள். தீ மூட்டப்படுகிறது; தீ நன்றாக எரியும்போது எரிகுழியினை மூன்று முறை வலமாக வந்து அனைத்துத் தெய்வங்களையும் வணங்கியவாறு அழுது புழம்பியவாறு சாபத்தினை அளித்தவாறு

**"சிறுமீன் பெருக பெருமீன் அருக"**

**"அரண்மனை அழிய ஆமணக்கு விளைய"**

தீயினுள் பாய்ந்து குதித்து விடுகிறாள். அப்போது வெங்கலமடையாள் கர்ப்பமாக இருந்தபடியால் வயிறு வெடித்து வெங்கலமடையாள் ஒரு புறமும் குழந்தை ஒரு புறமும் விழுந்து விடுகின்றனர். குழந்தையைக் காணி மல்லன் என்பவன் எடுத்து வளர்க்கிறான். பிறகு வெங்கலமடையாளிடம் இக்குழந்தையை இப்படி என்னிடம விட்டு விட்டீர்களே நான் எப்படி வளர்ப்பது என்று கேட்க கவலைப்படாதே நாங்க இருக்கிறோம் என்றபடி காட்சி கொடுத்ததாகக் கதை நிலவுகிறது. இக்கோவிலில் குடும்ப இனத்தவர்களில் ஒருவரே பூசாரியாக இருக்கிறார். ஆடி மாதத்தில் ஆடி 18 கழிந்த பிறகு வரும் செவ்வாய் மற்றும் வெள்ளிக்கிழமைகளில் வழிபாடு நடைபெறுகிறது. அப்போது தினைக்குளம் என்ற ஊரிலிருந்து சாமிப் பொருட்கள் அடங்கிய பெட்டியை (போளை மூடி) மேள தாளத்துடன் எடுத்துச் சென்று சுத்தம் செய்து பின்னர்ப் பொட்டு, சந்தனம் வைத்து வழிபடுகின்றனர்.

அருகில் உள்ள மச்சினன் சாமி என்றழைக்கப்படும் கருப்பராயன், கன்னிமார் கோவிலில் 7 ஊற்றுகள் தோண்டி தீர்த்தம் எடுத்து கும்பம் தாளித்து சக்தி அழைத்து, பின்னர்க் கும்பத்தினையும், போளை மூடியையும் எடுத்து வந்து கோவிலில் வைத்து வழிபடுகின்றனர்.

முதல்நாள் நிகழ்ச்சியின் போது படையலாக மூன்று படைப்புகளில் (படப்பு) அசைவம் படைக்கப்பட்டு வழிபடப் பெறுகிறது. அசைவ உணவில் முட்டை வைத்த கருங்கோழி சமைத்தும், மீன் குழம்பு, முட்டை, கஞ்சா, சுருட்டு, சாராயம் போன்றவை மூன்று படையல்களில் படைத்து வழிபடப்பெறுகிறது.

மூன்றாவது நாள் சைவப் பூசை நடைபெறுகிறது. சைவப் பூசையில் அவல், பொரிகடலை, தேங்காய், பழம், பால், இளநீர் போன்றவை படைக்கப்பட்டு வழிபடப்பெறுகிறது.

**தகவல்:** வீரப்பன் (ஊர்ப்பண்ணாடி) திணைக்குளம் தேவேந்திரகுல வேளாளர் வயது 45 படிப்பு இல்லை.

**ஆதாரம்:**

**முனைவர் ச. கலைச்செல்வன்**
உடுமலை வட்டார நாட்டுப்புறத்
தெய்வ வழிபாட்டு மரபுகள்.
வெளியிடப்படாத பி.எச்டி ஆய்வேடு.
பாரதியார் பல்கலைக்கழகம், 2002

# ஏரி காத்த குடும்பர் - முதுகுடிக் கல்வெட்டு

*கல்வெட்டறிஞர் முனைவர் இரா.ப. கருணானந்தன்,*
*தொல்லியல் துறை, உதகை-643 001*

இராசபாளையம் அருகில் உள்ள ஊர் முதுகுடி. முதுமையான குடிகள் வாழும் ஊர் என்ற பொருளில் பண்டைத்தமிழர் முதுகுடி என்று ஊர்ப் பெயர் சூட்டினர். இவ்வூரில் மள்ளர் சமுதாயத்தார் பண்டைநாள் தொடங்கி இன்று வரை தொடர்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர். இவ்வூரில் மள்ளர் பற்றிய கல்வெட்டு ஒன்று உள்ளது. எனவே பண்டைக் குடிகள் ஆகிய மள்ளர் வாழும் இவ்வூர் முதுகுடி என்று பெயர் பெற்றதில் வியப்பு ஏதும் இல்லை. முதுகுடியில் மள்ளர் சமுதாயத்தார் குலசேகர பாண்டியன் காலத்திலிருந்தே தொடர்ச்சியாக வாழ்ந்து வருகின்றனர். இவர்களுள் பெரிய தேவப்பள்ளர் என்பாரும் ஒருவர். இவர் வள்ளுவர் காட்டிய வழியில் செயற்கரிய செயல் செய்து சிறந்தவர். ஒரு சமயம் குலசேகரபாண்டியன் காலத்தில் முதுகுடிப் பகுதியில் பெருமழை பெய்தது. ஏரிகள், குளங்கள் அனைத்தும் நிரம்பி வழிந்தன. முதுகுடி ஊரிலிருந்த கருங்குளமும் நிரம்பி வழிந்தது. கொள்ளளவையும் தாண்டிக் கருங்குளத்திற்கு நீர் வந்து கொண்டிருந்தது. இனிக் காலத்தாழ்வு செய்தால் மழைநீர் குளத்தை உடைத்து ஊரையே அழித்துவிடும். ஊரை அழிவிலிருந்து காப்பதற்கான மனவலிமை யாருக்கும் இல்லை. ஊரைக்காக்க நான் இருக்கிறேன் என ஒருவர் புறப்பட்டார். அவர்தான் பெரியதேவப் பள்ளர். மழையையும் வெள்ளத்தையும் பொருட்படுத்தாமல் மண்வெட்டியுடன் சென்றார். எங்கு நோக்கினும் மழைநீர் வெள்ளம். உயிரைத் துச்சமெனக் கருதிச்சென்ற பெரியதேவன் தேவையான இடத்தில் அணையை வெட்டி ஊரைக்காத்தார். தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்ந்த பெரியதேவப் பள்ளரை மக்கள் அனைவரும் போற்றினர். புறநானூற்று மள்ளர் வழியில் வந்தவர் ஆதலின் இன்னுயிர் தந்து மன்னுயிர் காத்தார். மக்கள் போற்றி வணங்கும் நடுகல் தெய்வமும் ஆனார். வீரங்காட்டி உயிர் நீத்த பெரியதேவருக்கு ஒரே மகள். நன்றி மறப்பது நன்றன்று அல்லவா? அதே குளத்தின் கீழ்ேயுள்ள

வளமான நிலத்திலிருந்து அரைமா நிலத்தைப் பெரியதேவனுடைய மகளுக்கு மக்கள் கொடையளித்தனர். தன் உதிரம் கொடுத்து இறந்தாருடைய வாரிசுகளுக்குக் கொடுத்ததால் கொடை நிலத்தை உதிரப்பட்டி என அழைத்தனர். பெரியதேவரின் வீரச்செயலை முக்கோண வடிவக் கல்லில் கல்வெட்டாகவும் வெட்டி வைத்தனர். கல்வெட்டு இவரை முதுகுடிக் குடும்பரில் பெரியதேவப் பள்ளன் என அழைத்துள்ளது. குடும்பு என்பது பண்டைத் தமிழர் போற்றிய ஒரு சொல். பராந்தக சோழன் காலத்தில் உத்திரமேரூரில் வாழ்ந்த மக்கள் இக்குடும்பு என்ற சொல்லைப் பயன்படுத்தி வருகின்றனர். இத்தகைய குடும்பர் பிரிவைச் சேர்ந்தவர் ஏரிகாத்தவராகிய பெரியதேவப் பள்ளர்.

**கல்வெட்டு வாசகம்**

**முதுகுடிக் கல்வெட்டு :** *இடம்: முக்கோண வடிவக் குத்துக்கல்; அரசன்; குலசேகர பாண்டியன், 34-ஆம் ஆட்சியாண்டு.*

*1. ஸ்வஸ்தி ஸ்ரீ 2. குலசேகரதேவ 3. ர்க்கு யாண்டு34-வது 4. கருங்குளத்திற்க 5. ஒருபழி உண்டான 6. படியலே 7. இப்பழிக்கு இவ்வூர் 8. குடும்பால் பெரிய 9. தேவப் பள்ளன்அணை 10. வெட்டிப் போகையாலே 11. இவன் மகளுக்கு 12. ஊரார்களிட்ட உதி 13. ரப்பட்டி குடுத்தபடி . . . 14. நிலம் அரைமா அணை 15. நிலம் சந்திராதித்தவன் 16. மானு போவிப்பார்.*

*நன்றி, கொங்கு மாத இதழ் 1972, ப.301.*

## தேவேந்திரக் குடும்பர் நெல்லுவகை கொண்டு வந்த வரலாறு

பள்ளா குடும்பா மலை தகுந்த கண்டா
நாயன் அழைக்கிது ஏனின்னு கேளு
என்னென்ன வித்து வகை கொண்டு வந்த
பள்ளா அன்னச்சம்பா அரளிச்சம்பா
முத்துச்சம்பா மொலைச்சம்பா
மாவுக்கேத்த மணவாள
சோத்துக் கேத்த அருணாவால
குத்தாரி குதுகுதுப்ப இத்தனையும்
வித்துவகை கொண்டு வந்த
பள்ளனுக்கு நாடு கொடுக்கலாமா
நகரங் கொடுக்கலாமா இத்தனையும்
வெச்சு நா கொண்டாள மாட்ட
மகுந்திருந்து கல்குடிக்க மாந்தோப்பு
வேணும் தெளிஞ்சிருந்து கல்குடிக்க
தென்னந் தோப்பு வேணும் வெள்ளி
கட்டுன பானையில வெதை
ஊரப் போட்டுத் தட்டிக் கொட்டி
பொட்டில போட்டு அள்ளி எருஞ்சா
பவளக் கொடியா அடிநாத்து வளர
முள்ளி எருஞ்சா பவளக் கொடியா
முடிநாத்து வளர நானூறு வண்டில

நாத்து வந்து நிக்குது நா

மாட்டேனுங்கிறா தேவேந்திரப் பள்ளி

பட்டறையத் தெறந்து பதிங்கலா

முத்தெடுத்துப் போடு சேரு வந்திறங்கு வா

தேவேந்திரப் பள்ளி மம்பட்டி கொண்டு

மடையத் தொறந்து விடு நீரொடு

நெல்விளையும் நீதியுள்ள கரவழி

கட்டுக்கலங்காணும் கதிருக்கு

நெல்காணும் பள்ள பெகுமானம்

பட்டறையி நெல்லோட பள்ளி

பெகுமான சுத்துக் களத்தோட

**தொகுப்பு:**

**வே. செல்வராஜ்**
தேவேந்திரகுல வேளாளர்
*வழிபாட்டு மரபுகள், பி.எச்.டி, ஆய்வேடு.2002*
*பின்னிணைப்பு, ப.31.*

# இந்திரன் மழை கொண்டு வந்த கதை

நாட்டில் மழையில்லாத காலத்தில் மக்கள் பெரும் அவதிப்பட்டனர். அப்பொழுது ஈஸ்வரன் மக்களுக்குப் படியளக்க முடியாமல் அவதிப்பட்டார். அப்பொழுது ஈசுவரனும் தேவேந்திரனும் வறண்ட ஆற்றில் மணலைச் சுத்தம் செய்து, மணல் திட்டு அமைக்கின்றனர். பின்னர் ஆயிரம் லிங்கத்தை ஈசுவரன் மணல் திட்டின்மேல் வைக்கிறார். அத்துடன் உயிர் லிங்கத்தையும் வைக்கிறார். பின்னர் அதன் முன் அமர்ந்து ஈசுவரனும் தேவேந்திரனும் கண்களை மூடித் தவம் புரிகின்றனர்.

இருவரும் தவம் புரியும் பொழுது, ஊசி அளவு மின்னல் மின்னி, பாசி போல் மழை பெய்தது. ஊசி அளவு மின்னலும் பாசி போல மழையும் சேர்ந்து அளவுக்கு அதிகமாகவே மழை பெய்தது. நொங்கும் நுரையுமாக வந்த மழைத் தண்ணீர் ஈசுவரன் தவம் புரியும் இடத்திற்கு வந்தது. முதலில் கணுக்கால் அளவு தண்ணீர் வந்தது. ஒரு நிமிடத்திற்குப் பிறகு முழங்கால் அளவிற்குத் தண்ணீர் வந்தது. மழையில்லாத காலத்தில் ஐந்து தலை கொண்ட பாம்பு தீனியில்லாமல் வறண்ட ஆற்றில் இருந்தது. மழைத் தண்ணீர் பிறகு, மார்பு அளவிற்கு வந்தது. பின்னர் கண்ணைத் தொடும் அளவிற்கு ஆற்றில் தண்ணீர் வந்தது. ஆற்றில் அதிகமாகத் தண்ணீர் வந்ததைக் கண்ட ஈசுவரன் தேவேந்திரனை நோக்கி லிங்கத்தை எல்லாம் எடு, நாம் தெய்வலோகம் போகலாம் என்று கூறுகிறார். ஆயிரம் லிங்கத்தை எடுத்துக் கொண்டு போய்ப் பார்க்கும் போது உயிர் லிங்கத்தைக் காணவில்லை.

அப்பொழுது ஈசுவரன் சித்திரபுத்திரனிடம், ஆற்றை வளைத்து வடிகட்டி, உயிர் லிங்கம் உள்ளதா எனப் பார்க்குமாறு கூறுகிறார்.ஆற்றை வடிகட்டிப் பார்க்கும் பொழுது உயிர் லிங்கத்தைக் காணவில்லையென்றும், அருகில் ஐந்து தலைப்பாம்பு பல நிறங்களுடன் உள்ளது என்றும் ஈசுவரனிடம் சித்ரபுத்திரன் கூறுகிறார். அந்தப் பாம்பின் வயிற்றில் ஏழு பெண்கள் உள்ளனர் என்று கூறுகிறார் சித்திரபுத்திரன். அந்தப் பெண்கள் ஏழு கன்னிகளாகப் பிறக்கிறார்கள். பிறந்த ஏழு

கன்னிகளும் இரதம் ஓட்டச் செல்கிறார்கள். ஏழு கன்னிகளும் செந்தாமரைக் குளத்தில் குளிக்கின்றார்கள். குளித்துவிட்டு ஏழு கன்னிகளும் மேலோகம் சென்று விடுகின்றனர். அக்குளத்திற்கு மீன் பிடிப்பவன் (சிவியன்) ஒருவன் மீன்பிடிக்கச் செல்கிறான். ஏழு கன்னிகளும் குளித்துவிட்டுச் செல்லும்போது, எழுவரில் இளைய கன்னியின் முடியொன்று குளத்தில் விழுந்துவிட, அதை மீன் ஒன்று விழுங்கி விடுகிறது. மீன் பிடிப்பவன் (சிவியன்) பிடித்த மீனை டப்பா துளுக்கனிடம் விற்றான். அப்பொழுது டப்பா துளுக்கன் மீனை அறுக்கும்பொழுது, மீனின் வயிற்றில் 60 அடிமுடி இருந்தது. இதைக் கண்ட டப்பா துளுக்கன் மீன் பிடித்த இடம் பற்றி சிவியனிடம் (மீன் பிடிப்பவன்) கேட்க, அவன் செந்தாமரைக் குளத்தில் பிடித்ததாகக் கூறுகின்றான். அக்குளத்தைக் காணவேண்டுமானால் நீர் ஆறு, நெருப்பு அறு, கல் ஆறு, முள் ஆறு இதைத் தாண்டிச் செல்ல வேண்டுமென்று கூறுகிறான். அப்படிச் சென்றால் நீர் ஆறு வழியாகச் சென்றால் நீராகவும், நெருப்பு ஆறு வழியாகச் சென்றால் நெருப்பாகவும், கல் ஆறு வழியாகச் சென்றால் கல்லாகவும், முள் ஆறு வழியாகச் சென்றால் முள்ளாகவும் ஆவாய் என்று சிவியன் கூறுகின்றான். இவ்வழி அல்லாமல் நூல் ஏணி வழியாய்ச் சென்றால் செந்தாமரைக் குளத்தை அடையாளம் என்று கூற, அவ்வழியே சென்று செந்தாமரைக் குளத்தை அடைகிறான் டப்பா துளுக்கன்.

அப்பொழுது ஏழு கன்னிகளும் அக்குளத்திற்குக் குளிக்க வருகின்றனர். எழுவரும் குளித்த பிறகு, எழுவரில் இளையவள் காந்த மலரா ஆண் வாடை வீசுவதாகக் கூறுகிறாள். மூத்த ஆறு பேரும் இளையவள் காந்த மலரா கூறியதைக் கேட்டு, இத்தனை நாள் இல்லாத ஆண்வாடை இப்போது எப்படி அடிக்குமென்று இளையவளைக் கேலி செய்கின்றனர். எழுவரையும் கண்ட டப்பா துளுக்கன் அவர்களைத் துரத்துகின்றான். எழுவருக்கும் உதவி இல்லாத போது, எழுவரும் கைதட்டுகிறார்கள். அப்பொழுது கைலங்கரி தீப்பற்றி எரிகிறது. கைலங்கிரி தீப்பற்றி எரிவதை ஈசுவரன் பார்க்கிறார். உலகில் உள்ள கழுகுகள் அனைத்தையும், நீர் கொண்டு நெருப்பை அணைக்குமாறு கூறுகிறார். ஆனால் கழுகுகள் நெருப்பை அணைக்குமாறு சொல்லக் கேட்டு முயன்றுவிட்டு முடியவில்லை என்று ஈசுவரனிடம் கூறுகின்றன.

ஈசுவரன் நெருப்பு எரிவதைப் பார்த்து வருமாறு கூறுகிறார். அவ்வாறு சித்திரபுத்திரன் செல்லும்போது ஏழு கன்னிகளும்

எங்களுக்கு ஓர் அண்ணன் வேண்டுமென்று ஈசுவரனிடம் கூறுமாறு கேட்கின்றனர். உங்களுக்கு அண்ணன் கிடைப்பானென்று ஈசுரவன் கூற, ஏழு கன்னிகளும் நெருப்பைக் கைதட்டி அணைத்தனர். உங்களுக்கு அண்ணன் வேண்டுமெனில் பூமியை ஒரு சட்டியாகவும், வானத்தை ஒரு மத்தாகவும் கொண்டு மணலைக் கயிறாகக் கொண்டு ஏழு இரவு, ஏழு பகல் கடைந்தால் உங்களுக்கு அண்ணன் பிறப்பான் என்று ஈசுவரன் கூறுகிறார். அப்படி கடையும் பொழுது அண்ணன் பிறந்து, மாசிகுண்டு மலைமேல் போய் உட்கார்ந்து கொண்டான். ஏழு கன்னிகளை நோக்கி ஈசுவரன் உங்களுக்கு அண்ணன் பிறந்து, மாசிகுண்டு மலைமேல் உள்ளான் அழைத்து வருக எனக் கூறுகிறார்.

ஏழு கன்னிகளும் மலையை நோக்கிச் செல்கின்றனர். சென்று, அண்ணனைக் கூப்பிடும் பொழுது நான் வர வேண்டுமானால் ஆயிரம் ஆட்டுக்கிடாய் காவு கொடுத்தால் வருவதாகக் கூற, அவ்வாறே 1000-ம் கிடாய் கொடுத்தனர். 1000 கொடுத்தும் அடி நாக்கு நனையவில்லை. 300 கொடுத்தும் நுனி நாக்கு நனையவில்லை. உனக்கு என்ன வேண்டும் என்று ஏழு கன்னிகளும் மீண்டும் கேட்க, மதுரை மீனாட்சி பட்டத்து வெள்ளை யானை கொடுத்தால் வருவதாகக் கூறுகிறான். ஏழு கன்னிகளும் மீனாட்சியிடம் சென்று, என் அண்ணன்வர, உனது பட்டத்து யானையைக் கேட்கிறான் என்று கூறுகின்றனர். 66 வளவும் 77 குணமும் கொண்டவள் மீனாட்சி. ஏழு கன்னிகள் கூறியதைக் கேட்ட மீனாட்சி, என் யானையைக் காவு கொண்டு உன் அண்ணன் இறங்கி வரட்டும் என்று கூறுகிறாள். ஏழு கன்னிகளும் அண்ணனிடம் சென்று, பட்டத்து வெள்ளை யானையைக் காவு எடுத்துக்கொள் என்கின்றனர். உடனே அண்ணன் எனக்கு மீனாட்சி சொன்னதே போதும் வருகிறேன் என்று கூறுகிறான். அண்ணன் எழுவரிடமும் உங்களுக்கு என்ன ஆபத்து என்று கேட்க, ஏழு கன்னிகளும் டப்பா துளுக்கன் எங்களைத் துரத்துகிறான். அதனால் நீ அவனைச் சிறை எடுக்க வேண்டுமென்று கூறுகின்றனர். அவனும் அவ்வாறு செய்கிறான். பிறகு எழுவருக்கும் துணையாக இரதம் ஓட்டுகிறான்.

இரதம் ஓட்டும் பொழுது மண்ணொடையான் (கொசவன்) தெரு மேல் இரதம் செல்கிறது. அப்பொழுது இளைய கன்னி காந்த மலரா, மண்ணொடையானிடம் சிறு சொப்பு கேட்கிறாள். அப்பொழுது மண்ணொடையான் ஆறு வருடம் ஆறுபொழுது

செய்து இருக்கும் போது, நீ சும்மா சொப்புகேட்கலாமா? என்று காந்த மலராவைச் சாட்டையால் அடித்து விடுகிறான். உடனே ஏழு கன்னிகளும் மண் சொப்புகள் அழிந்துவிட சாபமிடுகின்றனர். அதே போல் எல்லாச் சொப்புகளும் அழிந்துவிடுகிறது. இதனை அறியாத மண்ணொடையான் மனைவி, கணவனை நோக்கி இரதம் ஒன்று செல்கிறது. அதன்முன் விழுந்து நடந்ததைக் கூறு என்கிறாள். அவனும் அவ்வாறு செய்ய, ஏழு கன்னிகளின் அண்ணன் என்னவென்று கேட்க, சொப்புகளில் பாதி மட்டும் கிடைக்குமென்று காந்த மலரா கூறுகிறாள். ஊரில் இரண்டு முனியப்பன் சிலை செய்து வைத்தால் உனக்குப் பாதி சொப்புக் கிடைக்குமென்று கூறுகின்றனர். அவ்வாறு பாதி சொப்புகள் கிடைக்கிறது. இவற்றைச் சொல்லிவிட்டு அண்ணன் தெனங்காட்டிற்கு இரதம் ஓட்டுகிறார். அப்படிச் செல்லும்போது காவலர் இருவர் காவல் காக்கின்றனர். காந்த மலரா இரண்டு தெனங்கதிர் (தினை) கேட்க, அறுக்காமல் இருக்க கதிர் கேட்பதா என்று காந்தமலராவை காவல்காரர் அடித்துவிட, கோபங்கொண்ட காந்த மலரா இருவரின் உயிரை செம்பில் (சொம்பு) பிடித்துப் போட்டு விடுகிறாள். காவலர்களின் தாய் காந்த மலராவிடம் தன் பிள்ளைகளைக் கேட்க, உடனே காந்த மலரா தேனும், தினையும் பூசையாகக் கொடுக்க இருவரும் செம்பில் இருந்தவர்கள் உயிர் பெறுகின்றனர்.

**தகவல்:**

***மாரிமுத்து (40)***
தேவேந்திர குலவேளாளர்
ஓமலூர், சேலம் மாவட்டம்.

## 4. தேவேந்திரர் வீழ்ந்த வரலாற்றுக் கதைப்பாடல்

மஞ்சி கொஞ்சும் மேற்குமலை
மலையாள மேற்றிசை சாரலுமே
கொட்டகுடி மலைதனில் முகில்மோதி
குதித்துத் திரண்டு வரும் பெருவெள்ளம்

அணையும் குளம் நிரப்பி
அடங்கா வாய்க்கால் எழும்பி
மழவரும் உழவருமே
உழது சம்பா நெல் விதைச்சு
தங்கமணி குன்றுமணி
தாளடிச்ச சம்பா நெல்லு
சீமைக்குப் போகும் சீரகச் சம்பா
அரியரியாய் நட்டு வச்சு

ஆயிரமாயிரம் மாடு பூட்டி
அம்பாரமாய் நெல் அடிச்சு
ஆயிர வேலி நஞ்சபுஞ்ச கட்டி
அனுதினமும் அன்னதானம்
ஆக்கிப் படைச்ச காலாடியார்

பார் புகழும் பாண்டியர் குலம்
பாண்டி, பண்ணாடி
பகை முறிக்கும் தேவேந்திர குலத்தார்,
படை திரட்டும் காலாடியார்,

நடுவும் நீதியும் நன்றாய் தான் விளங்க
குடும்பர்களை ஆளுமிந்த
அரசு குடும்பனாரும்
அவர்தம் மாப்பிள்ளைமார்
அழகப்பன் காலாடியாரும்
அரசாண்ட பூமியிது

அடைக்கலம் என்று வந்தார், வடுகர்
அண்டி நிற்க இடம் கேட்டார்.

போனாயக்கனூரிலே
கிருட்டணப்ப நாயக்கன் தான்
சமீனாய் அரசாண்டான்

ஆந்திர நாட்டிலிருந்து
கொல்லன், கம்மாளன் என்று
ஆயிரம் பேராய் குடியமர்த்தினான்.
ஆள்பலமும் ஆட்சி பலமும்
அதிகார பலமும் தான் சேர்ந்து
அடாத செயல் செய்தான்.
அத்தனை சாதியிலும் தினமும்
அழகுப்பெண் வேண்டுமென்பான்
அயல்குலப் பெண்களையே
அந்தப்புரத்தில் நிரப்பி வைத்தான்.
பெரும் படை திரட்டி வரும்
பீஜப்பூர் சுல்தானோடு
போரிட
ஆள் திரட்டி வர
மும் மதுரை ஆள்பவனாம்
முத்து வீரப்ப நாயக்கன் அவன்
அங்கிருந்து தூது விட்டான்
முரசறைந்தான் சேவுகனும்
முத்து வீரப்பன் கட்டளையே;

ஆடி மாசத்தில்
ஆள் அனுப்ப முடியாதென்றார்
விதை போடும் வேளை
வீச்சறிவாள் தூக்க மறுத்தார்.
ஐம்பொழுது கழிந்த பின்னே
ஐம்படையும் திரட்டி வருவோம்
குடும்பரும் காலடியாரும்
கூடியவர் முடிவு செய்தார்.

அடங்கா சினம் கொண்டான் சமீன்
ஆள் அனுப்பவில்லை என
குடும்பர்களை வேரறுக்க
கொடும் சதி திட்டமிட்டான்.

ஆறுகாலம் பூசை செய்தார்
அனுதினமும் தானம் செய்தார்

ஆநிரை பாலெடுத்து
அருகனுக்கு பாலாபிசேகம்
செய்து வந்தார்.
பழனி ஆண்டவருக்கு
டந்தக்காலொடு
ஐங்கால் மண்டபமிட்டு
ஆராதனை செய்து வந்தார்.

அழகப்பன் காலாடியார்
ஆண்பிள்ளை ஆறு பேரோடு
அழகான பெண் பிள்ளை என
ஏழுபேர் இவர் மக்கள்.

சந்தன மணம் வீச
மாரியம்மன் பூசை முடித்தாள்.
மாலையிலே மச்சு வீட்டில்
நெய்பூசி கூந்தல் விரித்து
மயிலிறகால் கோதி விட்டாள்
மல்லிகைப் பூவாய் நின்றாள்
குலக் கொழுந்து செல்லாத்தாள்

கரியேறி பரியேறி
நாயக்கன் சமீன்
கடைவழியே போகையிலே
அன்னாந்து பார்த்தான்.
ஆர் அது வென்ற
அங்கு பிள்ளையிடம்
கேட்டு வைத்தான்
ஆரணங்கு அவள்

அழகப்பன் காலாடியார் மகள்
அரண்மனை அழைத்து வர
ஆசைப்பட வேண்டாமென்றார்.
அழகப்பரிடம்
அரண்மனை ராணியாக்கி
அந்தப்புரத்தில் வைக்கிறேன்
அனுமதிக்க வேண்டுமென்றான்.

காலாட்படை எங்குலம்
கண்மாய் நீராணிகள் எங்குலம்

ஆயிரம் ஆநிரை கொண்டோர்
ஆள்படை திரண்ட குலத்தோர்
தேவருக்கு தேவரான தேவேந்திர குலமாம்
பார் புகழும் பாண்டியராம் எம்குலம்

வந்தேறி வடுகர்களே
போக்கத்த பூனைபுடிக்கி
நாயக்கரே யுன்குலம்
பாண்டியர் சண்டையிட்டு
பாழாய்ப் போன போது
ஒண்ட வந்த ஊர்ப் பிடாரி
நச்சரவு நாயக்கர் குலம்
கொள்வினையா கொடுப்பினையா
எப்போதும் நாங்களில்லை
பெண் சேவை செய்யும்
சேவகரல்ல நாங்கள்

மச்சான் மாமன் உறவாட
பேடியல்லோம் நாங்கள்
பெண் கொடுக்கிலோம்

ஆசை விட்டொழி
அரண்மனை வாழ்ந்திடவே
ஆத்திரத்தோடு வெளியேறினார்
தலை குடும்பரும்
அழகப்பன் காலாடியாரும்
அவர்தம் வழியினரும்
ஆரமர யோசித்தார் இரவெல்லாம்.....

பெண் கொடுக்க வில்லையெனில்
பெரும் சனத்தை அழித்துவிடுவான்
என்ன செய்யலாமென
எல்லோரும் ஓர் கணம் யோசித்தார்.

செல்லப்பன் காலாடி செம்புறைக் காலாடி
சோலமலைக் காலாடி சுந்தரம் காலாடி
சந்தனக் காலாடி சங்கரன் காலாடி
அறுவரும் திட்டம் தீட்டி
அரண்மனையில் நுழைந்திங்கு

சமீன் மகள் சக்கம்மாளை
சிறை யெடுக்க துணிந்து விட்டார்.
அதிகாலை புலருமுன்னே
ஆநிரைகள் திரட்டிவா
அரண்மனைக்கு போவது போல்

அண்ணன்மார் அறுவருமே
அரங்கினுள் நுழைந்தனரே
சயனித்திருந்த சக்கம்மாளை
சிறுவழி திறந்து
சிறையெடுத்து
குதிரை லாயம் போய்
அறு புரவி யோட்டி
ஆறு கால் பாய்ச்சலிலே
அஞ்சாது போகையிலே
தேவி பட்டணமென்னும்
தேவாரம் போகையிலே

சேதியறிந்தான்
கிருட்டணப்ப நாயக்கனவன்
ஆள்படை திரட்டி வந்து
மணப்பறையில் வழி மறித்தான்
கிண் கிண் ணென
சிலம்பு சுழன்றாட
டண் டண் ணென
குத்தீட்டி பாய்ந்தோட

வடுகரும் வேந்தரும்
வேங்கையும் யானையுமாய்
மும்மணி நேரமுமாய்
மோதிப்பார்த்தும் முடியவில்லை.
ஆங்கோர் பில்லி (சூனியம்) விட்டான்
அரண்மனைக்காரன் கில்லிப்பார்த்தான்

அசையாது நின்றுவிட்டார்
அறுவருமே
சக்கம்மாள் பெண் மகவை
சடுதியிலே வெட்டிப் போட்டார்
ஆள் துணைக்கு வந்த

அழகப்பன் காலாடியார்
வடுகண் பில்லி முறித்தார்
கில்லி யறுத்தார்.

பெங்கிட்ட குடும்பரும் காலாடியாரும்
வடுக நாயக்கனோடு
வன்பகை கொண்டிட்டார்
ஆயிரம் பேரைக் கொன்றழித்தான்
ஆயிரம் வேலி களனியை
அபகரித்தான்
பொம்மன் திம்மன் எனும்
புரியாமொழி வடுகனாலே
வடுகன் பெண் கேட்டு
வாரிசு அழிந்து போக
வந்து பிறந்த செல்லாயி
பெண் மானம் காத்திடவே
பெண்டாள வருமுன்னே
குத்து விளக்கு வச்சிட்ட
குளிக்குள் நீயிறங்கு

அண்ணன்மார் வருவாரென
அகல் விழி பார்த்திருந்தாள்
மூட வடுகனவன்
முச்சந்திமயல் வந்து விட்டான்
அண்ணன்மார் சொல் கேட்டு
ஆறு பேர் தங்கையவள்
ஆழக்குழியில் சமாதியானாள்

சமாதியான சேதிகேட்டு
அண்ணன்மார் அறுவருமே
அரண்மனையைத் தீயிட்டார்
கிருஷ்ணப்பன் தலையை
கிள்ளியெடுத்தார் அக்கனமே. . .
ஆயிரம் பேர் கொண்ட குலம்
அழிந்து போனது கண்டு
ஆராத்துயரடைந்து
அங்கிருந்து வெளியேறி
சின்னத்தேவி குளத்தருகே

சிறுவூர் கட்டி வாழ்வார்
ஆண்டோர் தினமும்
ஐந்தூர் தான் சேர்த்து
ஐயன் காலாடி பூசை செய்ய
பச்சை ரத்தம் பலி கொடுத்து
பட்சிகளுக்குச் சோறிட்டு
சாமத்தில் சாமியிறக்கி
கீழ்த்திசை நோக்கி
செல்லத்தம்மனைத் தானழைத்து
வான் பூசை நடத்தும் போது
கொட்டி மழை கொட்டி
புது வெள்ளம் தான் சேர்த்து. . .
பூமியில் புதைந்து போன
செல்லாயி என்றிவள்
தெய்வமான கன்னி தெய்வம்,
காலமெல்லாம் காத்திடுவாள்
தேவேந்திர குலத்தாரையே. . .

(இக்கதைப் பாடல் போடி, தேவாரம் பகுதியில் இன்னமும் தேவேந்திர குல மக்களிடம் வழிவழி வழங்கி வருகின்றது)

**ஆதாரம்: டாக்டர் குருசாமிசித்தர் (ப.ஆ.)**
தமிழர் பண்பாட்டு வரலாறு, தொகுதி (1)

# 5. நெல்லின் தோற்றக் கதைகள்

## 1. தேவேந்திரன் தோன்றிய கதை

ஈஸ்வரன் உலகிற்கே படியளந்து கொண்டு வரும்போது அவருக்கு வியர்வை ஏற்படுகிறது. அந்த வியர்வையைக் கீழே உதிர்க்கிறார். அவ்வியர்வை ஒரு வள்ளைக் கொடியில் விழுந்து குழந்தையாக மாறிவிடுகிறது. அப்பொழுது ஈஸ்வரி சாமி ஏதோ குழந்தையொன்று வள்ளைக் கொடியில் கிடந்து அழுகிறது; அது என்னன்னு சொல்லுங்கோ என்று ஈஸ்வரனிடம் கேட்கும்போது ஈஸ்வரனும், ஈஸ்வரியும் அங்கு சென்று பார்க்கின்றனர். அப்போது ஒரு குழந்தை ஒரு செடியின் மீது கிடக்கிறது. இந்தக் குழந்தையை எப்படி வளர்ப்பது என்று ஈஸ்வரி கேட்க ஈஸ்வரன் ஒரு பசு மாட்டினைத் திட்டித்துவிட்டு தினமும் சென்று அக்குழந்தை அழும் நேரங்களில் தானாகப் பாலைச் சொறியும்படி செய்து விடுகிறார். அக் குழந்தைக்கு அப்படியே வளர்ச்சிபெற்று வயது பத்தும் ஆகி விடுகிறது. அப்போது ஈஸ்வரன் வந்து அந்தப்பையனைப் பார்த்துவிட்டுச் செல்லும் போது நான் வரும் சமயத்தில் எனக்குக் கஞ்சி வைத்திரு என்று கூறிவிட்டுச் செல்கிறார். இவ்வாறு சென்ற ஈஸ்வரன் உலகில் உள்ள உயிர்களுக்குப் படியளந்து வரும் சமயத்தில் ஒவ்வொரு முறை வரும் போதும் இப்பையன் இருக்கும் குடிசைக்கு வந்து இப்பையன் வைத்திருக்கும் கஞ்சியைக் குடித்துவிட்டுச் செல்வது வழக்கமாக இருந்து வரும் சமயத்தில் ஒரு நாள் ஈஸ்வரனும் இப்பையன் குடிசைக்கு வருகிறார். இப்பையன் அவருக்கு கஞ்சி வைக்கிறான். அப்போது அடுப்படியில் ஒரு நெல்கதிர் முளைத்து வளர்ந்து வந்துள்ளது. அன்று அப்பையன் வைத்த கஞ்சி பொங்கிவர அப்பையன் ஒன்றும் அறியாமல் அடுப்படியில் வளர்ந்துள்ள நெல்லங்குழையில் இருந்த நெல்மணிகளை உருவி கொதிக்கும் கஞ்சியில் போட்ட கஞ்சி பொங்குவது நின்றுவிடுகிறது. பிறகு அக்கஞ்சியை ஈஸ்வரனுக்கு வழங்குகிறான். அவரும் ரசித்துக் குடித்துவிட்டு என்ன தம்பி ஒரு நாளாவது கஞ்சி இவ்வளவு தித்திப்புடன் சுவையாகவும் இல்லையே என்று கேட்க சாமி ஒரு நெல்லங்குலை ஒன்று அடுப்படியில் வளர்ந்திருந்தது கஞ்சி

பொங்கி வர நான் அறியாமல் அதனை உருவிப் போட்டுவிட்டேன். அந்த நெல்லங்குலையின் ரசமானது சுஞ்சியில் கலந்து உங்களுக்கு தித்திப்பாய் உள்ளது என்று அப்பையன் கூறுகிறான். அதற்கு ஈஸ்வரன் அப்பையனிடம் நீ நெல்லம் பயிர் வைத்தால் காப்பாற்றுவாயா என்று கேட்க நான் நன்றாகவே காப்பாற்றுவேன் என்று அப்பையன் கூறியவுடன் ஈஸ்வரன் மேலோகம் சென்று எல்லா நெல் வகைகளையும் ஊசி நூலில் கோர்த்து கீழே கொண்டு வருகிறார். அப்போது ஒரு நெல் மணி மட்டும் நாய்ப்புணிமேல் விழுந்து விடுகிறது (குருவை நெல்) (ஆலயத்திற்கு அந்நெல் பொங்கல் வைக்க ஆகாது). பிறகு கொண்டு வந்த நெல்லைப் பாத்தி கட்டி விதைத்து விடுகிறார். அப்பதர் நன்றாக வளர்ந்து வருகிறது. பிறகு மேலோகம் சென்று பசு மாடுகளை நோக்கி, நீங்கள் கீலோகம் சென்று ஏரோட்டி, பரம்பு ஓட்டி நெல்லு நாத்து நட்டுவிட்டு வாங்கோ என்று கூற அம்மாடுகள் நாங்கள் எல்லாம் அங்கே போக மாட்டோம் நாங்கள் அங்கு போனால் அவர்கள் எங்களை அடித்து தொந்தரவு செய்வார்கள்; காலால் உதைப்பார்கள்; கைகளால் அடிப்பார்கள் என்று கூறி அவை போக மறுத்துவிட, ஈஸ்வரன் அவைகளிடம் அவர்கள் அவ்வாறு செய்ய மாட்டார்கள்; உங்களை வருசத்திற்கொரு முறை தை நோன்பன்று பொங்கல் வைத்து உங்களைக் கொண்டாடுவர். நான் அன்று உங்களை அடிக்க விடமாட்டேன். நீங்கள் போய்த்தான் ஆக வேண்டும் என்று கூறி அவைகளைக் கீலோகம் அனுப்பி வைக்கிறார். அப்போது இப்பையனுக்கு 16 வருடமாகிவிடுகிறது. அப்போது ஈஸ்வரன் கீலோகம் வந்து இந்தப் பையனிடம் நீ தெய்வலோகக் கன்னிகளிடம் பேசக்கூடாது; நீ பேசினால் உனக்கு உயிர் போய்விடும். நீ பேசாமல் நாற்றை எடுத்துப்போடு; அவர்கள் அதனை நடுவார்கள் என்று கூறிவிட்டுச் சென்று விடுகிறார். அதே மாதிரி அந்தப் பையனும் அவர்களுக்கு முடிநாத்து எடுத்துப்போட அவர்களும் பாட்டுப்பாடி அதனை நடுகின்றனர். அந்தப் பையன் வயலில் நடவுகளையும் பார்த்துக்கொண்டு மாலையில் வீடு வந்து சமைப்பதையும் பார்க்க சிரமமாக இருப்பதால் ஈஸ்வரன் வந்தால் கேட்டு விடுவது என்று உறுதியுடன் இருக்கிறான். அதற்கு முன்பே அந்த ஏழு கன்னிகளில் இருவர் மேல் ஆசை கொண்டிருக்கிறான். அவ்வாறு இருக்கும் சமயத்தில் ஈஸ்வரனும் அங்கு வருகிறார். ஈஸ்வரனிடம் இனி எனக்குக் கல்யாணம் வேணுமுங்கோ ஒரேஆள் எப்படி இத்தனை

வேலைகளைப் பார்ப்பது என்று கேட்க அவரும் சரி இந்த ஏழு கன்னிகளும் நாத்துநட்டுவிட்டு வீடு செல்லும் போது யாரோ ஒருவர். மீது நீ சேற்றை எடுத்து இறைத்து விடு அவர்களுக்கு மச்சம் ஏற்பட்டு அவள் உன்னுடனே இருந்து விடுவாள் என்று கூறியவுடன் அவனும் சரி என்று அந்த ஏழு கன்னிகளும் நாத்து நட்டுவிட்டு வரப்பில் செல்லும்போது அவன் இரு கைகளிலும் சேற்றை எடுத்து இருவர்மேல் போட்டு விடுகிறான். அதிலிருந்து இருவருக்கும் மச்சம் ஏற்பட்டு இங்கேயே தங்கி விடுகின்றனர். பிறகு இவர்கள் நாத்து நட்டு நடவு செய்த வயலில் விளைச்சல் நன்றாக விளைந்தால் எனக்கு என்ன தருவாய் என்று அப்பையன் ஈஸ்வரனிடம் கேட்க, ஈஸ்வரன் உனக்கு என்ன வேண்டுமோ கேள் தருகிறேன் என்று கூற எனக்கு, கள்ளுக் குடிக்கோ கள நெல்லும் வேணும்; மகுந்திருக்கோ மாந்தோப்பு வேணும், குளிர்ந்திருக்கோ கூத்தியாள் வேணும் இதனுடன் ஒட்டைக் கூடை ஒட்டை மம்புட்டி வேணும் என்று கேட்க ஈஸ்வரனும் சரி என்று கூறி இதனுடன் கட்டுக் களத்திற்கு வந்தவுடன் 1 கூடை, தாம்படி நெல் 1 கூடை இதனுடன் கட்டுக்களப்பேரு, பில்லு ஆகிய அனைத்தும் உன்னுடன் சேர்ந்தது. இனிமேல் நீ பொண்டு புள்ளைகளை வைத்து மகராசனாய் பொழைத்துக் கொள் என்று கூறியதாகக் கூறப்படுகிறது.

தொகுப்பு: டாக்டர் சி. பரமேஸ்வரி
தேவேந்திர குல வேளாளர் சமூக வரலாறும் பண்பாடும், பின்னிணைப்பு-ப.3.
(பி.எச்.டி. ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், 1999)

## 2. தேவேந்திரன் கழியன் கதை

பரமசிவனும் பார்வதியும் மேலோகத்தில் அதிகாலையில் கிழக்கிலிருந்து மேற்காக உலகைச் சுற்றி வருகின்றனர். அப்பொழுது பார்வதிக்கு வியர்க்கிறது. வியர்வையைத் தனது கையால் வழித்துக் கீழே எறிகின்றாள். மறுபடியும் பொழுது சாயும் நேரம் மேற்கிலிருந்து கிழக்காகப் பார்வதியும், பரமசிவனும் வருகின்றார்கள். பார்வதி வியர்வையைத் துடைத்தெறிந்த இடத்தில் ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்கின்றது. பார்வதி சத்தம் வரும் திசை நோக்கிப் போக, பரமசிவனும் அங்கு வருகிறார். அங்கு வல்லக்கொடியின் மீது ஒரு குழந்தை அப்பொழுதுதான் பிறந்தது போன்று கிடக்க, சிவன் பார்வதியிடம் நீ துடைத்துப் போட்ட வியர்வை நமது குழந்தையாகி இருக்கிறது என்று சொல்லும் முன்னரே, தாய் பாசத்தால் குழந்தையின் தொப்புள் கொடியை அறுத்துப் போட்டுவிட்டு தனது முந்தானையில் மூடி எடுத்துச் செல்கின்றாள்.

இக்குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது. இக்குழந்தைக்கு பார்வதியும் பரமசிவனும் 'கழியன்' என்று பெயர் சூட்டுகின்றனர். குழந்தையிலேயே அவன் சுறுசுறுப்புடன் வளர்ந்து வந்தான். அவன் வீட்டில் ஒரு நாள் ஒரு நெல்மணியைக் கண்டெடுத்தான். அந்த நெல்மணியை வீட்டிற்குள்ளேயே யாருக்கும் தெரியாமல் சேற்றை (சிறிய வயல்) உண்டாக்கி நடுகின்றான். அந்த நெல் அஞ்சு, ஆறு நாற்றுகளை உண்டாக்கியது. அதனை எடுத்து வேறொரு இடத்தில் நடவு செய்கின்றான். அந்த நெல் நாற்றுகள் ஆறு மாதத்திற்குள் நன்றாக விளைந்துவிடுகின்றன. இவ்வாறு விளைந்த நெல்லைக் கொண்டு ஆயிரமாயிரம் நெல்லாகப் பெருக்கி, காடுகளை வயலாக்கி நெல் விளையும் விளைநிலமாக மாற்றுகின்றான்.

ஒரு நாள் பார்வதி திருவரகன் (வரகுச் சோறு) சோறு சமைச்சுக்கிட்டு இருக்கும்போது கழியன் கொஞ்சம் நெல் மணியிலிருந்து அரிசியைத் தொளித்து (பிரித்தெடுத்து) எடுத்து சோற்றுப்பானைகுள் போட்டுவிடுகின்றான். பார்வதி திருவரகன் அரிசிச் சோறில் புழுக்கள் (அரிசிச் சோறு) போன்று ஏதோ ஒருவகைச் சோறு காணப்பட இதைச் செய்த கழியனைத்

திட்டுகின்றாள். சுவாமி (சிவபெருமான்) வந்து சாப்பிடும் நேரத்தில் இப்படிச் செஞ்சுட்டியே என்று பார்வதி திட்ட, சிவபெருமான் சாப்பிட வந்துவிடுகிறார். என்ன செய்வதென்று தெரியாமல் புழுப்போன்ற அரிசிச் சோற்றையே சிவனுக்குப் பார்வதி பரிமாறுகின்றாள். பார்வதியிடம் என்ன புழுவைப் பரிமாறுகின்றாய் என்று சிவன் கேட்க, இல்ல கழியன் செஞ்ச வெள்ளாமையில விளைஞ்சது என்று சொல்கின்றாள் பார்வதி. சிவன் கழியனையும் உடன் அழைத்து அரிசிச் சோற்றைச் சாப்பிடச் சொல்லி மிகவும் நன்றாக இருக்கிறதே! இதை எங்கே கண்டுபிடிச்ச என்று கேட்க, கழியன் தான் காடு கொண்டு வயலாக்கிய ஆயிரமாயிரம் நெல்வயல்களைக் காண சிவனை அழைத்துச் செல்கின்றான். பரமசிவன் காணவந்த போது வயல்களில் நெல் நன்றாக விளைந்து காணப்பட்டது. உடனே சிவன் இப்படிக் கடுமையான வேலையை நீ ஒருவனா செய்கின்றாய் என்று கேட்க எனக்கு வேலை செய்ய வேலையாள் கொடுத்தால் தான் இன்னமும் நன்றாக நெல் விளைச்சலை உண்டு பண்ணமுடியுமென்று சொல்கின்றான். உடனே சிவன் அப்படியா இப்ப இங்க ஐந்து தேவலோகக் கன்னிகள் குளிக்க வருவார்கள். அவர்களில் ஒருத்திமேல் நீ மறைந்திருந்து சேற்றை அள்ளிவீசு; யார்மேல் சேறுபடுகிறதோ அவள் உன்னுடன் தங்கி விடுவாள் என்று சொல்கிறார். கழியன் அதேபோன்று சேற்றை தேவலோகக் கன்னிகள் மீது எறிய சேறு இரு தேவலோகக் கன்னிகள் மீது பட்டுவிடுகின்றது. அவர்கள் இருவரும் இவனுடன் தங்கிவிடுகின்றனர்.

இரு பெண்களையும் அழைத்துக் கொண்டு கழியன் வீட்டுக்குவர, ஏன் ரெண்டு பெண்ணை அழைத்து வந்தாய் என்று கேட்க, ஒன்று வீட்டிற்கு இன்னொன்று காட்டிற்கு என்று கூறுகின்றான் கழியன். ஆமாம் நீங்கள் மூன்றுபேர் ஆகிவிட்டதால் இனி நீங்கள் பூலோகத்தில்தான் வாழமுடியும். நீங்கள் பூலோகம் சென்று வெள்ளாமையைப் பெருக்கி, நெல்லை உலகத்துக்குக் கொடுங்கள் என்று சிவன் சொல்லி, அவர்களுக்கு வேண்டிய பொருட்களையெல்லாம் ஒரு சிமிலியில் அடைத்து இதைப் பூலோகம் சென்று திறந்து பாருங்கள் என்று மூவரையும் வழியனுப்பி வைக்கின்றார். இப்படியாக பூலோகம் வந்தவர்கள்தான் தேவேந்திர குல வேளாளர்கள். இவர்கள் மூலமாகத்தான் நெல் உலகம் முழுவதும் பரவியது.

**தொகுப்பு: டாக்டர் சி. பரமேஸ்வரி**
*முற்காட்டியபடி, ப.5.*

# 3. பூலோகத்தில் தேவேந்திரன் கழியன்

மேலோகத்தில் தேவ கன்னியர் இருவரை மனைவியாகப் பெற்ற கழியன் பூலோகம் வந்து நெல் மற்றும் நன்செய் பயிர்களை உலகம் முழுவதும் பயிர்செய்து உலகைச் செழிக்கச் செய்கின்றான். அன்றொரு சமயம் கலியுகம் வருகின்றது. மக்கள் வறுமையால் வாடுகின்றனர். பூலோகம் வருகின்றனர் பார்வதியும் பரமசிவனும். தனது மகன் பூலோகத்தில் வேளாண்மை செய்து வாழ்வதைக் கண்டு மனம் மகிழ்ந்த பார்வதியும் பரமசிவனும் மேலோகம் சென்று விடுகின்றனர்.

பின்னொரு காலத்தில் உலகம் அழிகின்றது. கடுமையான மழை பெய்து உலகம் நீர்ப்பிரளயம் ஆகிறது. கழியனின் வழிவந்த மகனும் அவனது மனைவியும் ஒரு சுரைப்புரையில் (சுரைக்குடுக்கை) நுழைந்து தண்ணீரில் இறந்து விடாமல் உயிர் தப்புகின்றனர். இவர்களில் வழிவந்தவர்களே இன்றைய தேவேந்திர குல வேளாளர்கள் ஆவர்.

தகவலாளர்: மாரியாயி (60)<br>
தேவேந்திர குல வேளாளர்<br>
வத்தலக்குண்டு, திண்டுக்கல் மாவட்டம்.

## 4. நெல்லு வந்த கதை

உலகம் தோன்றியவுடன் கடவுள் இயற்கைப் பொருள்களைப் படைத்தார். பிறகு மக்களைப் படைத்தார். அவ்வாறு, மக்கள் தோன்றியவுடன் உணவுத் தேவை ஏற்படவே மக்களனைவரும் இந்திரனிடம் முறையிட்டனர். இந்திரன் மக்களனைவரையும் அவர்கள் திறமைகளைச் சோதிக்க பல போட்டிகளை நிகழ்த்தினார். முதல் போட்டியாக நெல் மணிகளை மயிரில் (முடியில்) கோர்க்க வேண்டும். பெண்களே போட்டியில் முதலிடம் பிடித்தனர். பல பெண்கள் குழுமியிருக்கையில் ஒரு பெண் தனது நீண்ட முடியை எடுத்து வரிசையாக நெல் மணிகளைக் கோர்க்கத் தொடங்கினாள்.

இப் போட்டியில் பல பெண்கள் தோல்வியைத் தழுவினர். ஒரு பெண் மட்டும் அவள் முடி எவ்வளவு நீளமோ அவ்வளவு நெல் மணிகளை வரிசையாகக் கோர்த்துவிட்டாள். அவளுக்கும் அவள் கணவனுக்கும் தங்க ஏர் கழப்பை கொடுத்து இரு எருதுகளைக் கொடுத்து நீங்கள் பூமியில் வேளாண் செய்து உலக மக்களுக்கு உணவூட்டும் தொழிலையும், சந்ததிகளையும் விருத்தி செய்து வாழ்வீர்களாக என ஆசீ கூறி அனுப்பினான். அவர்களே, தேவர்+இந்திரன்+அவர்கள் = தேவேந்திரர்கள் ஆனார்கள்.

***தகவலாளர்: ராமசாமி (71).***
தேவேந்திரகுல வேளாளர்,
புலியகுளம், கோவை.

# 5. வடிவேலுக் குடும்பன் தோற்றம்

ஒரு புராணக் கதைப்படி ஒரு காலத்தில் இந்திரனின் வியர்வை தண்ணீரில் வளர்ந்திருந்த ஒரு செடியில் விழுந்ததாகவும், அதிலிருந்து ஒரு குழந்தை தோன்றியதாகவும், அக் குழந்தையே பள்ளர்களுக்கு மூதாதை எனவும் கூறுகிறது. அம் மூதாதையின் முதல் குடும்பன், வடிவேலுக் குடும்புன் வடிவேலுக்கு இரு மனைவிகள். முதல் மனைவிக்கு நான்கு குழந்தைகள் எனவும் இந்த நான்கு குழந்தைகளும் முறையே தேவேந்திர குடும்பன், தொட்டிய நாட்டுக் குடும்பன், பாண்டிய நாட்டுக் குடும்பன், கடய நாட்டுக் குடும்பன் ஆகிய நால்வரும் மூதாதை ஆனார்கள் எனவும்.

இரண்டாம் மனைவிக்கு கொங்குப் பள்ளர், வேட்டைப் பள்ளர், கால்கட்டிப் பள்ளர், அத்திப் பள்ளர் ஆகிய நான்கு பள்ளர் பிரிவினர்க்கு மூதாதையாக நான்கு குழந்தைகள் பிறந்ததாகவும் புராணக்கதை கூறுகிறது.

**தொகுப்பு: டாக்டர் கே.ஆர். அனுமந்தன்**

தமிழாக்கம் : பேராசிரியர் பெ. தங்கராசு

ஆதாரம்: பாட்டாளி முழக்கம், ஜூலை, 1993.

## 6. குளத்துப் பள்ளன்

நெல் கோர்ப்பதில் வெற்றி பெற்ற இவர்கள் நீர்க்குள் சென்றும் வெற்றி கண்டனர். இந்திரன் தங்க மோதிரத்தை நீர்நிலை நிறைந்த பகுதியில் (குளத்தில்) போட்டு எடுத்துவரக் கூறினான். அனைத்து மக்களாலும் முடியவில்லை. பள்ளன் மூழ்கி மோதிரத்தை எடுத்துக் கொண்டு அதிலிருந்து பெரிய மீனையும் பிடித்துச் சாதனை படைத்தான். மோதிரத்தை அவனுக்குப் பரிசாகத் தந்து, மீனையும் கறி சமைத்து உண் என்று கூறி ஆசிர்வாதம் வழங்கினான்.

இதனால் குளத்துப்பள்ளன் மீன் திங்கும் பள்ளன் என்ற பெயர் உருவாயிற்று. மீனைத் தின்ற பள்ளன் மீன் சுவை அறிந்தான். குளத்தில் மோதிரம் எடுத்து வெற்றி பெற்றதால் மற்ற மக்கள் இவன் மீது பொறாமை கொண்டனர். ஒருநாள் உழுகப் போகையில் குளத்தில் மீன்கள் துள்ளி விளையாட அதைக் கண்ட மனிதன் கழப்பையைக் கரையில் வைத்துவிட்டு மீன் பிடிக்க பள்ளத்தில் இறங்கியதால் அவன்மேல் பொறாமை குணம் கொண்ட மற்ற மனிதன் பள்ளனது கழப்பையை எடுத்துக் கொண்டு ஓடி விட்டான். மேலே ஏறிவந்த பள்ளன் கழப்பையைக் காணாமல் கதறினான், புலம்பினான். கழப்பை கை மாறியது; பள்ளன் அவனுக்கு அடிமையாக்கப்பட்டான். இதனால் பள்ளத்தில் இறங்கி மீன் பிடித்ததால் பள்ளன் ஆனான்.

*தகவலாளர்: மணிகட்டி (65)*
தேவேந்திர குல வேளாளர்,
செம்பட்டி, திண்டுக்கல் மாவட்டம்

## 7. குடும்பன் தோற்றக்கதை

ஈஸ்வரனும் ஈஸ்வரியும் ஏழை மக்களுக்குப் படியளந்து கொண்டிருக்கும்போது உலக மக்கள் எல்லாம் ஈஸ்வரன் காலில் விழுந்து வரங் கேட்டனராம். காலில் விழுந்தவர்கள் எல்லாம் வரமாக செல்வம், பொன் எனக் கேட்டனர். குடும்பன் மட்டும் செந்நெல்லும் மண்வெட்டியும் வரமாகக் கேட்டானாம். கேட்டவுடன் ஈஸ்வரன் மிகவும் சந்தோசப்பட்டு இரண்டு வரத்தையும் கொடுக்கின்றார். அப்பொழுதிலிருந்து குடும்பமார்கள் நெல்லையும், நெல் விவசாயத்தையும் விடாமல் செய்து வருகின்றனர்.

பெயர்: பார்வதி
வயது 70
தேவேந்திர குல வேளாளர்,
ஊர்: செம்பட்டி, திண்டுக்கல் மாவட்டம்

## 8. தேவேந்திரன் கதை

தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் ஒரு குழந்தை பிறக்கின்றது. அக் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புகிறார்கள். ஆனால், அக்குழந்தை பள்ளியில் படிக்காமல் குழிதோண்டி, தண்ணீர் பாய்ச்சி, உழவு செய்து விளையாண்டுகிட்டு இருந்தானாம். இதைக் கேள்விப்பட்ட தேவேந்திரனும், இந்திராணியும் உனக்கு என்ன வேலை பிடிக்கும் என்று கேட்டனர். நான் உழவு வேலை செய்கிறேன் என்று சொல்லி, வேறு என்ன வேண்டும் என்று கேட்டனர். எனக்கு நாலு பெண்கள் வேலை செய்வதற்கு துணைக்கு வேணுமென்று கேட்டான். உடனே போடா மடப்பயலே என்று சொன்னாராம். அன்றிலிருந்து தேவேந்திரன் உழுகிறதும், நெல் விதைக்கிறதும், மடைவேலைப் பார்ப்பதும் இவனோட மக்களான தேவேந்திர மக்களுக்கு ஆகிப்போனதாம்.

பெயர் : மணிகட்டி
வயது : 65
ஊர் : செம்பட்டி, திண்டுக்கல் மாவட்டம்
தேவேந்திரகுல வேளாளர்.

## 9. நெல் வந்த கதை

பார்வதியும், பரமசிவனும் படியளந்துவிட்டு ஓய்வாக, தனியாக இருக்கும்போது ஆசைப்பட்டு கூடி விடுகின்றனர். அப்பொழுது உண்டான கருவை தாமரைத் தடாகத்தில், அல்லி வல்லைக் கொடியில் போடுகிறாள். அது குழந்தையாக வளர்ந்துவிட்டு இருக்கிறது.

அந்தக் குழந்தையின் அம்மா குளிக்கும் போதெல்லாம் அவ குளிக்கிற தண்ணியில வயல் மாறி பாத்திகட்டி தொளி கலக்கி விளையாண்டுகிட்டு இருந்துச்சாம். அப்பொழுது தெய்வலோகத்திலிருந்து வந்த அன்னப் பச்சிகள் அந்த வயலில், தன் வாயில் கொண்டு வந்த நெல்லைக் கசக்கிவிட்டுப் போய்விட்டதாம்.

உடனே அந்தக் குழந்தை அவங்க அம்மா பார்வதியைக் கூப்பிட்டு காமிச்சுச்சாம். உடனே பார்வதி இதுதா நெல்லுன்னு சொல்லி தன் மகனுக்குச் சொன்னாளாம்.

அதுக்குப் பின்னாடி தாயும், மகனும் பாத்திகட்டி நெல்லை விதைச்சாங்களாம். அந்த நெல்விதை ரொம்ப அதிகமா வளர்ந்து நாத்தாயிடுச்சாம். இதப் பாத்த தேவேந்திர, அம்மா! இத்தன நாத்துகள நா வயல்ல நடமுடியாது என்று சொன்னாளாம்!

உடனே பார்வதி தெய்வலோகக் கன்னிக உனக்கு வந்து நாத்து நட்டுத் தருவார்கள். அந்த நாத்து நடறப் பொண்ணுமேல நீ சேத்த அள்ளி போட்டேனா அவங்க தங்கிடுவாங்க. இந்த யோசன ஏஞ் சொல்லுறானா, மகனுக்கு கல்யாண பண்ணி வச்சரலானு நினைக்கிறா.

அதைப் போலவே அவனும் சேத்தை அள்ளி வீசுகிறான். அந்தச் சேறு இரண்டு பொண்ணுக மேல விழுந்து அந்த இரண்டு பொண்ணும் இங்கேயே தங்கிக் கொள்கிறார்கள். அவன் அந்தப் பெண்கள் மீது ஆசைப்பட்டு திருமணம் செய்து கொள்கிறான்.

**பெயர்: ரெங்கசாமி தேவேந்திர குல வேளாளர்**
*வயது : 70*
**ஊர்** : புலியகுளம், கோயம்புத்தூர்

# 10. இந்திரனின் மகன்

மேலோகத்தில் இந்திரனும், இந்திராணியும் தன் குழந்தையை விளையாட விட்டுவிட்டு வெத்தலை போட்டு அங்கனகுள்ள எச்சி துப்பி வச்சுட்டாங்களாம்! இதைப் பார்த்த தேவேந்திரன் எச்சிலிலே வயல் போன்று தொளி கலக்கி விவசாயம் செய்ய ஆரம்பித்து விட்டானாம். இப்படிக் கருவிலே விவசாயம் செய்யக் கற்றுக் கொண்டதால், அந்த இந்திர மகனுக்கு தேவேந்திர குல வேளாளன்னு பட்டம் வந்துச்சாமா! அப்புறம், மொதமொதல்ல பூமியிலே விதை கொண்டு வந்து விதைச்சதுனால இந்த மண்ணுக்குச் சொந்தக்காரன் ஆவான்.

**பெயர்: கக்கன்**
தேவேந்திர குல வேளாளர்
*வயது : 66*
*ஊர்:* K. குறும்பட்டி, திண்டுக்கல் மாவட்டம்

# 11. பள்ளர் தோற்றம்

ஒரு காலத்தில் கடவுளுக்கு அரசனான தேவேந்திரன் நீரில் வளர்ந்திருந்த செடி ஒன்றில் விழுந்து விட்டதாகவும் உடனே அதிலிருந்து ஒரு குழந்தை உற்பத்தியானதாகவும், அந்தக் குழந்தையே பள்ளர்களுக்கு ஆதி மூதாதை ஆகும்.

**ஆதாரம்:**

*நூற்பெயர்: பள்ளர் யார்? (1975)*
*பி. தங்கராஜ்.*

## 6. தேவேந்திரர் மங்கல வாழ்த்துப் பாடல்

### விநாயகர் துதி

முந்தி முந்தி விநாயகரே
முருகர் சரஸ்வதியே
கந்தருக்கு முன் பிறந்த
கர்ச்சை கணபதியே
நாங்கால மேதொழுதால்
அல்லல் வினைகளெல்லாம்
அகலுமேல் சொல்லரிவேன்
அது தும்பிக்கை யானை
தொழுதால் வினை தீரும்
நம்பிக்கை கொண்டோம்
விநாயகர் நமக்கே!

### சரஸ்வதி துதி

அன்னை சரஸ்வதியே
அகிலாண்ட கோடி நீயே
கோமள சரஸ்வதியே
குடியிருந்து என் நாவில்
தாமரைப் பொய்கையிலே
தனியாய் உதித்தவளே
மங்கலம் பாடுவதற்கு
வரந் தரும் தேவர்களே
கலியாணச் சிறப்பை
கவனமுடன் கேட்பீர்கள்

### மாயவர் துதி

பல்லாயிரங் கோடி
படையெடுத்த பிரம்மதேவா
அண்ட வனங்களை
ஆதியேன் என்று
அளந்தவனே ஜோதி ரெகுராமா
துண்டித்தாய் இரண்டானை
ஆறாம் அவதாரம்
அரிராமாய் நீ பிறந்து
அகலிக சாபத்தை
அன்று விடுத்தாயோ
விசுவா மித்திரராய்
வேள்வியைக் காத்தாயோ
இராமராய் நீ பிறந்து
இராவணனை சங்கரித்து

வாலியைக் கொன்றவனே ரகுராமா
கலியாண மங்களத்தில்
வந்து வரம் அருளும்
மாதவனே கோவிந்தா

## பள்ளர் வாசகம்

தேவாதி தேவர்களான
தேவேந்திரச் சாழியரான
விருதுகளாவது
வைகையில் உதித்து
வர்ணம் பொழிந்து
ஈஸ்வரர் தேடி
இருளில் நடந்து
கூவிய சத்தம்
குமரனை நோக்கி
வாரி எடுத்து வள்ளலை
வலது மார்பில் அணைத்தவரான
சேத்துக்கால் செல்வரான
செந்நெல்முடி காவலரான
கொத்துக்கு முத்து கொட்டி
அளந்தவரான
முத்தளக்கும் கையாதிபரனே
மூன்று கை குடையாதியாதி பரனே
பள்ளா பள்ளா என்றாலும்
பள்ளம் பார்த்து
பயிர் செய்வான்
பள்ளன் இல்லாத
ஊர் மெத்தவும்
செல்வம் இல்லை
பள்ளனும் பள்ளியும்
காலினால் உழப்பாய
செக்கெல்லை தேவர்கள்
பாலால் அமிர்தம் மொழிவாராம்
கொட்டுடன் கோலமேழி கலப்பை
நெட்டுடன் பரம்பு சங்கிலி
நேரான கால் கயிறுடன்
மொட்டை வெள்ளானை ஏறி
தெய்வ குலத்தில் தேவரீடத்தில்
இஞ்சி எலுமிச்சை இனிய பிலாவும்
வெள்ளரிக் கொடியும் வேனமாமரமும்
சந்தனமும் கமுகும் சாதிலிங்கமும்
தென்னை பொன் உலக்கோலும்
பூத்தாமரையும் 4448 நெல்விதையும்

யானைவால் மயிரினால்
மூக்கணாங்கயிர் கொண்டு
கோர்த்து நூலேணி வழியாக
பூலோகம் இறங்கி
ஓடையைக் குறுக்காட்டி
ஏரிகள் போட்டு
வாகனப் பூமியை வயல்களாகச்
சேர்த்தி உழுது விதைத்து
வேளாண்மை செய்து
அன்ன தானம்; சொன்னதானம்;
வஸ்திர தானம்; கோதானம்;
பூதானம் என்று
சொல்லப்பட்ட 32 தானதர்மம்
செய்யப்பட்ட வருமான நம்
தேவர்களுக் கெல்லாம் இரண்டு
பொண்டாட்டி என்றும்
தேவேந்திரரிடத்தில்
நடமாடும் பெண்களை
நாத்துநட அழைத்து
சேத்தை அள்ளி மேல போட்டு
தேவர்களுக்கு ஆகாது என்று
சேர்த்திக் கொண்டருமான
இனி மண்வெட்டி கொண்டு
மலை தகர்த்தும் கண்டரானாலும்
மகா வெற்றியினாலும்
மலை கலங்காதவராயினும்
மாடக்குளம் அவனியாபுரத்தில்
வள்ளக் கொடியில் ஈஸ்வரன்
வேர்வைத் துளியில்
துள்ளிப் பிறந்தவரான
இனி வெள்ளானை வெள்ளைக் குடை
விசிறி வெஞ்சாமரை
கொண்டவருமான இனி
மங்களம் பாடுவதற்கு
வரந் தரும் தேவர்களே
கல்யாணச் சிறப்பை
கவனமுடன் கேட்பீர்கள்

## பெண் கேட்கப் போவது

சிறப்புடன்
பெரியோர் தமை அழைத்து வந்து
பெண்களும் தான் கேட்டு
கொடுக்கிறோம் என்று சொல்லி

குவளயத்தில் உள்ளவர்கள்
நாள்களும் தான் பார்த்து
நட்சத்திரம் தான் அறிந்து
வைப்பார்கள் முஹூர்த்தம்
மாது சிரோண் மணிக்கு
கல்யாணம் கல்யாணம்
காரிழக்கே கல்யாணம்
என்னக்குக் கல்யாணம்
இளங்கொடிக்குக் கல்யாணம்
சித்திரை மாதத்திலே
சீர்பத்தாம் தேதியிலே
செல்வ கலியாணம்
வைகாசி மாதம்
வாழும் கலியாணம்
ஆனி திருமாதம்
அழகுக் கலியாணம்
கல்யாணமென்று சொல்லி
கடலேறி பாக்குமிட்டார்
முஹூர்த்தம் நடக்குதின்னு
முடிமன்னர்க்கு பாக்குமிட்டார்
பாக்குடன் வெற்றிலை
பரியப்பணம் செலுத்தின
பிறப்பாடு தேதி தவறாமல்
ஐம்பத்தாறு அரசர்க்கும்
அருமையாய் சீட்டெழுதி
பந்தல் அலங்கரித்து
பந்தக்கால் செப்பனிட்டு
முத்தாலே கால் நிறுத்தி
முக்காதம் பந்தலிட்டார்
மாங்கொத்துத் தோரணமும்
வாழைமரம் தான் பிளந்து
வாசலெல்லாம் பந்தலிட்டார்
மணவறைக்கு முன்பாக
தென்னைமரம் பிளந்து
தெருவெல்லாம் பந்தலிட்டார்
மணமுஹூர்த்தம் கால்காட்டி
நிரகாழிப் படிதனிலே
நேர்த்தியுடன் இருக்கவைத்து

போடுங்கள் குலவை
பொண்ணுக்கும் மாப்பிளைக்கும் - இனி
பெண் வீட்டில் தான் இருக்கும்
பெருமை அதை சொல்லுகிறேன்
என்ன சீதனங்கள்
பெற்றாள் இளங்கொடியாள்
பட்டி நிறைஞ்சிருக்கும்
பால்மாடு சீதனங்கள்
ஏரி நிறைஞ்சிருக்கும்
எருமை மாடு சீதனங்கள்
குட்டை நிறைஞ்சிருக்கும்
குறியாடு சீதனங்கள்
ஒக்காந்து மோர்கடையும்
சாய்மனையும் பொன்னாலே
இழுத்து மோர் கடையும்
இசிக் கயிறும் பொன்னாலே
பிள்ளைங்க விளையாட
பொம்மைகளும் பொன்னாலே
இத்தனையும் பெற்றாளாம்
எங்கள் இளங்கொடியாள்
தேங்காய் பழமுடன்
சிறப்புடன் கருப்பட்டியும்
வெற்றிலை மேல் பாக்கும்
வெகுமான சீர் கொண்டு - இனி
மாப்பிளையை சிங்காரித்து
சிக்கியும் தான் கழித்து
விநாயகன் கோவில் வந்து
தேங்காயும் தான் உடைத்து
தெரு வீதி கோலம் வந்து
பெண் வீட்டு மணவறையில்
மாமன் வலதுபுறம் வீற்றிருப்பார் - இனி
பெண்ணை அலங்கரித்து
பெருஞ்சிக்கி தான் கழித்து
தூக்கி வந்து பெண்ணை
மாமன் இடதுபுறம்
தான் வைப்பார்
மடி அரிசி கொண்டு வந்து
மூவர் மங்கையர்கள் தான் போட

இப்படித்தான் இருக்க
எழுந்துமே குடும்பன் அவர்
அம்மி வளமான
அரசாணி முன்பாக
பேக் கரும்பு நாட்டிருக்கும்
பெருங்கரகம் தன் நடுவில்
அரசிலையும் பால் எடுத்து
அன்புடனே நுணங்கு செய்து
தேங்காய்தனில் இருக்கும்
திருமாங்கல்யம் தான் அவிழ்த்து
கற்பூர தீபம் கவனமுடன் செலுத்தி
மாப்பிள்ளை கையில்
வகையாகத்தான் கொடுத்து
சுக்களா தேவிமகன்
சூரியனை தான் நினைத்து
கன்னி திருக்கழுத்தில்
கட்டுங்கள் மாங்கல்யம்
மாது திருக்கழுத்தில்
கட்டுங்கள் மாங்கல்யம்
பிரமன் முடி மூன்றுமுடி
போடுங்கள் பிற்பாடு
கட்டின மாங்கல்யம்
காலம் எல்லாம் வாழ்ந்திருக்க
ஈஸ்வரன் தேவி பார்வதி
போல் தான் வாழ்க!
இராமருடன் தேவி சீதை
போல்தான் வாழ்க!
அரிச்சந்திரன் மனைவி சந்திரமதி
போல் வாழ்க!
வாழி வாழி என்று
வரம் அளித்தார் ஈஸ்வரனார்
போடுங்கள் குலவை
பெண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும்

**பாடியவர் : சா. பார்த்திபன்**
**வயது :** 20
**ஊர் :** தளவாய்ப் பட்டணம்
தாராபுரம் வட்டம், ஈரோடு மாவட்டம்.



1. உருண்டைக்கல் வடிவில் கரூர் பள்ளபாளையத்தில் வழிபடப்படும் மல்லாண்டைசாமி



3. கரூர் மவாட்டம் குளித்தலையில் வழிபடப்படும் மல்லாண்டை விநாயகர்



4. குளித்தலையில் வழிபடப்படும்
உருண்டைக்கல் வடிவிலான மல்லாண்டை



5. தேவேந்திர மடத்தில் நெல் நாற்றுப் பாவுதல் செய்துள்ள காட்சி



6. பேரூர் பட்டீஸ்வரர் கோயிலின் முன் மள்ளர் குல உழத்தியர்கள் உழத்திப்பாட்டு பாடும் காட்சி



7. பேரூர் பட்டீஸ்வரர் கோயிலின் முன்பு மள்ளர்குலப் பட்டக்காரர் ஏருடன் வரும் காட்சி



8. மள்ளர்குல உழவனுக்கு கோவில் நிர்வாகத்தார் தலையில் பட்டம் கட்டி வரவேற்கும் காட்சி



௯. மள்ளர்குல உழவன் சிவனாக மாறி தோற்றம் தரும் காட்சி



10. மள்ளர்குலப் பட்டக்காரர்களுக்கு கோயில் நிர்வாகத்தார் பட்டம் கட்டி மரியாதை செய்தல்



11. பள்ளனாக மாறிய சிவன் ஏர்க்கலப்பையுடன் பின்வர கோயில் யானை
(வெள்ளையானை) பின் தொடர மள்ளர்குல உழவர்கள் நாற்று நடவு மண்டபம் வரும் காட்சி



12. பள்ளனாக மாறிய சிவன் கழனியில் ஏர் உழும் காட்சி



13. மள்ளர்குலப் பட்டக்காரர் நாற்று நடும் காட்சி



14. பட்டீஸ்வரர் கோயிலுக்குள் சிவனும் பார்வதியும்
பள்ளர்- பள்ளத்தியாக மாறி அமர்ந்திருக்கும் திருக்கோலம்

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | 40.00 |
| பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | 40.00 |
| தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகம்-புறம்) - ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| மக்கள் நேயச் சுயமரியாதை | 30.00 |
| ஏ.என். சிவராமனின் பத்திரிகை உலகம் | 30.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 3 | 150.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 2 | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 1 | 130.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல் - தொழில்நுட்பம் II | 100.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள் - அறிவியல் - தொழில்நுட்பம் I | 90.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| தமிழர் கண்ட தாவரவியல் | 40.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் - தொகுதி 1 | 60.00 |
| சைவ சித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | 65.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| தமிழ் உரைநடையும் கிறித்தவர் பங்களிப்பும் | 20.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கியத்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | 25.00 |
| தமிழ் இதழ்கள் - விடுதலைக்குப் பின் | 40.00 |

**564 பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே..... 75.00**